


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

---

**Saturday, 1st November 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Thevaram Choultry, Theni*

* 761 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா தேனியிலுள்ள தேவாரம் சத்திரத்தின் மூல கர்த்தாக்கள் அந்த சத்திரம் சரியாக நடத்தப்படாவிட்டால் சர்க்காரிடம் ஒப்படைத்துவிட வேண்டுமென்று எழுதி வைத்திருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

(ஆ) தற்போது அந்த சத்திரத்தின் சொத்துக்கள் துர்வினியோகம் செய்யப்படுவதைத் தடுக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று எச்.ஆர்.இ. போர்டு கமிஷனருக்கு மதுரை ஜில்லா போர்டார் எழுதியது என்ன வாயிற்று ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) No report was received by the Commissioner, Hindu Religious and Charitable Endowments, from the District Board, Madurai. However, the matter is under investigation by the authorities of the Hindu Religious and Charitable Endowments Department.

SRI M. JAGANNATHAN : For how long the matter has been under investigation after complaints were received from that particular area?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : After specific complaints were received by the Commissioner, he has asked the Deputy Commissioner to personally look into the matter and he is examining it.

*Cardamom Board*

* 762 *Q.*—SRI N. R. THIAGARAJAN : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal before the State Government to recommend to the Central Government to constitute an All-India Cardamom Board on the lines of the All-India Tea and Coffee Boards?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The answer is in the negative.

*Tanneries*

'* 763 Q.—Sri V. K. KOTHANDARAMAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1951-ம் வருஷம் முதல் 1957-ம் வருஷம் வரை நமது ராஜ்யத்தில் தோல் பதனிடும் தொழிற்சாலைகள் ஜில்லாவாரியாக எந்தெந்த ஊர்களில் எத்தனை இருந்தன ?.

(ஆ) அவைகளில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்கள் எவ்வளவு பேர் ?

(இ) மேற்படி தொழிற்சாலைகளில் 1951-ம் வருஷம் முதல் 1957-ம் வருஷம் வரை எத்தனை மூடப்பட்டன ?

(ஈ) மூடியதால் வேலையில்லாமல் பாதிக்கப்பட்டவர்கள் எத்தனை பேர் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*), (*b*), (*c*) & (*d*) A statement[a] showing the number of tanneries which were functioning in this State (district-war) during 1951–57, the number of tanners employed in those tanneries, the number of tanneries closed and the number of tanners affected on account of the closure during the period is placed on the table of the House.

Sri V. K. KOTHANDARAMAN : நமது இந்தியாவில் இருக்கக்கூடிய டானரி தொழிற்சாலைகளில் 90 சத விகித தொழிற்சாலைகள் நமது ராஜ்யத்தில் இருக்கின்றன. அதில் 100-க்கு 100 மக்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். 1956-ம் வருஷத்தில் சுமார் 6,438 தொழிலாளர்களும், 1957-ம் வருஷத்தில் சுமார் 1,217 தொழிலாளர்களும் ஆக ஏழாயிரத்துக்கும் அதிகமான தொழிலாளர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்த தொழிற்சாலைகள் மூடப்படுவதனால் இந்த ஏழாயிரத்து சொச்சம் தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இப்படி பாதிக்கப்பட்டவர்களுக்கு வேலை தேடித்தர சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இது ஒரு பொதுவான கேள்வி ஆனால் இந்தத் தொழிலைப் பொறுத்தமட்டில் அயல் நாட்டிற்கு ஏற்றுமதி செய்தால்தான் இது சரியாக நடைபெறும். ஆனால் வர்த்தகத்தில் தயக்கம் இருக்கிறது. ஸ்டாக் இப்பொழுது நின்றுபோயிருக்கிறது. யுனைடெட் கிங்டம், அமெரிக்கா முதலிய இடங்களில் விலை ஒரு நிதானத்தில் இல்லை. இம்மாதிரி காரணங்களால் இது பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இதை எந்த விதத்தில் சீர்படுத்தவேண்டும் என்பதில் அவ்வப்போது கவனம் செலுத்தப்பட்டுவருகிறது.

Sri S. LAZAR : இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கக்கூடிய விவரங்களிலிருந்து இந்த வியாபாரம் நாளுக்கு நாள் குறைவதாகத் தெரிகிறது என்று கனம் மந்திரி அவர்கள் சொன்னார். ஆகையால் இந்தத் தொழில் பாதிக்காமலிருப்பதற்கும், தொழிலாளர்களுக்கு வேலை கிடைப்பதற்கும் இந்த அரசாங்கம் ஏதாவது செய்ய முடியுமா ? அதைப்பற்றி பரிசீலனை செய்வார்களா ? இந்தத் தொழில் நல்ல முறையில் இயங்குவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுக்க முடியுமா என்று அறிய விரும்புகிறேன் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : எவ்வாறு பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதைப்பற்றியும், அது எந்த அளவில் ஏற்றுமதியைப் பொறுத்து இருக்கிறது என்பதையும் யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்குக் குறிப்பாக என்ன செய்ய முடியும் என்பதைப்பற்றி யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. இதை எப்படி சீர்படுத்த வேண்டும் என்பதைப்பற்றிய தகவல் இப்பொழுது என்னிடம் இல்லை.

---

[a] Printed as Appendix I on page 362 infra.

1st November 1958]

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that most of these tanneries have been closed down (1) because of loss and (2) because of non-availability of raw hides and skins in India? If so, will the Government make it a policy to give liberal loans to the tanners and also advise the Government of India for the liberal imports of raw hides and skins so that our tanners may get adequate supplies of these vital raw materials?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have given the particulars that are available with me and explained the circumstances under which the trade is affected. Regarding the grant of loans, the question of granting loans to industries like this is being looked into.

SRI M. JAGANNATHAN : What action the Government propose to take to give alternative employment to all the employees who are retrenched on account of the closure of these tanneries?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I cannot specifically state what alternative employment would be given to the employees of this industry. That is the case with every industry wherever people are thrown out of employment. Other avenues are being explored.

SRI V. K. KOTHANDARAMAN : அந்நிய செலாவணி தேடிதரக்கூடிய முக்கியமான ஒரு தொழிலை பாதுகாப்பதற்கு வேண்டி நமது சர்க்கார் மத்திய சர்க்காரை வற்புறுத்தி அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ள வற்புறுத்துவார்களா என்பதை அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : **If the hon. Member could specify in what respects we could seek the support of the Central Government, I shall look into the matter.**

SRI N. MARUDACHALAM : கோவையில் எவ்வளவு தொழிற் சாலைகள் இதில் மூடப்பட்டிருக்கின்றன ? அப்படிப்பட்ட தொழிற்சாலை களில் எத்தனை தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் ? அப்படி வேலையில்லாத தொழிலாளர்களிடமிருந்து அரசாங்கத்திற்கு எத்தனை மனுக்கள் வேலை கொடுக்கும்படி வந்தன ? அதன் பேரில் அரசாங்கம் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன என்பதை அறிய விரும்புகிறேன்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றிய தகவல் என்னிடம் இப்பொழுது இல்லை. தனிக் கேள்வி போட்டால் அதற்கு பதில் சொல்லுகிறேன்.

MR. SPEAKER : கேள்விகள் 764, 765 கனம் அமைச்சர் இல்லாததால் பிறகு எடுத்துக்கொள்ளப்படும்.

*Scholarship to Harijan and Backward class students*

* 766 Q.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

ஹரிஜன நல இலாக்காவால் ஹரிஜன மாணவர்களுக்கும் பிற்பட்ட வகுப்பினருக்கும் கடந்த 1950-ம் வருடத்திலும் அதற்கு முன்பும் கொடுக்கப்பட்ட உபகாரச் சம்பளம் எத்தனை தடவை எவ்வெப்போது கொடுக்கப்பட்டது ?

[1st November 1958

THE HON. SRI P. KAKKAN : The non-residential scholarship amount was disbursed in two instalments, one in July and the other in January following. The residential scholarship was disbursed in three equal instalments in July, October and January.

SRI M. C. MUTHUKUMARASWAMY : இந்த உபகாரச் சம்பளம் கிடைப்பதில் கால தாமதம் ஏற்படுகிற காரணத்தால், அதாவது மாணவர்கள் சேர்ந்த பிறகு அது தங்களுக்குக் கிடைக்குமா அல்லது கிடைக்காதா என்ற சந்தேகம் அவர்களுக்கு இருக்கிறது. அப்படிப்பட்ட சந்தேகம் அந்த வருஷம் முடியும் வரையில் கூட இருக்கிறது. அப்படி இல்லாமல் அதை உடனடியாக முதல் கால் வருஷத்திலேயே மாணவர்களுக்கு உதவி சம்பளத்தைக் கொடுத்து உதவி அளிப்பதற்கு அரசாங்கம் ஏதாவது தனி உத்திரவு பிறப்பிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI P. KAKKAN : மாணவர்கள் சேர்ந்தவுடனேயே கொடுப்பது என்பது முடியாது. ஹெட்மாஸ்டரின் ரிப்போர்ட்டு வந்த பிறகும் மற்ற விவரங்கள் தெரிந்த பிறகும் உடனடியாக ஸ்காலர்ஷிப்புகளைக் கொடுப்பதற்கு சொல்லப்பட்டிருக்கிறது. ரிப்போர்ட் வந்ததன்மேல் தான் கொடுக்கவும் முடியும்.

SRI K. B. S. MANI : நல்ல முறையில் சர்க்கார் ஸ்காலர்ஷிப்கள் கொடுத்து வருகிறார்கள். இப்படிப்பட்ட ஒரு உதவி ஹரிஜன மக்களுக்குச் செய்து இருந்தும் மாணவர்கள் காலேஜுக்கு வரும்போது கிட்டத்தட்ட அவர்கள் 700 ரூபாய் வரையில் செலவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. அப்படி 700 ரூபாய் சொந்தச் செலவு செய்தால்தான் அவர்கள் காலேஜில் சேர்ந்து படிக்கமுடியும். அந்தப் பணத்தை அவர்கள் முதலில் செலவு செய்து விட்டு பிற்பட்டு அதை சர்க்காரிடமிருந்து வாங்கிக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. முதலில் அவ்வளவு செலவு செய்ய முடியாத காரணத்தால் பல மாணவர்கள் காலேஜில் படிக்க முடியாத நிலைமை ஏற்பட்டு விடுகிறது. ஆதலால் அவர்களுக்கு முன் கூட்டியே அந்தப் பணத்தைக் கொடுக்க சர்க்கார் முயற்சிக்குமா ? அதைப்பற்றி இந்த வருஷத்திலேயே பரிசீலனை செய்து முடிவு செய்ய முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : ஒவ்வொரு காலேஜினுடைய பிரின்சிபாலுக்கும் ஹரிஜன மாணவர்கள் ஹாஸ்டல்களில் சேர்ந்தவுடன் அவர்களிடமிருந்து பணம் வாங்கக் கூடாது என்று சொல்லியிருந்தும் சில பிரின்சிபால்கள் வாங்கிக்கொண்டு வருவதாக தெரிய வருகிறது. அப்படிச் செய்யக்கூடாது என்றும் சொல்லி இருக்கிறோம். அப்படிப்பட்ட ஒரு அறிக்கையும் இப்பொழுது அவர்களுக்கு விடப்பட்டிருக்கிறது. ஒரு அட் ஹாக் கமிட்டியை அமைத்து 200 ரூபாய் வரையில் மாணவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்ற ஏற்பாடும் செய்து கொண்டிருக்கிறோம்.

SRI M. K. SOMASUNDARAM : ஒரு அட் ஹாக் கமிட்டியை அமைக்கப் போகிறோம் என்று கனம் மந்திரி அவர்கள் சொன்னார். அப்படி அமைத்து 50 சத விகிதம் கொடுக்கப்படும் என்றும் சொல்லுகிறார். அந்த அட் ஹாக் கமிட்டி, காலேஜின் முதல் கால் வருஷத்திற்குள்ளாகவே அந்தப் பணத்தைக் கொடுக்கும்படி சிபாரிசு செய்து அதன்படி கொடுக்க அரசாங்கம் தனி உத்தரவு பிறப்பிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்?

THE HON. SRI P. KAKKAN : முதல் கால் வருஷத்திற்குள்ளாகவே கொடுக்கவேண்டும் என்ற உத்தரவு போட முடியாது. ஆனால் கனம் அங்கத்தினர்கள் சொல்லக்கூடிய யோசனைகளை பரிசீலனை செய்து பார்க்க வேண்டும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : நான் கேட்பது உடனடியாக சேர்ந்தவுடனேயே கொடுக்க வேண்டும் என்பது அல்ல. கொடுப்பதில் கால தாமதம் ஏற்படுவதை தடுக்கவேண்டும் என்பதுதான். எல்லா விவரங்களையும் தெரிந்து கொண்ட பிறகு எவ்வளவு சீக்கிரமாகக் கொடுக்க வேண்டுமோ அவ்வளவு சீக்கிரமாகக் கொடுக்க வேண்டும் என்பதுதான்.

1st November 1958]

அப்பொழுதுதான் மாணவர்களிடத்தில் நம்பிக்கை வரும் அந்த அளவில் குறுகிய காலத்தில் பணத்தைக் கொடுக்க நடவடிக்கை எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI P. KAKKAN : எவ்வளவு தூரம் வெகு சீக்கிரத்தில் கொடுக்க முடியுமோ அவ்வளவு வெகு சீக்கிரமாக கொடுக்க நானே அதிகம் கவனம் எடுத்துக்கொண்டு வருகிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த ஸ்காலர்ஷிப் கொடுக்கும் போது காலதாமதம் ஆகிற காரணம், மத்திய சர்க்காரிலிருந்து பணத்தை "அல்லாட்" செய்து கொடுக்க கால தாமதம் ஆகிறது என்பதுதானா ? அப்படி மத்திய சர்க்காரிலிருந்து வரக்கூடிய பணம் ஒவ்வொரு வருஷத்திலும் எந்த எந்த மாதத்தில் வருகிறது என்பதை அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : மார்க்குகளை பார்த்த பிறகு மத்திய சர்க்கார் பணத்தைக் கொடுக்க முடிவு செய்கிறார்கள். அதனால் தான் ஸ்காலர்ஷிப் கொடுக்க காலதாமதம் ஆகிறது. எந்த மாதத்தில் வருகிறது என்ற தகவல் இப்பொழுது என்னிடத்தில் இல்லை. 9-10 a.m.

SRI J. MATHA GOWDER : பணத்திற்கு விண்ணப்பித்துக்கொள்ளும் பாரம்களில் சிறு தவறுகள் இருந்தாலும் அதை வருஷக் கடைசியில் சொல்லுவதால் அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கிடைக்காமல் போய்விடுகிறது. வருஷக் கடைசியில் இப்படிப்பட்ட சிறு தவறுகளைக் காட்டி மனு தள்ளுபடி செய்யப்பட்டு விட்டது என்று சொல்லுகிறார்கள். அப்படி தள்ளுபடி செய்யாமல் சிறு தவறுகள் இருந்தாலும் அப்படி தள்ளுபடி செய்யக் கூடாது என்று சொல்வதோடு அப்படிப்பட்ட சிறு தவறுகளை விரைவிலேயே சொல்லி அதை திருத்திக்கொடுக்க ஏற்பாடு செய்ய முடியுமா ? அப்படி திருத்தி அமைத்துக்கொண்டு பணம் கொடுக்க அரசாங்கம் உத்தரவு பிறப்பிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI P. KAKKAN : குறைகள் இருந்தால் அதை கவனிக்க வேண்டியதுதான். சிறு தவறுகள் இருந்தால் அதை நிவர்த்திக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டியதுதான். ஆனால் குறைகள் இருந்தால் கொடுக்க முடியாது.

*Supply of Electricity from Neiveli to Villupuram*

* 767 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(a) the action taken so far to complete the Neyveli-Villupuram 110 KV line in all respects ; and

(b) the probable date by which that line will be put in service?

THE HON. SRI V. RAMAIAH : (a) The line is complete in all respects except for the portion inside the Neyveli Township area. The construction of this short reach is also under progress and is expected to be completed soon.

(b) In November 1958.

SRI M. JAGANNATHAN : When did the work on this line, viz., 110 K.V. line, actually commence and why was there so much inordinate delay in the construction of the line?

THE HON. SRI V. RAMAIAH : I do not think there is any inordinate delay in the construction of this particular line. The construction of this line had to be undertaken only after and

assurance, that the line would be useful for the Neyveli work as such, was given. To take a decision on the question took some time, and immediately after the assurance that this line would not be a waste because of the failure, if any, of the Project as such, was given, the work was taken up. We have speeded up the work, as normally we do in the Electricity Department.

### *State Aid to Industries*

* 768 *Q.*—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the amount allotted for the Ramanathapuram district for disbursement under the State Aid to Industries Act for the years 1956–57 and 1957–58;

(*b*) the number of applications received during the said years under the various categories of industries; and

(*c*) the number of applications rejected with the reasons therefor?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) District-wise allotment of funds is made only for sanction of loans of Rs. 2,000 (rupees two thousand) and less in an individual case. Loans exceeding Rs. 2,000 (rupees two thousand) are sanctioned on a State-wide basis and no separate allotments are made to the districts. Out of Rs. 11,28,000 (rupees eleven lakhs and twenty-eight thousand) disbursed in 1956–57, Rs. 64,800 (rupees sixty-four thousand and eight hundred) were disbursed in this district. Out of Rs. 24,89,000 (rupees twenty-four lakhs and eighty nine thousand) in 1957–58, Rs. 1,71,500 (rupees one lakh seventy-one thousand and five hundred) were disbursed in this district.

(*b*) & (*c*) A statement [a] is placed on the table of the House.

### *Tamil Nad N.G.O.'s Union*

* 769 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the reason for not registering Tamil Nad Non-Gazetted Government Officers' Union?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A copy[b] of the proceedings of the Registrar of Trade Unions rejecting the application for registration of the Tamil Nad Non-Gazetted Government Officers' Union is placed on the table of the House.

**SRI V. K. KOTHANDARAMAN** : என்.ஜி.ஓ. சங்கத்தில் நிர்வாகஸ்தர்களாக இருக்கக்கூடியவர்களுக்கு ப்ரமோஷன் கொடுப்பதில்லை என்று சொல்லப்படுவது உண்மையா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : அது வேறு கேள்வி. தனியாக கேள்வி கேட்டால் சம்பந்தப்பட்ட அமைச்சர் அவர்கள் பதில் அளிப்பார்கள்

---

[a] Printed as Appendix II on pages 363-366 infra.
[b] Printed as Appendix III on page 367 infra.

1st November 1958]

SRI S. LAZAR : ட்ரேட் யூனியன் சட்டத்தின் கீழ் எந்த நோக்கத்தோடு ரிஜிஸ்தர் செய்துகொள்ளவேண்டுமென்று அவர்கள் கேட்டார்களோ, அதே கோரிக்கையை சொஸைட்டி ரிஜிஸ்ட்ரேஷன் சட்டத்தின்கீழ் பதிவு செய்துகொள்வதினால் அவர்களுக்குக் கிடைக்குமா, கிடைக்காதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது அவரவர்கள் பரிசீலனை செய்து முடிவு செய்து கொள்ளவேண்டிய விஷயம்.

SRI K. VINAYAKAM : Did this Union make a request in their application for registration as a trade union? Or was their request for registration under the Societies Registration Act?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The application was for registration as a trade union.

SRI S. M. ANNAMALAI : இங்கே கொடுத்திருக்கும் பதிலில், "இந்தியன் ட்ரேட் யூனியன்கள் சட்டத்தில், செக்ஷன் 2 (ஜி)படி, அவர்கள் ஒரு தொழிலிலேயோ, ஒரு தொழிற்சாலையிலோ வேலை செய்யவில்லை, ஆகையால் ரிஜிஸ்டர் செய்யவில்லை" என்று இருக்கிறது. அவர்கள் தொழிலாளிகள் அல்ல என்று சர்க்கார் கருதுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தச் சட்டத்திலே "தொழிலாளி" என்பதற்கு ஒரு டெபனிஷன் இருக்கிறது. அதன்படிதான் இந்த மனு முடிவு செய்யப்பட்டது.

*Road to Ambil Padugai Colony*

* 771 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the Harijans residing at Ambil Padugai colony in Lalgudi firka, Lalgudi taluk, Tiruchirappalli district, have asked the Harijan Welfare Officer, Tiruchirappalli, as early as 1954 for a connecting road to their village from the Ambil Main Road;

(*b*) whether there is a proposal to lay this road;

(*c*) whether the Harijan Welfare Officer, Tiruchirappalli, has taken any steps on the representation; and

(*d*) when the work will be taken up and completed?

THE HON. SRI P. KAKKAN : (*a*) In March 1955 a petition was received by the Collector of Tiruchirappalli requesting provision of pathway from the Harijan colony at Ambil Padugai to the Lalgudi Ambil Road.

(*b*) Yes, Sir.

(*c*) The District Welfare Officer has directed the Special Deputy Tahsildar, Musiri, to initiate land acquisition proceedings in this case.

(*d*) The work will be completed before the end of the current financial year.

*Pumpsets*

* 772 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1946-ல் சென்னை ராஜ்யத்தின் தற்போதைய ஜில்லாக்களில் எத்தனை விவசாய பம்பு செட்டுகளுக்கு மின்சரரம் சப்ளை செய்யப் பட்டிருந்தது ?

(ஆ) தற்போது எத்தனை பம்ப் செட்டுகளுக்கு மின்சாரம் சப்ளை செய்யப்படுகிறது ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) 5,678.

(*b*) 64,522 as on 1st May 1958.

*Separate department for distribution of electrical goods*

* 773 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

விவசாயிகளுக்குத் தேவையான மின்சார சாமான்கள், மோட்டார் ஸ்டார்ட்டர், ஸ்விட்ச் இவைகளை வினியோகிக்க தனி இலாகா ஏற்படுத்தும் திட்டம் என்னவாயிற்று ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There was and is no proposal to form a separate department for the distribution of electric motors, starters and switches to the agriculturists.

SRI S. M. ANNAMALAI : ஸார், விவசாயத்திற்கு வேண்டிய மின்சார மோட்டார்கள், ஸ்டார்ட்டர்கள், ஸ்விட்சுகள் இவைகளெல்லாம் நம்முடைய மாநிலத்திலேயே இப்பொழுது செய்கின்றார்கள். இருந்தாலுங்கூட, போதிய அளவு உற்பத்தி செய்யவில்லையாகையால் வெளி நாடுகளிலிருந்து வியாபாரிகள் இறக்குமதி செய்து, விவசாயிகளை ஏமாற்றி அதிக விலைக்கு விற்று, ஏராளமான இலாபம் பெறுகிறார்கள். ஆகையால் சர்க்கார், தனி இலாகாவை ஏற்படுத்தி, அதன்மூலமாக விற்பனை செய்வதற்கு ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது நிலைமை எப்படி இருக்கிறதென்றால் 50,000 மோட்டார்கள் இந்த நாட்டிலே உற்பத்தி செய்யப்படுகிறது. ஆகையால், உள்நாட்டிலிருந்தே இதெல்லாம் கிடைக்கும். தனி இலாகா இதற்கு அவசியம் இல்லை என்று தான் அரசாங்கம் கருதுகிறது.

*Order under section 144 in Mettupalayam*

* 774 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of Sri M. Kalyanasundaram) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the reasons for promulgating an order under section 144 banning meetings and processions at Mettupalayam, Coimbatore district, on or about 1st September 1958; and

(*b*) whether a copy of the order would be placed on the table of the House?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The reasons are given in the order, a copy [a] of which is placed on the table of the House.

---

[a] Printed as Appendix IV on pages 368–369 infra.

1st November 1958]

*Sea erosion in Dhanushkodi area*

* 776 Q.—SRI P. U. SHANMUGAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தனுஷ்கோடி பகுதியில் கடல் அரிப்பைத் தடுத்து நிறுத்த சர்க்கார் ஏதேனும் திட்டம் வகுத்துள்ளார்களா ?

THE HON. SRI P. KAKKAN : No scheme to prevent sea erosion at Dhanushkodi has so far been formulated pending the results of investigation carried out by the Government of India in Dhanushkodi and the opinion of the Expert Technical Committee appointed by them for selecting an alternative site for their pier at Dhanushkodi owing to constant sea erosion at the place. The Government are in correspondence with the Government of India.

SRI P. U. SHANMUGAM : தனுஷ்கோடிப் பகுதியில் ஏற்படும் கடல் அரிப்பைத் தடுப்பதற்கான நடவடிக்கையை உடனடியாக எடுக்காவிட்டால், இன்னும் சில ஆண்டுகளுக்குள்—இரண்டு மூன்று ஆண்டுகளுக்குள்—ரயில்வே ஸ்டேஷன் வரையில் கடல் வந்துவிடும் என்று சர்க்காருக்குத் தெரியுமா ? தெரிந்திருந்தும் உடனடியாக நடவடிக்கை எடுக்காமல் குழுவின் பரிசீலனையில் இருக்கிறது என்று தள்ளிப்போடுவது முறை தானா ?

THE HON. SRI P. KAKKAN : அதுபற்றி ஏற்கனவே இந்த அரசாங்கம் மிகவும் அக்கறையோடு கவனித்து வருகிறது. ஆனால், அங்கே அலையின் வேகத்தினால் தண்ணீர் ஊருக்குள் வந்து அங்கேயிருக்கும் குடிசைகளைப் பாதிப்பதினால், அந்தக் குடிசைகளை இப்பொழுது வேறு இடத்திற்கு மாற்றுவது நல்லது என்ற நோக்கத்துடன் பிரதம இன்ஜினீர் அவர்கள் சிபார்சு செய்திருக்கிறார்கள். இப்பொழுது தடுப்புச் சுவர் கட்ட வேண்டுமென்றால், 1,150 அடி நீளத்திற்குக் கட்டவேண்டியிருக்கும். அப்படிக் கட்டினாலும் அது நிலைக்குமா என்று சந்தேகப்படுவதினாலே நிபுணர் கமிட்டியைக் கலந்துகொண்டுதான் இதைக் கட்ட ஏற்பாடு செய்ய வேண்டு மென்று சொல்லியிருக்கிறார்கள்.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, இலங்கையிலே இருக்கும் தமிழர்கள் சிந்துகிற கண்ணீர் கடலிலே கலப்பதினால் இந்த அரிப்பு ஏற்படுகிறது என்று சர்க்கார் உணருமா ?

MR. SPEAKER : I rule this question out of order.

SRI P. U. SHANMUGAM : தனுஷ்கோடிப் பகுதியில் கடல் அரிப்பு ஏற்படுவதைத் தடுக்க கரை போடவேண்டுமென்று கேட்கிறார்களே யொழிய, அந்தப் பகுதியிலே இருக்கிற மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பது என்ற முறையில் கேட்கவில்லை. அங்குள்ள மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதும் தேவைதான் என்றாலும், கரை போடும் விஷயத்தை முக்கியமாக எடுத்துக்கொண்டு சர்க்கார் ஏன் செய்யக்கூடாது ?

THE HON. SRI P. KAKKAN : கரை போடும் விஷயமாகத்தான் அரசாங்கம் கவனிக்கிறது. கரை போட்டாலும் அது நிலைக்குமா என்று இன்ஜினீர்கள் சந்தேகப்பட்டார்கள். அங்கு இருக்கும் பியரை வேறு இடத்திற்கு மாற்ற முடியுமா என்பதையும், அங்கு இருக்கும் சில வீடுகளை வேறு இடத்திற்கு அப்புறப்படுத்த ஏற்பாடு செய்யவேண்டுமா என்பதையும் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறார்கள்.

[1st November 1958

*Pandiya Nad Co-operative Training School, Madurai*

* 777 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) மதுரையில் ஆரம்பிக்கப்பட்டுள்ள பாண்டிய நாடு கூட்டுறவு பயிற்சிப் பாடசாலையில் தலைவராக நியமிக்கப்பட்டுள்ளவர் யார் ?

(ஆ) இவருக்கும் கூட்டுறவு இலாகாவுக்கும் உள்ள தொடர்பு என்ன ?

(இ) ஏதாவதொரு கூட்டுறவு சங்கத்திலாவது இவருக்கு நிர்வாக அனுபவம் உண்டா ?

(ஈ) இந்தப் பதவியின் முடிவுக் காலம் எப்பொழுது ?

(உ) இவரை நியமித்தவர் யார் ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) Sri P. T. Rajan, M.L.C.

(*b*) & (*c*) Honourable Member are well aware of his qualification and experience, Sir.

(*d*) 27th July 1959.

(*e*) Registrar of Co-operative Societies, Madras.

SRI A. V. P. ASAITHAMBI : ஒரு ஒழுங்குப் பிரச்னை எழுப்ப விரும்புகிறேன். நேற்று ஒரு ஆபீசர் பேரில், கலெக்டர் பேரில் பேசக் கூடாது என்று சொன்னீர்கள். இப்பொழுது ஒரு நபரைப் பற்றி பேசப்படுகிறது. அப்படிப் பேசலாமா ?

MR. SPEAKER : அப்படி நான் சொல்லவில்லை.

SRI A. V. P. ASAITHAMBI : சொன்னீர்கள். கனம் அங்கத்தினர் திரு. அண்ணாமலை அவர்கள் ஒரு கலெக்டரைப்பற்றிக் கேட்டதற்கு தனிப்பட்ட நபர் பேரில் சொல்லக்கூடாது என்று தாங்கள் சொன்னீர்கள். ஆனால், சற்றுமுன் இங்கே ஒரு ஆள் பேரில் சொல்லப்படுகிறது. இது சரிதானா என்று தங்களிடமிருந்து அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : ஒரு ஆபீசர் மீது கேள்வி கேட்கக்கூடாது என்று நான் சொல்லவில்லை. ஆபீசர் மீது கேள்வி கேட்கலாம். அமைச்சர் அதற்குப் பதில் அளிக்கலாம். ஆனால், ஒருவர் மீது குறை சொல்லக் கூடாது. சபை முன்பு உள்ள கேள்வியில் " தலைவராக நியமிக்கப்பட்டவர் யார் ?" என்று கேட்கப்பட்டிருக்கிறது. இது ஒரு ஆபீசரைப்பற்றியதல்ல. இவரைப்பற்றி ஏதாவது குறை கூறிச் சொன்னால், அந்தக் கேள்வியை நிறுத்திவிடுகிறேன். குறை கூறி இதுவரை ஒன்றும் சொல்லவில்லை.

SRI N. R. THIAGARAJAN : பாண்டிய நாடு கூட்டுறவு பாடசாலையின் தலைவராக இருப்பவர், கூட்டுறவு இலாகாவே தன் சட்டைப் பைக்குள் இருக்கிறது என்று டமாரம் அடித்துக்கொண்டிருக்கிறார். இத்தகையவரை தலைவராக நியமிக்கலாமா ? அவரைப் பதவியிலிருந்து நீக்க அரசாங்கம் யோசிக்குமா ?

MR. SPEAKER : I rule this question out of order.

*Seed Farms*

* 778 *Q.*—SRI A. GOVINDASAMY : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இதுவரையில் நமது சர்க்கார் எத்தனை பொறுக்கு விதைப் பண்ணைகள் அமைத்திருக்கிறார்கள் (மாவட்டவாரியாக) ?

(ஆ) எந்த அடிப்படையில் இந்த விதைப் பண்ணைகள் அமைக்கப் படுகின்றன ?

1st November 1958]

THE HON. SRI M. BHAKATAVATSALAM : (*a*) As detailed below :

| *District* | *Number of farms opened.* |
|---|---|
| Tirunelveli ... ... ... ... ... | 9 |
| South Arcot ... ... ... ... ... | 15 |
| North Arcot ... ... ... ... ... | 15 |
| Chingleput ... ... ... ... ... | 12 |
| Madurai ... ... ... ... ... | 11 |
| Tanjore ... ... ... ... ... | 33 |
| Tiruchirappalli ... ... ... ... | 13 |
| Kanyakumari ... ... ... ... | 1 |
| Salem ... ... ... ... ... ... | 15 |
| Coimbatore ... ... ... ... ... | 15 |
| Ramanathapuram ... ... ... ... | 6 |
| The Nilgiris ... ... ... ... ... | 6 |
| Total ... | 154 |

(*b*) The aim is that each community development block should have a 25-acres seed farm which will produce all the principal crops grown in the block such as paddy, millets, cotton, groundnut and vegetables. The selection of sites taken into account the existing soil composition, irrigation facilities, availability of labour and suitability of the crops proposed to be raised.

SRI A. GOVINDASAMY : இந்த சர்க்கார் விதைப் பண்ணை தேர்ந்தெடுக்கிற நேரத்தில் பல இடங்களில் நல்ல நிலங்களாக எடுக்காவிட்டாலும் 9-30 a.m.
தகராறுக்குறிய இடங்களை எடுத்திருப்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? நீர்ப்பாசன வசதிகூட அந்த இடங்களில் மிகக் குறைவாக இருப்பது தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கூடிய வரையில் நல்ல நிலங்களாக எடுக்கவேண்டுமென்றுதான் வற்புறுத்தப்படுகிறது. சில சமயங்களில் குறிப்பிட்ட லட்சியத்தை அடையவேண்டுமென்ற கவலையில் கிடைத்த நிலத்தை எடுத்துக்கொண்டுவிட்டார்கள். இருந்தாலும் இப்பொழுது பரிசீலனை செய்து எந்தெந்த நிலம் தகுதி இல்லையோ அவற்றை எல்லாம் ரத்து செய்துவிட வேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம்.

SRIMATHI KOLANTHAI AMMAL : கனம் சபாநாயகர் அவர்களே, கோயமுத்தூர் ஜில்லாவைப் பொறுத்தவரைக்கும் பருத்தி விதைதான் பற்றுக்குறையாக இருப்பதால் அதிகமாக சி. ஒ. 4 பருத்திவிதை பண்ணைகளை ஏற்படுத்துவதற்கு கவனம் செலுத்தப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பருத்தி விதை இன்னும் போதிய அளவு கிடைக்கவில்லை, என்பது தெரியும். அரசாங்கம் அதைப் பற்றிக் கவனித்து வருகிறது.

SRI M. JAGANNATHAN : Sir, arising out of the answer of the Hon. Minister, that only 18 seed farms have been so far opened in the South Arcot district, which is a very small number

[1st November 1958

most incomensurate with the needs of the district, may I know whether the Government will consider the desirability of opening more seed farms in Tindivanam taluk particularly?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: That is being looked into, Sir. But that again depends upon the availability of suitable lands.

SRI J. MATHA GOWDER: நீலகிரியில் ஆறு விதைப் பண்ணைகள் இருப்பதாக அமைச்சர் சொன்னார்கள். உருளைக்கிழங்கு விதைப்பண்ணைகளை அதிகரிக்க சர்க்கார் முயற்சி செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அனேகமாக அங்கே உருளைக்கிழங்கு விதைப்பண்ணைகள்தான் இருக்கின்றன. அவை தேவையைப் பூர்த்தி செய்யும் என்று கருதப்படுகிறது.

SRI A. GOVINDASWAMY: தென் ஆற்காடு மாவட்டத்தில் 18 இடங்களை விதைப்பண்ணைக்காக எடுத்திருப்பதாகத் தெரிவித்தார்கள். அவற்றில் எத்தனை உதவாக்கரை இடங்கள் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதைப்பற்றி என்னிடத்தில் தகவல் இல்லை. பின்னால் விசாரித்து கனம் அங்கத்தினருக்குத் தெரிவிக்கிறேன்.

SRIMATHI KOLANTHAI AMMAL: ஒரு வட்டாரத்தில் ஒரு விதைப் பண்ணைதான் இருக்கவேண்டுமென்பதால் நல்ல நிலங்கள் கிடைப்பது கஷ்டம். நல்ல நிலங்கள் உள்ள இடத்தில் ஒன்றுக்கு மேல் இரண்டு பண்ணைகளை வைத்தால் குறைந்த செலவில் அதிக விதை உற்பத்தியாகும் என்பதை அரசாங்கம் யோசனை செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எல்லா இடங்களிலும் தகுதியான இடங்கள் கிடைப்பதில்லை. ஒரு வட்டாரத்தில் ஒரு பண்ணைதான் வைக்கலாம் என்றும் இல்லை. ஒரு பண்ணைக்கு 25 எக்கர் என்று இருப்பதைக்கூட 50 எக்கர் என்று வைத்தால் சிக்கனமாக இருக்கும் என்றுதான் அரசாங்கம் கவனம் செலுத்துகிறது.

SRI S. LAZAR: மாகாணம் பூராவும் இந்தத் திட்டம் நிறைவேறினால் எத்தனை 'சிடு பாரம்' ஏற்படுத்தவேண்டும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சர்க்கார் முன்பு யோசித்தபடி 350 பாரம் வைக்கவேண்டி இருந்தது. இப்போது அவ்வளவு வேண்டாம் என்று அரசாங்கம் கருதுகிறது. முன்பு எடுத்துக்கொண்ட பண்ணைகளைத் திருத்தி அமைத்து மேலும் இந்த ஆண்டில் 20 பண்ணைகள் எடுத்துக்கொள்வதாக திட்டமிடப்பட்டிருக்கிறது.

SRI K. R. NALLASIVAM: மாதிரிப்பண்ணையைத் தனியாக ஏற்படுத்தாமல் விதைப்பண்ணையோடு சேர்த்து ஏற்படுத்துவதற்கு சர்க்கார் யோசனை செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதைப்பற்றி அரசாங்கம் கவனம் செலுத்திவருகிறது.

SRI A. GOVINDASAMY: Single 25 எக்கர் விதைப்பண்ணைகளில் எல்லாக் காரியங்களையும் டெமான்ஸ்ட்ரேட்டரே பார்த்துக் கொள்ளவேண்டுமென்று இருப்பதால் 25 எக்கரா விஸ்தீரணமுள்ள பண்

1st November 1958]

ணையை அவரால் பரிபாலிக்க முடியவில்லை என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? அத்தகைய விதைப் பண்ணைகளுக்கும் மானேஜர் போட்டு போதுமான ஆட்களை நியமிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அது உண்மைதான். சிங்கிள் விதைப்பண்ணை டெமான்ஸ்ட்ரேட்டர் மேற்பார்வையில் சரியாக நடக்க வில்லை என்பதை அரசாங்கம் கவனித்து வருகிறது. அவற்றிற்கும் மானேஜர் தனியாகப் போட்டுக்கொண்டு வருகிறார்கள்.

*Wages of Labourers employed in Seed Farms*

* 779 *Q.*—**Sri A. GOVINDASAMY** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சர்க்கார் விதைப் பண்ணைகளில் வேலை செய்யும் விவசாயத் தொழிலாளர்களுக்கு தினக் கூலி அளிக்கப்படுகிறதா அல்லது வாரக் கூலி அளிக்கப்படுகிறதா ?

(ஆ) விவசாயத் தொழிலாளர்களுக்கு பகல் உணவு அளிக்கப்படு கிறதா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) The labourers employed in the State Seed Farms are paid daily wages.

(*b*) The answer is in the negative.

**Sri A. GOVINDASAMY** : செங்கல்பட்டு மாவட்டத்தில் வாரக்கூலி கொடுப்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? அப்படியானால் வாரக்கூலி கொடுக்குமிடங்களில் தினக்கூலி கொடுக்க அரசாங்கம் முயற்சிப்பார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அதைப்பற்றி அரசாங் கத்தினிடம் தகவல் எதுவும் இல்லை.

**Sri N. MARUDACHALAM** : கோவையிலுள்ள விதைப்பண்ணையில் வேலை செய்யும் ஆட்களுக்கு இரண்டு வாரத்திற்கு ஒரு முறைதான் கூலி கொடுக்கிறார்கள். அதை வாராவாரம் கொடுக்க அரசாங்கம் முயற் சிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அது வேறு விஷயம். தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

Sri M. JAGANNATHAM : Are the Government aware of the fact that the daily wages paid to these workers are not even subsistance wages and wiil the Government consider the desirability of increasing their wages?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I may tell the hon. Member that the wages that are paid are assessed according to the conditions prevailing in the neighbouring areas.

**Sri A. GOVINDASAMY**: சர்க்கார் விதைப்பண்ணையில் வேலை செய்கிற விவசாயத் தொழிலாளருக்கு பகல் உணவு கொடுக்காத காரணத் தினால் நடவு காலங்களில் வேலை பாதிக்கப்பட்டு விடுகிறது என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. கனம் அங்கத்தினர் சொல்லுவதை விவசாய இலாகாவிற் குத் தெரிவித்து வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளச் சொல்லு கிறேன்.

[1st November 1958

*Seed Farm at Cheyyar village*

* 780 *Q.*—SRI A. GOVINDASAMY : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) செங்கற்பட்டு மாவட்டம், செய்யூரில் சர்க்கார் விதைப்பண்ணைக்காக எத்தனை ஏக்கர் குத்தகைக்கு எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் ?

(ஆ) நஞ்சை எவ்வளவு ? புஞ்சை எவ்வளவு ?

(இ) நஞ்சைக்கு குத்தகை எவ்வளவு ரூபாய் சர்க்கார் அளிக்கிறது ?

(ஈ) புஞ்சைக்கு குத்தகை எவ்வளவு அளிக்கிறது ?

(உ) அதே செய்யூர் கிராமத்தில் நஞ்சை புஞ்சைகளுக்கு எவ்வளவு குத்தகை அளிக்கப்படுகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 26·78 acres.

(*b*) 25·15 acres of wet lands and 1·63 acres of dry lands.

(*c*) & (*d*) The Collector of Chingleput has suggested a rate of Rs. 179 per acre of wet lands and Rs. 59 per acre of dry lands, but the rates have not yet been finalised.

(*e*) The lease amount depends upon several factors. No definite statement can be made in this regard.

SRI A. GOVINDASAMY : செய்யாறு பகுதியில் உள்ள நிலத்திற்கும் சுற்றுப்புறத்திலுள்ளதற்கும் 120 ரூபாய் கொடுக்கப்படுவது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? அப்படி தனிச் சலுகை காட்டப்படவேண்டிய அவசியமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் பதில் சொன்னதில் அது இன்னும் முடிவாகவில்லை. அவ்வாறு அவர்கள் தெரிவித்து இருக்கிறார்கள். அது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது என்று தான் குறிப்பிட்டேன்.

SRI A. GOVINDASAMY : செய்யாறு பாரத்தில் கரம்பாக வைத்திருக்கிற நிலங்களுக்கும் குத்தகை கொடுக்கப்பட்டு வருவது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவை ஏன் கரம்பையாக வைக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பரிசீலனை செய்ய வேண்டும். நிலத்தை குத்தகைக்கு என்று எடுத்துக்கொண்டு விட்டால் கரம்பையாக வைத்திருந்தாலும் உபயோகப்படுத்திக் கொண்டாலும் குத்தகை கொடுக்கத்தான் வேண்டும்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : விதைப் பண்ணைக்காக எடுத்துக் கொள்ளப்படும் நிலங்கள் பண்ணை வைப்பதற்கு நிலசுவாந்தார்களிடம் குத்தகைக்கு எடுக்க வேண்டும் என்பதனால் தியாகிகளுக்காக வழங்கப்பட்ட வீர மான்ய நிலங்களை விதைப்பண்ணைகளுக்காக எடுத்துக் கொண்டு தியாகிகளுக்காவது அந்தக் குத்தகைப் பணத்தைக் கொடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நல்ல விதைகளை உற்பத்தி செய்யவேண்டும் என்பதற்காகத்தான் இந்தத் திட்டம். தியாகிகளுக்கு உதவி செய்ய வேண்டும் என்பதற்காக அல்ல. மேலும் விதைப்பண்ணைக்கு குறைந்த பட்சம் 25 ஏக்கரா மொத்தமாக வேண்டும். தியாகிகளுக்குக் கொடுக்கப்பட்ட 5 ஏக்கரா 3 ஏக்கரா என்பவை பண்ணை வைக்க போதுமானது அல்ல.

அடுத்த கேள்வி எடுத்துக்கொள்ளும்போது ஸ்ரீ வேதரத்தினம் பிள்ளை எழுந்து நின்றார்.)

MR. SPEAKER : I know question 781 has been passed over because the Hon. Minister for Finance is not in town. All the questions relating to the Hon. Finance Minister will be taken up next day.

1st November 1958]

SRI A. VEDARATHNAM : கேள்வி 781-ல் போஸ்ட் பேசிக் பள்ளிகள் என்பதற்கு பின்னிலே ஆதாரப்பள்ளி என்று போட்டிருப்பதாக கூறுகிறார் கள். ஆதார உயர்நிலைக் கல்வி என்றுதான் அதற்குச் சொல்லுவது. ஹிந்தியிலும்கூட 'உத்திரப்புனியாதி' என்றுதான் சொல்லுவார்கள். நாளைக்குத் திருப்பி அச்சிடும்போதாவது இதைத் திருத்தவேண்டுமென்று சொல்லுகிறேன்.

MR. SPEAKER : தயவு செய்து என்னுடைய அறையில் வந்து இதைப்பற்றிச் சொல்லவும்.

*Electrification of villages in Ramanathapuram district*

* 782 *Q.*—SRI K. RAMACHANDARAN : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the number of villages electrified during 1957–58 in the Ramanathapuram district and

(*b*) whether the Government have any proposal to extend electricity to the interior villages of Mudukulathur, Paramakudi and Tiruvadanai taluks in the Ramanathapuram district?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) 113.

(*b*) Yes, Sir. Proposals for the extension of electricity to ten villages in these taluks have been approved and the work has also been taken up. Proposals for the extension of electricity to 5 more villages are under consideration.

*Dalmia Cement Factory*

* 783 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா, டால்மியா சிமிட்டி தொழிற்சாலையைச் சேர்ந்த 4-வது குவாரியில் வேலை செய்யும் தொழிலாளர்களை 1958-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 3-ந் தேதி போலீசார் அரஸ்ட் செய்த விஷயம் சர்க் காருக்குத் தெரியுமா ?

(ஆ) எத்தனை பேர்கள் ?

(இ) அதற்குக் காரணம் என்ன ?

(ஈ) ஜாமீனில் விடப்பட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) *to* (*d*) No worker of the Fourth Quarry of the Dalmia Cement Factory was arrested on 3rd September 1958.

*Veterinary dispensaries for each firka*

* 784 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) பிர்க்காவுக்கு ஒரு கால் நடை ஆஸ்பத்திரி ஆரம்பிக்க உத்தேசம் உண்டா ?

(ஆ) எப்போது முதல் ?

[1st November 1958

(இ) வடாற்காடு ஜில்லாவில் நடமாடும் கால்நடை ஆஸ்பத்திரி எந்த தேதி முதல் ஆரம்பமாகும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) There is at present no proposal to open one veterinary dispensary for each firka.

(*b*) Does not arise.

(*c*) One Motorised Mobile Unit with necessary staff has been sanctioned by Government for the North Arcot district during the current year 1958–59. The unit will commence functioning as soon as a suitable vehicle is obtained for which necessary action is being taken.

SRI V. K. KOTHANDARAMAN : வட ஆற்காடு ஜில்லாவில் கால் நடை ஆஸ்பத்திரிகள் போதுமான அளவு இல்லாத காரணத்திஞல் விவசாயிகள் மிகவும் கஷ்டப்படுகிருர்கள். குடியாத்தம் தாலூகாவில் $3\frac{1}{2}$ லட்சம் மக்கள் கொண்ட பகுதியில் ஒரே ஒரு கால் நடை ஆஸ்பத்திரிதான் இருக்கிறது. குறைந்த பட்சம் இரண்டு பிர்க்காவுக்கு ஒரு ஆஸ்பத்திரியாவது உடனடியாக ஏற்படுத்த முயற்சிப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இன்னும் மற்ற மாவட்டங்களிலும், மற்றத் தாலூக்காகளிலும் கூட கால் நடை ஆஸ்பத்திரிகள் போதுமான அளவு இல்லை. போதிய அளவு வைக்கவேண்டுமென்ருல் நிதி நிலைமையைப் பொருத்திருக்கிறது.

9-30 a.m. SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Is there any proposal before the Government to extend this mobile veterinary service to other districts also?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I would like to have notice.

SRIMATHI KAMALAMBUJAMMAL : கால் நடைகளில் அதிக கவனம் செலுத்தி வருகிற இந்த நாட்களில், கால்நடைகளுக்கு வரும் நோய்களைத் தடுப்பதற்கு வேண்டிய வைத்தியசாலைகள் இல்லாததஞல் நோயிஞல் கால் நடைகள் நஷ்டமாகிறது. அதன் காரணமாக பிர்க்கா வாரியாக கால்நடை ஆஸ்பத்திரிகளை வைக்க அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றித்தான் நான் முன்பே சொன்னேன். கால் நடை ஆஸ்பத்திரி எல்லா இடங்களிலும் ஏற்படுத்த வேண்டியதன் அவசியத்தைப்பற்றி அபிப்பிராய பேதம் கிடையாது. அதை நிறைவேற்றுவதில் நிதி நிலைமையை அனுசரித்துச் செய்ய வேண்டியிருக்கிறது.

SRI P. G. KARUTHIRUMAN : கால் நடை ஆஸ்பத்திரி ஏற்படுத்துவதில் கால் நடைகளின் எண்ணிக்கையைக் கொண்டு ஏற்படுத்தப்படவேண்டுமா ? மக்களுடைய எண்ணிக்கை எந்தப் பகுதியில் அதிகமாக இருக்கிறது என்பதைக் கணக்கில் கொண்டு ஏற்படுத்துவதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கால் நடை இருப்பது ஜனங்களுக்காகத்தான். எங்கே ஜன சங்கியை அதிகமாக இருக்கிறதோ அங்கே கால் நடைகளின் எண்ணிக்கையும் அதிகமாக இருக்கும் என்றுதான் ஜன சங்கியைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

1st November 1958]

**Sri A. V. P. Asaithambi :** விருதுநகரில் இருக்கிற ஆஸ்பத்திரியைத் தன் பெயரில் ஏற்படுத்துவதாக இருந்தால் அதற்கு ஆகும் செலவை எல்லாம் ஒப்புக்கொள்வதாக திரு வி. ஏ. எம். ரத்தினம் என்பவர் அரசாங்கத்திற்கு எழுதியிருப்பதாக அமைச்சர் சொன்னார்களே. அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER :** தனிக்கேள்வி போடவேண்டும்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அது ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. மேற்கொண்டு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது.

**Sri A. VEDARATHNAM :** இப்போது இருக்கிற கால்நடை ஆஸ்பத்திரிகள் எல்லாவற்றிலும் டாக்டர்கள் இருக்கிறார்களா ? இல்லையானால் அங்கெல்லாம் டாக்டர்களைப் போடுவதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** கால்நடை வைத்தியர்களைப் பொருத்தமட்டில் பற்றாக்குறை இருக்கிறது. சில கால்நடை ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் இல்லாமல் இருக்கலாம். ஸ்டாக்மென் ஏற்பாடு செய்கிறோம். வைத்தியக் கல்லூரியிலும் ஸ்தானங்கள் அதிகப்பட்டிருக்கிறது.

**Sri A. GOVINDASAMY :** ஒவ்வொரு பிர்க்காவிலும் கால்நடை ஆஸ்பத்திரியை வைக்க இயலாவிட்டாலும் ஒவ்வொரு தேசீய விஸ்தரிப்புத் திட்டப்பகுதியிலுமாவது ஒரு மொபைல் ஆஸ்பத்திரி வைக்க அரசாங்கம் முயற்சிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அதைப்பற்றி அரசாங்கம் கவனம் செலுத்துகிறது.

**Sri S. LAZAR :** மொபைல் ஆஸ்பத்திரி ஒரு சில இடங்களுக்கு அனுப்பப்படுவதாகத் தெரிகிறது. ரிப்போர்ட் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவர்கள் ஒவ்வொரு பிர்க்காவிலும் போய்வர ஏற்பாடு செய்யப்பட்டிருகிறதா ? அழைப்பு வரும் இடங்களுக்கே அனுப்பப்படுகிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** மொபைல் யூனிட்டுக்குத் தனியாக டாக்டர்கள் இருக்கிறார்கள். எப்போதும் அவர்களுக்கு வேலை இருக்கும்.

**Sri K. PERIANNAN :** இப்போது இருந்து வரும் கால்நடை ஆஸ்பத்திரியில் போதிய மருந்து வசதி இல்லையென்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? போதிய மருந்து சப்ளை செய்ய அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அவ்வாறு என்னிடம் தகவல் இல்லை. மருந்து கொடுப்பதில் கஷ்டம் இருப்பதாகவும் தெரியவில்லை.

**Sri C. MUTHIAH PILLAI :** கால் நடை ஆஸ்பத்திரிக்கே டாக்டர்கள் கிடைக்கவில்லை என்று சொல்லும்போது அந்த டாக்டர்களை B. D. O. ஆக அனுப்புவதற்கு அவசியம் என்ன என்று கேட்கிறேன் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அப்படி எடுப்பதிலும் தவறு இல்லை. கால்நடை வைத்தியத்தில் நல்ல அனுபவம் உள்ளவர்கள் B. D. O. ஆக வந்தால் அந்தப் பிராந்தியத்தில் கால்நடை வளர்ச்சி நன்றாக பரிபாலிக்கப்படும். அதுவும் வரவேற்கத் தக்கதுதான்.

[1st November 1958

SRI V. K. KOTHANDARAMAN : எஸ்.பி.ஸி.ஏ. அதிகாரிகளால் கிராமத்திலுள்ள விவசாயிகளுக்கு மிகவும் தொல்லை ஏற்படுகிறது லஞ்சம் கொடுத்து தண்டக் கட்டிக்கொண்டு போகவேண்டியிருக்கிறது என்கிற காரணத்திஞல் அவர்களை எடுத்துவிட்டு கால்நடை ஆஸ்பத்திரிகளை அதற்குப் பதிலாக ஏற்படுத்த முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTHAVATSALAM : எஸ்.பி.ஸி.ஏ. அவர்கள் பிராணிகளுக்கு இம்சை செய்வதைத்தான் தடுக்க இருக்கிருர்கள். அது வேறு ஸ்தாபனம். அது சில பேருக்குப் பிடிக்கவில்லை என்ருல் வெறுப் பாகத்தான் இருக்கிறது.

*Utilization of the River waters in the Palni Hills for Power Supply*

* 786 *Q.*— SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) பழனி மலைத்தொடரில் உற்பத்தியாகும் நதிகளிலிருக்கும் தண் ணீரை மின்சார உற்பத்திக்கு உபயோகப்படுத்துவதற்கு ஏதேனும் ஏற் பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றனவா ?

(ஆ) அப்படியாஞல், அதன் விவரங்கள் யாவை ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) & (*b*) No, Sir. Investigations have indicated that the water resources in the streams of the Palni Hills are very limited and consequently the quantum of power that can be generated is also very small. The scheme is not also likely to prove remunerative.

SRI N. R. THIAGARAJAN : பாலாறு புரந்தலாறு என்னும் பகுதியிலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்யப்படும் என்று முன்பு அறிக்கையில் சொன்ஞர்கள். எவ்வளவு கிலோவாட் உற்பத்தி செய்யப்படும் ?

THE HON. SRI V. RAMAIAH : அப்போது நான் கொடுத்த பதில் இன்வெஸ்டிகேஷன் நடந்து கொண்டிருப்பது என்பதுதான். அதன் முடிவை இப்போது சொன்னேன். அங்கே மின் உற்பத்திக்குப் போதுமான தண்ணீர் வசதி கிடையாது. அதிகமான மின்சாரம் அங்கே எடுக்க முடி யாது என்கிருர்கள்.

SRI A. V. P. ASAITHAMBI : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தென்ஞடு புறக்கணிக்கப்படுவதாக திராவிட முன்னேற்றக் கழகம் குற்றம் சாட்டிக்கொண்டு வரும்போது அமைச்சர் அவர்கள் தென்ஞட்டில் திட்டம் போடுவதற்குப் பெரிய நதிகள் இருக்கிறதாவென்று கேட்டிருக்கி ருர்கள்.

MR. SPEAKER : உங்கள் கேள்விக்கும் மூல கேள்விக்கும் சம்பந்தம் இருப்பது போலவே தெரியவில்லையே.

SRI A. V. P. ASAITHAMBI : சம்பந்தம் இருக்கிறது. இந்த மலையி லிருந்து உற்பத்தியாகும் நதிகளின் மூலமாக மின்சாரத்தை உற்பத்தி செய்யும் திட்டம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படவேண் டும் என்று இந்த அரசாங்கம் சொன்ன யோசனையை மத்திய அரசாங்கத் தார் புறக்கணித்துவிட்டார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI V. RAMAA H : கனம் அங்கத்தினரைச் சேர்ந்த கட்சியினர் எல்லாத் துறையிலும் வட நாட்டால் தென்ஞடு புறக்கணிக் கப்படுவதாகச் சொல்வதுதான் வழக்கம். ஆஞல் இந்த மின்சாரத்தைப் பொருத்த வரையில் இந்த மாகாணத்தில் உற்பத்தியாவதை வேறு எந்த மாகாணத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தாலும் கண்டிப்பாக நம் மாகாணம்தான் எல்லாவற்றிற்கும் முன்னிலையில் இருக்கிறது என்பது அவர்களுக்கே தெரிய வரும்.

1st November 1958]

*Loss in the sale of Government Publications*

* 787 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether Rs. 29,616 was written off by Government in November 1957 and February 1958 as a total loss in the sale of, certain books published by the Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. The loss in question was sustained in the sale of the Commercial Directory published by the Government in 1952.

SRI A. A. RASHEED : Is it a fact that the book costing Rs. 15 per copy was sold later on at scrap value?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir, this publication was originally priced at Rs. 15 but the price was gradually reduced in stages to Rs. 5, Rs. 3 and Rs. 2. Still there are copies left unsold and they are treated as waste paper.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know who is responsible for this loss. Have the Government taken any action against the officer concerned?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : If anybody should be held responsible, it is the Government which should be held responsible. But I may tell the hon. the Leader of the Opposition that the Government had brought out this publication with the highest of motives as this is really a valuable publication. The idea was that there should be publicity about activities, particularly relating to the industrial development undertaken in this State, not only this country but also in other countries particularly countries which have trade connection with the Madras State. It was with that idea it was published but the value of the publication could not be realized.

SRI A. A. RASHEED : If it is a valuable publication, what is the reason for getting such a low value for it?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The obvious reason is that those who could purchase the book did not appreciate the value of it.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : அரசாங்கம் பிரசுரித்த வற்றில் சில புத்தகங்கள் வீணாகிவிட்டன என்று சொன்னார்கள். என்ன என்ன புத்தகம் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது கமரிஷயல் டைரெக்டரி என்ற ஒரே ஒரு புத்தகம் தான்.

*Madras Vanaspathi Limited, Villupuram*

*788 *Q.*—SRI N. K. PALANISAMI : (on behalf of Sri M. Kalyanasundaram) கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கடனாகவோ அல்லது பங்குகளாகவோ அரசாங்கத்தார், தென் ஆற்காடு ஜில்லா, விழுப்புரத்தில் உள்ள சென்னை வனஸ்பதி லிமிடெட்டில் எவ்வளவு தொகையை முதலீடு செய்துள்ளார்கள்?

[1st November 1958

(ஆ) மேற்படி ஆலையின் நிர்வாகத்தைத் தாமே எடுத்துக்கொள்ள அரசாங்கத்தார் உத்தேசித்திருக்கிறார்களா?

(இ) இது சம்பந்தமாக ஏற்பட்ட மொத்த செலவு எவ்வளவு?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Rs. 10 lakhs (rupees ten lakhs) has been given as loan under the Madras State Aid to Industries Act.

(*b*) No, Sir.

(*c*) Excluding the principal of Rs. 10 lakhs (rupees ten lakhs) and penal and simple interest thereon, an expenditure of Rs. 45,381 has been incurred up to 30th April 1958 by way of property tax, insurance charges and other expenses.

SRI V. K. KOTHANDARAMAN : இது வரையில் எவ்வளவு பணம் வசூலிக்கப்பட்டிருக்கிறது? மேற்படி தொழிற்சாலையை யார் யார் நடத்துகிறார்கள் ? இப்போது அந்தத் தொழிற்சாலை யார் பாதுகாப்பில் இருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதுவரையில் சொற்ப
9-40 a.m. தொகை தான் வசூலிக்கப்பட்டிருக்கிறது. அதைச் சார்ந்த நிலத்தை விற்று எடுத்துக்கொண்டது 55 ஆயிரம் ரூபாய் இன்னும் அங்கு தொழில் நடக்கவில்லை. அதனால்தான் இதில் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அதை விற்று பணம் வாங்கிக் கொள்ளலாம் என்று நினைத்தோம். பலர் அப்போது அதை நடத்துவதற்கு முன் வந்தார்கள். அதனால் போசாமல் இருந்தோம். இப்போது விற்றுவிடலாம் என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம்.

SRI M. KANDASAMI PADAYACHI : தென்னாற்காடு ஜில்லா மணிலாக்கொட்டை ஜில்லா என்று பெயர் பெற்ற ஜில்லா. அங்கே வனஸ்பதி ஆலை கட்டுவதற்கு இவ்வளவு காலதாமதமாகியிருக்கிறது. அந்த ஆலையில் மணிலாக் கொட்டையிலிருந்து எண்ணெய் எடுப்பதற்கான இயந்திரங்கள் ஜெர்மனியிலிருந்து வரவழைக்கப்பட்டது. அந்த மில்லை எடுத்து நடத்த அரசாங்கம் முன்வராததற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மணிலாக் கொட்டைக்கு தென்னாற்காடு ஜில்லா பெயர் பெற்றிருக்கிறது என்றாலும், மணிலாக் கொட்டையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்க்கு இப்போது யாரும் மதிப்புக் கொடுப்பதில்லை. மணிலா எண்ணெய் உற்பத்தி செய்வதற்காகத் தான் இந்தத் தொழிற்சாலை அமைக்கப்பட்டது. அங்கே நல்ல இயந்திரங்கள் நிறுவப்பட்டிருப்பது கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோவிந்தசாமி அவர்களுக்குத் தெரியும். ஆனால் மணிலா எண்ணெய்க்கு மதிப்பு இல்லாததால் இந்தத் தொழிலை நடத்துவதற்கேற்ற வாய்ப்புகள் இல்லை. அந்த இயந்திரங்களை வைத்துக் கொண்டு வேறு தொழில் நடத்தவும் முடியாது. இது தான் நிலைமை.

SRI A. GOVINDASAMY : தென் ஆற்காடு ஜில்லா மணிலாக் கொட்டைக்குப் பேர்பெற்றதாக இருப்பது ஒரு புறமிருக்க, மணிலா எண்ணெய் அவ்வளவு நல்ல தரம் இல்லை என்று அமைச்சர் அபிப்பிராயம் தெரிவித்தார்கள். அமைச்சர் கூற்று சரியென்றால் ஏன் அரசாங்கத்தார் 10 லட்சம் ரூபாயை அந்த ஆலைக்காக கடன் கொடுத்து பாழாக்க வேண்டும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த அரசாங்கமும் மத்திய அரசாங்கமும் வனஸ்பதி ஆலை கட்டப்படுவதற்கு அங்கீகாரம் அளித்து கடனும் கொடுத்தபோது வனஸ்பதி எண்ணெய்க்கு ரொம்ப மவுசு இருந்தது. அது கனம் அங்கத்தினருக்குத் தெரியும். அதனால் பல தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டன. அப்போது ஆந்திராவிலும் வனஸ்பதி

1st November 1958]

எண்ணெய்க்கு ரொம்ப மவுசு இருந்தது. அங்கேயும் பல தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டன. அங்கேயும் இப்போது இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

SRI M. SELVARAJ : அரசாங்கத்தார் அவர்கள் இந்த ஆலை கட்டப்படுவதற்காகக் கொடுத்த பணத்தை, ஆலையை விற்பதன் மூலம் திரும்பப் பெறப் போவதாக கனம் அமைச்சர் தெரிவித்தார். ஆலையை விற்பதன் மூலம் கிடைக்கும் பணம் முழுவதையும் சர்க்காரே எடுத்துக் கொள்வது சரியா ? தனிப்பட்டவர்கள் பலர் "ஷேர் காபிடல்" ஆக ஆயிரக் கணக்கான ரூபாய் பணம் கொடுத்திருக்கிறார்களே, அவர்களுடைய பணம் என்ன ஆவது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கத்தின் நலனில்தான் கனம் அங்கத்தினர் முதலில் அக்கறை காட்டுவார் என்று நினைக்கிறேன். சட்டப்படி செய்ய வேண்டியதை கனம் அங்கத்தினர் ஆட்சேபிக்கமாட்டார் என்றும் நினைக்கிறேன். சட்டப்படி, கம்பெனிக்காரர்கள் அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய கடனைத்தான் முதலில் தீர்க்க வேண்டும் ; அதற்குப் பிறகு தான் மற்றவர்களுக்குக் கொடுக்க வேண்டிய கடன்களைத் தீர்க்க வேண்டும்.

*Pest affected areas in Tanjore district*

* 790 *Q.*—SRI T. S. SWAMINATHA ODAYAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government are aware that the taluks of Nagapattinam, Tiruthuraipundi, Mannargudi and Pattukkottai in Tanjore district have been declared as pest affected area ;

(*b*) whether there is sufficient stock of pesticides in all the Agricultural Depots in all these taluks ; and

(*c*) the restrictions, if any, of the sale of pesticides at concessional rates?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The answer is in the affirmative.

(*b*) Sufficient stocks of pesticides are stocked in all the Agricultural depots in Tanjore district.

(*c*) Pesticides are sold at concessional rates in places which are declared pest affected.

SRI S. LAZAR : எல்லா ஜில்லாக்களிலும் பரவலாக பூச்சிகளால் பாதிக்கப்பட்ட பயிர்கள் உள்ள இடங்களில் ஆகாய விமானங்களிலிருந்து அப்பயிர்களுக்கு பூச்சி மருந்தைத் தெளிக்கும் முறையை அரசாங்கம் கையாளுமா? எல்லா ஜில்லாக்களிலும் அதற்கான வாய்ப்பை சர்க்கார் ஏற்படுத்துமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த முறையைக் கையாளுவதற்கான வாய்ப்பை அரசாங்கம் எல்லா ஜில்லாக்களிலும் ஏற்படுத்தலாம். அதற்குரிய ஒரு ஆகாய விமானம் இப்போது மத்திய அரசாங்கத்தினிடம் இருக்கிறது. இது ரஷ்யாவிலிருந்து வரவழைக்கப்பட்டது என்று நினைக்கிறேன். அதை நமக்குக் கொடுக்கவும் மத்திய சர்க்கார் தயாராயிருக்கிறார்கள். ஆனால் அதிகமான, பரந்த நிலப்பரப்பில் மருந்து தெளிப்பதற்குத் தான் இந்த முறை பயன்படும்.

[1st November 1958

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, this kind of concession or subsidy is not given to all kinds of pesticides. Will the Government consider the desirability of extending this concession to all categories of pesticides?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : If the hon. Leader of the Opposition would kindly write to me those particulars, I shall certainly look into them.

SRI M. C. MUTHUKUMARASWAMY : பயிர்கள் பூச்சிகளால் பாதிக்கப்பட்டிருக்கின்றனவா என்ற சோதனை பிரஸ்தாப தாலூகாக்களில் மட்டும் தான் செய்யப்பட்டிருக்கிறதா, அல்லது மற்ற தாலூகாக்களிலும் செய்யப்பட்டிருக்கிறதா ? இந்த சோதனை வருஷா வருஷம் நடக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் தமது மூலக் கேள்வியில் எந்தக் தாலூகாக்களைப்பற்றிக் கேள்வி கேட்டிருக்கிறார்களோ அவைகளைப்பற்றித் தான் நான் பதில் சொல்லமுடியும். எனவே தான் பிரஸ்தாப தாலூகாக்களை மட்டும் பதிலில் குறிப்பிட்டேன். எங்கெல்லாம் பயிர்கள் பரவலாக பூச்சிகளால் பாதிக்கப்பட்டிருக்கின்றனவோ அங்கெல்லாம் பயிர்களை பூச்சிகளினின்றும் காப்பதற்கான நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக்கொண்டுதான் இருக்கிறது.

SRI K. B. S. MANI : இந்தப் பூச்சி மருந்துகள் நல்ல பலனை அளிக்கக்கூடியவையாக இருந்தாலும் அவை விஷ மருந்துகளாக இருப்பதால் பல விவசாயிகள் அவைகளை உபயோகிப்பதில்லை. அவைகளை தகுந்தவாறு உபயோகிக்கத் தெரியாமல் அஜாக்கிரதையாக உபயோகித்தன் விளைவாக பல "பில்ட்மென்" களும் பல விவசாயிகளும் இறந்து போய்விட்டனர். இதைக் கண்டு பல விவசாயிகள் பூச்சி மருந்துகளை உபயோகிக்கப் பயந்து பூச்சிகளால் பாதிக்கப்பட்ட பயிர்களுக்கு மருந்து தெளிக்காமல் அவைகளை அப்படியே விட்டுவைக்கின்றனர். இதன் காரணமாக அவர்களுக்கு போதிய மகசூல் கிடைப்பதில்லை. அப்படிப்பட்ட நிலங்களின் சொந்தக்காரர்கள் கொடுக்க வேண்டிய வரியை வஜா செய்ய அரசாங்கம் உத்தேசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எல்லா பூச்சி மருந்துகளுமே அவ்வளவு ஆபத்தானது என்று சொல்வதற்கில்லை. எல்லா பூச்சி மருந்துகளுமே ஆபத்தானது என்று சொல்வது, விவசாயிகளிடையே அனாவசியமான பீதியைத்தான் உண்டுபண்ணும். ஒன்றிரண்டு மருந்துகள் மிகவும் ஜாக்கிரதையாக உபயோகிக்கப்பட வேண்டியவை. அவைகளை ஜாக்கிரதையாக உபயோகிக்க வேண்டுமென்று அப்போதைக்கப்போது பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது. ஆபத்து நேரிடுமோ என்ற பயத்தால் விவசாயிகள் பூச்சி மருந்துகளை உபயோகிக்கவில்லை என்று சொல்லி வரிவஜா கேட்பது சரியல்ல.

SRI S. M. ANNAMALAI : பயிர்களில் பூச்சி நோய் அதிகமாகப் பரவுவதற்குக் காரணம் உடனடியாக தடுப்பு நடவடிக்கை எடுக்காதது தான். உடனடியாக நடவடிக்கை எடுக்காததற்குக் காரணம், போதிய பூச்சி மருந்துகளும், போதிய சிப்பந்திகளும், போதிய "ஸ்ப்ரேயர்" களும் அரசாங்கத்திடம் இல்லாதது தான். ஸ்ப்ரேயர்களை அதிகரிக்க வேண்டுமென்று சர்க்காருக்கு விவசாய இலாகாவில் மூலம் விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. பூச்சி மருந்துகளையும், ஸ்ப்ரேயர்களையும் சிப்பந்திகளையும் அதிகரிக்க சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பூச்சி மருந்துகளைப் பரவலாகத் தெளிக்க வேண்டுமானால், நல்ல ஸ்ப்ரேயர்களை உபயோகிக்க வேண்டும் ; ஸ்ப்ரேயர்கள் நன்றாக இயங்கக்கூடிய நிலைமையில் இருக்க வேண்டும். ஜப்பானில் கூட வருஷா வருஷம் ஸ்ப்ரேயர்களை உபயோகிக்

1st November 1958]

கிறார்கள். அந்த வேலை சம்பந்தப்பட்ட ஜப்பான் நிபுணர்கள் இந்த உண்மையைத் தெரிவித்திருக்கிறார்கள். ஸ்ப்ரேயர்களை அதிகரிப்பதில் அரசாங்கம் கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறது.

SRI T. SAMPATH : பிரஸ்தாப நான்கு தாலூகாக்களில் மட்டும் எப்போதும் பூச்சி நோய் வருவதற்குக் காரணம் என்ன ? பயிர் களுக்குப் பூச்சி நோய் வருவதற்கான காரணங்களை அரசாங்கம் கண்டு பிடித்திருக்கிறதா ? அதற்கான ஆராய்ச்சியை அரசாங்கம் செய்திருக் கிறதா ? செய்திருந்தால், பயிர்களுக்குப் பூச்சி நோய் வருவதை நிரந்தர மாகத் தடுப்பதற்கு அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்யப்போகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தத் தாலூகாக்களில் தான் பயிர்களுக்குப் பூச்சி நோய்கள் வருகின்றன என்பது சரியல்ல. அந்தத் தாலூகாக்களைப்பற்றி மட்டுமே மூலக் கேள்வியில் கேட்கப்பட்டிருந் தால், அவைகளில் பயிர்களுக்கு பூச்சி நோய்கள் வருகின்றன என்று சொன்னேன். மற்ற தாலூகாக்களிலும் பயிர்களுக்கு பூச்சி நோய்கள் வருகின்றன. அந்த நோய்களின் பெயர்கள் என்னவென்றால் **stem borer, green jassid, fulgorid, rice mealy bug, field rates** இந்த நோய்களிலிருந்து பயிர்களைப் பாதுகாக்க நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : ரசாயன உரங்களை அளவிற்கு மிஞ்சிப் போடுவதால் பயிர்கள் பூச்சிகளுக்கு அதிகமாக இரையாகின்றன என்பது உண்மை தானா ? ரசாயண உரங் களை கிரகித்துக்கொள்வதால், பயிர்களுக்குப் பூச்சி நோய்களை எதிர்க்கும் சக்தி குறைகிறது என்பது உண்மை தானா ? அப்படியானால் இந்தப் பிரச்னையைத் தீர்க்க அரசாங்கத்தார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார் கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : உற்பத்தியை அதிகரிப் பதற்கு ரசாயன உரங்களைப் போட வேண்டுமென்ற ஒரு கருத்து இருந்து வருகிறது. ரசாயன உரங்களை கிரகித்துக்கொள்ளும் பயிர்களுக்கு நோய் களை எதிர்க்கும் சக்தி குறைகிறது என்ற மற்றொரு கருத்தும் நிலவுகிறது. ஒன்றுக்கொன்று முரணான இந்த இரண்டு கருத்துக்களும் " கல்யாணம் பண்ணினால் பைத்தியம் தெளியும், பைத்தியம் தெளிந்தால் தான் கல்யாணம் பண்ணலாம் " என்ற கருத்துக்களைப் போல் இருக்கின்றன. (சிரிப்பு). உற்பத்தியை அதிகரிப்பதற்கு எல்லா ரசாயன உரங்களையும் போட வேண்டியதில்லை. தகுந்த ரசாயன உரங்களைப் போடலாம். ரசாயன உரங்களைப் போடுவதன் விளைவாக பயிர்களுக்கு பூச்சி நோய்கள் வந்தால், அப்போது அந்த நோய்களை நீக்குவதற்கான நடவடிக்கைகளை எடுக்கலாம்.

MR. SPEAKER : இந்தக் கேள்விக்குப் பல உப கேள்விகள் போடப்பட்டுவிட்டன. இன்னும் பல கேள்விகள் போடப்பட வேண்டியிருக் கின்றன. ஆகவே இந்தக் கேள்விக்கான உப கேள்விகள் இத்துடன் முடியட்டும். அடுத்த கேள்வியை எடுத்துக்கொள்வோம்.

### *Export of hides and skins*

* 790-A *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1951 முதல் 1957-வது ஆண்டு வரை நமது இராஜ்யத்தி லிருந்து—

(1) என்னென்ன

(2) எவ்வளவு மதிப்புள்ள

(3) எந்தெந்த நாடுகளுக்கு தோல் ஏற்றுமதி ஆகிறது ?

[1st November 1958

(ஆ) அதில், பதனிட்ட தோல்; பதனிடாத தோல் எவ்வளவு?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement[a] is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : நம் ராஜ்யத்தில் 600 தோல் பதனிடும் தொழிற்சாலைகள் இருந்தாலும், அவைகளில் 1/3 பங்காகிய 200 தொழிற்சாலைகளே இயங்கி வருவதற்குக் காரணம், வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் தோல் எல்லாம் மற்ற ராஜ்யங்களிலிருந்தே ஏற்றுமதியாவது தான்.

MR. SPEAKER : காரணம் உங்களுக்குத் தெரிந்திருந்தால் நீங்கள் ஏன் உப கேள்வி போடவேண்டும்? கேள்வியைச் சுருக்கமாகப் போடுங்கள். ஏனென்றால் இது கேள்வி நேரம். பல கேள்விகள் இன்னும் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : However, I may give this information, Sir.

There has been general increase in the export of tanned leather during the period from 1952–53 to 1955–56 due to good demand in the United Kingdom. In 1956–57, the export declined sharply due to the following reasons :

(*a*) poor demand from the United States of America;

(*b*) release of stock held by Government in United Kingdom;

(*c*) keen competition of Indian Chrome Leather rubber, synthetics resulting in a fall in demand from overseas markets;

(*d*) good demand for inferior varieties of tanned leather in local markets.

The general fall in the export of untanned leather during 1952–53 to 1956–57 except for the increase in export in 1954–55 is attributed to good demand from local tanners. In 1954–55, however, there was keen demand from Australia, New Zealand and Western Germany and as a result, exports recorded an increase during that year.

SRI V. K. KOTHANDARAMAN : வெளிநாடுகளுக்கு அனுப்பப் படும் தோல் நம் ராஜ்யத்திலிருந்து சென்றால் நமக்கு 3 கோடி ரூபாய் வருமானம் கிடைக்கும். வெளி நாடுகளுக்கு அனுப்பப்படும் தோல் இந்த ராஜ்யத்திலிருந்து அனுப்பப்பட வேண்டுமென்று மத்திய சர்க்காருக்கு வற்புறுத்தி இந்த ராஜ்யத்தில் இந்த தொழிலை அபிவிருத்தி செய்ய ராஜ்ய சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதை நாம் மத்திய சர்க்காருக்கு ஏன் வற்புறுத்த வேண்டுமென்று எனக்குப் புரியவில்லை.

SRI N. MARUDACHALAM : தோல் தொழில் நிபுணர்கள் இந்தியா பூராவும் ஆராய்ந்து திண்டுக்கல், கோவை போன்ற முக்கியமான இடங்கள் தான் தோல் தொழிலுக்கு உகந்த இடங்கள் என்று அரசாங்கத்திற்கு சிபார்சு செய்திருக்கிறார்களா? அதன் மேல் அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றி என்னிடம் தகவல் இல்லை. தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்கிறேன்.

---

[a] Printed as Appendix V on pages 370–374 infra.

1st November 1958]

SRI A. VEDARATHNAM : அன்னிய நாடுகளில், ரஷ்யா போன்ற யிடங்களில் " பினிஷ்ட் சூட்ஸ்" க்கு நிரம்ப கிராக்கி இருக்கிறபடியால் எதற்காக " ரா ஸ்கின்"யை ஏற்றுமதி செய்யவேண்டுமென்று கேட்கிறேன். ஆகவே அரசாங்க பாக்டரிகள் மூலம் " பினிஷ்ட் ஆர்ட்டிகிள்ஸ் " யை அனுப்ப அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஓரளவு அதையும் பயன்படுத்திக் கொள்ளலாம். இருந்தாலும் இந்த ஏற்றுமதியையும் பாதிக்கச் செய்வது சரியல்ல.

SRI A. A. RASHEED Sir, is the Minister aware that due to large exports of raw skins to Australia and other countries, our South Indian tanneries are depleted of the raw skins and if so, will the Government recommend to the Government of India that if they cannot completely ban the export of the skins, they should at least levy a cess on the export of such raw skins ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, if the hon. Member puts a separate question, I shall look into it.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக்கூடிய அளவிற்கு நம்மிடம் அதிக உற்பத்தியிருக்கிற போது வெளிநாடுகளில் இருந்து சிலவகைத் தோல்களை நாம் இறக்குமதி செய்யவேண்டியதன் அவசியம் என்ன ? அதற்கு காரணமென்ன ? அந்தத் தோல்களை நமக்கு தேவையான முறையில் இங்கே நாமே மாற்றி அமைத்துக்கொள்ள ஏதாவது ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சில தோல்கள் நமக்கு வேண்டியிருக்கிறது நம் தொழிலுக்கு. ஆகவே அவைகளை இறக்குமதி செய்வதைத் தவிர்ப்பதற்கு இல்லை.

SRI M. JAGANNATHAN : Sir, may I know whether there is any foreign demand for the skins of reptiles particularly for the skins of snakes like the cobras ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. There is very great demand for them. But we have first to look to our requirements.

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : நம்முடைய அன்னிய செலாவணிக்கு மிகவும் நஷ்டம் இருக்கிற இந்த நாளில் ஹைட்ஸ்-ஐ வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்கிறோம். சின்னச் சின்ன துண்டுகளை இறக்குமதி செய்கிறோம். அவை " கஞ் " செய்ய நல்லது என்று சொல்லப்படு கிறது. அதை நாமே இங்கு செய்யக்கூடாதா ? அதற்கு ஏன் நாம் நமது அன்னிய செலாவணியை அனாவசியமாகச் செலவு செய்யவேண்டும், அதற்கு ஏதாவது ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இறக்குமதியை எந்தளவு தவிர்க்க முடியுமோ அந்தளவு அதில் கவனம் செலுத்தப் பட்டு வருகிறது, ஆனால், ஓரளவு நாம் சில பொருள்களை இறக்குமதி செய்வதின் மூலம் நமது ஏற்றுமதியும் அதிகப்படும்.

[1st November 1958

*Import of hides and skins*

* 790-B *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1951-ம் வருஷம் முதல் 1957-ம் வருஷம் வரை நமது ராஜ்யத்திற்கு வெளிநாடுகளிலிருந்தும் வெளி ராஜ்யங்களிலிருந்தும் எவ்வளவு மதிப்புள்ள பதனிடாத என்னென்ன தோல்கள் இறக்குமதி செய்யப்பட்டன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement [a] is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : Raw skins and hides-களை வெளி தேசங்களில் இருந்து இறக்குமதி செய்து கொண்டிருந்ததை விட இப்பொழுது அதிகப்படியான இறக்குமதி செய்யப்படுகிறது என்று புள்ளி விவரங்கள் கூறுகிறது. அதேபோன்று நமது தேசத்தில் மற்ற ராஜ்யங்களிலிருந்து 1953–54-ம் ஆண்டில் 2½ கோடியாகயிருந்து 1½ லட்சமாக இறக்குமதி செய்யக்கூடிய அளவிற்கு குறைந்திருக்கிறது. ஆகவே வெளி தேசங்களில் இருந்து இறக்குமதி செய்வதைத் தடுத்து நம் தேசத்தில் உள்ள மற்ற ராஜ்யங்களிலிருந்து அவைகளை வரவழைக்க உடனடியாக ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் குறிப்பிட்டதை வரவேற்கிறேன். இறக்குமதியைக் குறைத்து ஏற்றுமதியை அதிகப்படுத்தும் விஷயத்தில் கவனம் செலுத்தப்பட்டுத்தான் வருகிறது.

*Assignment of lands in North Arcot district*

* 790-C *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில் தாலூக்கா, கிராமவாரியாக எத்தனை ஏக்கர்—

(1) தீர்வை ஏற்படாத புஞ்சை.

(2) அனுதீனம்.

(3) பஞ்சம தரிசு.

(4) ஆட்சேபணையில்லாத புறம்போக்கு நிலம் உள்ளன ?

(ஆ) இவைகளைப் பட்டா செய்யவேண்டுமென்று எத்தனை மனுக்கள் 1957-ல் வந்தன?

(இ) அவைகளின் நிலை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : *(a)* to *(c)* The Government consider that no useful purpose will be served by furnishing the particulars desired.

SRI S. M. ANNAMALAI : இந்த பஞ்சம தரிசு நிலங்கள் அதிகமாக இருக்கிறது. அவைகளை ஜாரி செய்து, பட்டா செய்து கொடுக்கவேண்டுமென்றால் அதிக காலதாமதமாகிறது. ஆகவே, ஒவ்வொரு தாலுகாவிற்கும் ஒரு டெப்டி தாசில்தார் வீதம் நியமித்து ஜாரி செய்து கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதை, சர்க்கார் ஏற்கெனவே செய்திருக்கிறது. முன்பே, செங்கம் தாலூக்கா, திருவண்ணுமலை தாலூகாக்களில் ஸ்பெஷல் சிப்பந்திகள் நியமிக்கப்பட்டு, இப்பொழுது போளூர், அரக்கோணம், வேலூர் போன்றவிடங்களில் இவைகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

---

[a] Printed as Appendix VI on pages 375–377 infra.

1st November 1958]

*Starting of factories for giving training to Harijans*

* 790-D *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri P. G. Manickam) : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

ஹரிஜனங்களுக்குப் பயிறசி கொடுப்பதற்காக எந்தெந்த இடங்களிலே என்னென்ன தொழிற்சாலைகள் (i) 1957–58-ல் ஏற்படுத்தப்பட்டன ? (ii) 1958–59-ல் ஏற்படுத்த உத்தேசம் ?

THE HON. SRI P. KAKKAN : (i) & (ii) No factory has been opened in 1957–58 or proposed to be opened in 1958–59 for providing training specially to Harijans.

*Municipal Council Chairman, Ootacamund*

* 790-E *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the Government have received any petition in March 1958 from a Municipal Councillor of Ootacamund requesting permission to prosecute the Chairman of the Municipal Council of Ootacamund; and

(*b*) if so, whether permission has been granted?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Yes, Sir.

(*b*) No, Sir.

SRI M. JAGANNATHAN : Sir, was the permission that was sought was for taking legal action against the Ootacamund Municipal Chairman?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, we received a complaint from the Ooty Municipality and on enquiry we found that it was not based on facts. So the enquiry was stopped and they were not allowed to proceed with the case.

*Ootacamund Municipality*

* 790F *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether number of complaints were received about the Municipality of Ootacamund that in their minutes book some alterations were made without the approval of the Council in the proceedings of the Council, dated 3rd July 1957; and

(*b*) if so, what action has been taken thereon?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) The Government received complaints from two Municipal Councillors of Ootacamund.

(*b*) The complaints were examined in consultation with the Collector of the Nilgiris and the Inspector of Municipal Councils and Local Boards, Madras, and the Government agreed with the views of the Collector and the Inspector of Municipal Councils and Local Boards that the irregularities pointed out by the complaints were not established.

[1st November 1958

SRI K. SATTANATHA KARAYALAR : வந்திருக்கக்கூடிய புகார்களில், நிகழ்ச்சிநிரல் தமிழில்கூட கொடுக்கப்படவில்லை என்பதும் ஒன்றாகும். அந்த அடிப்படையில் வந்த பராதிகள் மீது அவர்கள் ஹைக்கோர்ட் வரை போய் தீர்ப்பு வாங்கி வந்துள்ளார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அதைப்பற்றி தனிக் கேள்வி கேட்கவும். "இர்ரெகுலாரிட்டீஸ்"-ஐப் பொருத்தமட்டும் கலெக்டர் மூலமாகவும், இன்ஸ்பெக்டர் ஆப் லோக்கல் போர்ட்ஸ் மூலமாகவும் விசாரித்ததில் அவர்கள் அதைக் கோர்ட்டிற்கு கொண்டு போய் முடிவு எடுக்கவேண்டிய அவசியமில்லை என்று தெரியப்படுத்தினதால் கோர்ட்டிற்குப் போக அனுமதி கொடுக்கவில்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, inasmuch as there has been a lot of complaint against this body, will the Government appoint a special officer to make an enquiry and submit a report to the Government?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அதைப்பற்றி இப்பொழுது ஆலோசனையில்லை. ஆனால் அது கவனிக்கப்படும்.

SRI K. ANBAZHAGAN : இங்கு கொடுக்கப்பட்டுள்ள கேள்வியை யொட்டி அமைச்சர் அவர்கள் பதில் அளிக்கும்போது, உதக மண்டல நகராட்சி மன்றத்தார்மீது எந்தவிதமான வழக்கும் நடைபெற்று ஒரு முடிவிற்கு வந்ததாக தெரியவில்லை. தமிழில்தான் அச்சிடப்பட வேண்டுமென்று உயர்நீதி மன்றத்தில் தீர்ப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. இத் தீர்ப்பு வந்து ஏறத்தாழ இரண்டு மூன்று மாதங்களாகிறது. அது குறித்து அமைச்சர் அவர்களின் தெளிவான பதிலையே அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : நடவடிக்கைகள் எடுக்கவில்லை என்று நான் சொல்லவில்லை. தலைவரை மாற்றுவதற்கோ அல்லது அவர்கள் மேல் நடவடிக்கை எடுப்பதற்கோ தகுந்த காரணமில்லை என்றுதான் கூறப்பட்டது.

SRI K. SATTANATHA KARAYALAR : ஒரு இலாகாவின் மீது ஒரு குற்றச்சாட்டு வந்தால் அதுபற்றி ஹைக்கோர்ட் வரை போய் தீர்ப்பு வரும் வரை காலதாமதம் செய்யாமல் சம்பந்தப்பட்ட இலாகாவே அதன் பேரில் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள இனிமேலாவது ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இப்பொழுதும் தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டுதான் வரப்படுகிறது. மேலும் அப்படி எடுக்கப்படும்.

*Rise in the prices of foodstuffs*

790-G *Q*.—SRI K. VINAYAKAM AND SRI M. P. SARATHI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government are aware of the rise in prices of foodstuffs in the City of Madras;

(*b*) what steps the Government propose to take to control the rise in the prices of foodstuffs; and

(*c*) what are the causes for such general rise in prices?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The answer is in the affirmative.

1st November 1958]

(b) The Government are watching the price trends and are constantly revising the position. The fair prices shop organization is kept intact on a small scale to meet any emergency. At present wheat is sold at fair price in these shops.

(c) Increase in prices during the present lean months is usual. Further with the sharp increase in food prices in North India, there has been a sympathetic trend in Southern States also.

* 790-H *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether there is any proposal to curb the soaring prices of food and food articles in this State; and

(b) if so, the details of the same?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) Increase in prices of foodgrains during the present lean months is usual. Further, recently the prices of foodgrains have gone up in North India and there has been a sympathetic trend in the prices in the Southern States also. The Government are carefully watching the situation. The fair price shop organization is kept intact on a small scale to meet any emergency.

MR. SPEAKER : It is now 10 o'clock and we have got about six more questions. We shall take five more minutes and dispose of them.

SRI K. VINAYAKAM : Sir, do the Government believe that there is reasonable possibility of bringing the prices down in the near future?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I would not like to give any forecast about the future. But the Government are taking all possible steps to check the rise in the price.

SRI K. ANBAZHAGAN : தஞ்சை மாவட்டத்திலும் பிற இடங்களிலும் விலைவாசிகள்மட்டும் திடீரென்று 10 நாட்களுக்குள் உயர்ந்திருக்கின்ற காரணத்தினாலும், அவர்களுக்கு வரக்கூடிய வருமானம் குறைவாக இருக்கின்ற காரணத்தினாலும், பல கிராமப் பகுதிகளில் மக்கள் உணவுப் பொருள்கள்கூட வாங்க முடியாமல் திண்டாடுகிறார்கள். இப்படி திடீரென்று ஏற்பட்ட விலைவாசி உயர்வைச் சமாளிக்க அரசாங்கம் என்ன செய்யப்போகிறது ? 10-00 a.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : திடீரென்று அதிகமாக விலை ஏறவில்லை. அரசாங்கத்திற்குக் கிடைத்திருக்கக் கூடிய தகவல் அதுதான். இருந்தாலும் இது மாதிரி கிராமங்களில் இருப்பவர்களுக்கு அதிகக் கஷ்டம் இருப்பதாகத் தெரியவில்லை.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இப்போது இருக்கும் விலையே விவசாயிகளுக்குக் கட்டுபடியாகவில்லையென்று விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள் என்பதை அரசாங்கம் அறியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது இருக்கும் விலை அதிகவிலை. அதிக விலையை கட்டுப்படுத்தவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் அபிப்பிராயம். ஓர் அளவுக்கு மேல் விலை குறைந்தால், அப்போது அரசாங்கம் தலையிட வேண்டியிருக்கும்.

[1st November 1958

SRI R. SRINIVASA IYER : தற்போது அறுவடையாகி யிருக்கும் குருவை நெல் 21 ரூபாயிலிருந்து குறைந்து 17 ரூபாயாக விற்பது அரசாங்கத்திற்கு தெரியுமா ? விலை குறைந்திருப்பதும் அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : குறைந்திருக்கிறது என்று சொல்ல முடியாது. ரூபாய் 17 தான் என்று சொல்வதற்கில்லை. மாறிக் கொண்டேயிருக்கிறது. பதினேழு ரூபாயிலிருந்து 20 ரூபாய் வரை ஏறுவதும் குறைவதுமாக இருக்கின்றது.

SRI K. B. S. MANI : இந்த விலையேற்றத்தால், 10-ல் ஒரு பங்கு இருக்கும் மிராசுதார்களும், 10-ல் ஒரு பங்கு இருக்கும் விவசாயத் தொழிலாளர்களையும் தவிர, 10-ல் எட்டு பங்கு இருக்கக்கூடிய பாக்கி மக்கள் தான் அவதிப்படுகிறார்கள் என்பதை அரசாங்கம் அறியுமா ? இதை யொட்டி விலையேற்றத்தைக் குறைக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நிலச் சொந்தக்காரர்கள், குத்தகைக்காரர்கள், மற்ற விவசாயத் தொழிலாளர்கள் 10-ல் இரண்டு பங்குதான் இருக்கிறார்கள் என்று தஞ்சை ஜில்லாவிலிருந்து, அதுவும் கிராமப் பகுதியிலிருந்து வரக்கூடிய பிரதிநிதி சொல்வதை ஒப்புக்கொள்ள முடியாது. பெரும்பாலும் இந்த விலை விவசாயிகளை பாதிக்கிறது. விவசாயிகள்தான் கிராமங்களில் அதிகமாக இருக்கிறார்கள்.

SRI M. P. SARATHI : அமைச்சர் அவர்கள் பதிலளிக்கும்போது உடனடியாக விலை ஏறவில்லை என்று சொன்னார்கள். சென்ற வருஷம் அக்டோபர் மாத உணவு புள்ளிவிவரம் என்ன என்பதையும் இந்த அக்டோபர் மாதத்திய புள்ளி விவரம் என்ன என்பதையும் அமைச்சர் அவர்கள் சொல்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சென்ற வாரத்தில் வட ஆற்காடு மாவட்டக் கலெக்டர் அவர்கள் சென்னைக்கு வந்திருந்தபோது அவரிடம் விசாரித்தேன். அரிசி விலை ரூபாய் ஒன்று, 15 அணா என்றுதான் இருக்கிறது. மற்ற விலைவாசிகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் ரொம்ப அதிகமாகப் போய்விட்டது என்று சொல்ல முடியாது.

SRI S. RAMAKRISHNA THEVAR : சபா நாயகர் அவர்களே, விலைவாசிகள் கட்டுப்பாடு கொண்டுவர வேண்டியது அவசியமெனக் கருதினாலும் விவசாயம் செய்வதற்கு வேண்டிய இதரப் பொருள்களின் விலை விஷம் போல ஏறுவதைத் தடுக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுக்க உத்தேசித்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது பொதுவான கேள்வி. இதற்கு விவரமாகப் பதிலளிக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பதற்கில்லை.

(Sri P. G. Karuthiruman was sitting in the Officials' Gallery and talking with the officials there.)

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, on a point of order. An hon. Member of this House is making noise from the Officials' Gallery. Will the Chair kindly ask him not to make noise?

MR. SPEAKER : (turning to the Officials' Gallery) : I do not think he is making noise. I think he can sit anywhere within this House.

1st November 1958]

SRI T. SAMPATH : May I know whether the Government have any intention of fixing floor and ceiling prices for not only paddy and rice but also other foodstuffs?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, Government have not taken any decision in the matter. Therefore, I am sorry I am not able to answer the question.

SRI T. KARIA GOUNDER : தலைவர் அவர்களே, உணவு விலைகள் உயர்ந்திருக்கிறது என்று கையைத் தூக்கி கேள்வி கேட்டார்கள் பல அங்கத்தினர்கள். உணவு உற்பத்தி செய்கிறதிலே ஏற்படுகிற செலவினைப் பார்த்து விவசாயிகளுக்குத் தனியாகச் சலுகை காண்பிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது விவசாயச் செலவு அதிகமாகத் தான் இருக்கிறது. என்றாலும் இப்போது இருக்கின்ற விலைவாசியை கவனித்துப் பார்த்தால் விவசாயிகள் ஒன்றும் வருத்தப்படுவதற்கில்லை. சமாளித்து விடுகிறார்கள்.

SRI S. M. ANNAMALAI : இந்தக் கேள்வி ஒரு முக்கியமான கேள்வி. ஆகையால் இதற்கு அரை மணி நேரம் ஒதுக்கி விவாதிக்க அனுமதிக்க வேண்டுமென்று சபாநாயகர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER : இப்போதே அதிகமான கேள்விகள் போட்டாகி விட்டது. இது வரை 20 உப கேள்விகளுக்கு மேல் போடப்பட்டிருக்கும். இன்னும் சில கேள்விகளுக்கு அனுமதிக்கிறேன். அரை மணி நேர விவாதம் தேவையில்லை என்று எண்ணுகிறேன்.

SRI S. M. ANNAMALAI : இது மிகவும் முக்கியமான ஒரு விஷயம். ஆகையால் தயவு செய்து அரை மணி நேர விவாதம் செய்ய அனுமதிக்கவேண்டுமென்று நான் மறுபடியும் கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER : நேற்று கனம் அமைச்சர் அவர்கள் என்ன சொன்னார்கள் ? டில்லிக்குப் போய் எல்லா மாகாண மந்திரிகளுடனும் ஒரு கூட்டத்தில் பேசப் போவதாகவும், அதற்கு பிறகு வேண்டுமானால் இதைப் பற்றி இந்த சபையிலே விவாதிக்கலாம் என்றும் சொன்னார்கள். அதற்கு நான் ஒப்புக் கொண்டேன். இல்லை யென்றால் நேற்று அன்பழகனுடைய ஒத்திவைப்புத் தீர்மானத்தின்மேல் விவாதிப்பதற்கு ஒத்துக் கொண்டிருக்கலாமே ? இது வரைக்கும் 20 உப கேள்விகள் கேட்டாகி விட்டன. இன்னும் 5 கேள்விகள் கேட்க அனுமதியளிக்கிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த சமயத்தில் அறுவடைக்குப் பிறகு உணவுப் பொருள்களில் கணிசமான அளவு பாங்குகளில் அடமானம் வைக்கப்பட்டிருக்கின்றது. இதைத் தடுக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கின்றது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தமிழ் நாட்டைப் பொருத்த மட்டில் அறுவடை செய்யப்பட்ட தானியங்கள் பதுக்கப் பட்டிருக்கிறது. பாங்குகளின் உதவி பெற்று விற்பனைக்கு வராமல் இருக்கிறது என்று சொல்வதற்கில்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : விவசாயிகள் சாகுபடி செய்வதற்கு முக்கியமாக வேண்டிய உரங்கள், பிண்ணாக்கு, சல்பேட் அம்மோனியா போன்றவைகளின் விலைகளெல்லாம் நாளுக்கு நாள் விஷம் போல ஏறுவதைத் தடுக்க என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அம்மோனியம் சல்பேட்டைப் பொறுத்தமட்டில் அதிக விலைக்கு அரசாங்கம் வெளி நாடுகளிலிருந்து வாங்கினாலும் குறைந்த விலைக்குக் கொடுக்கிறார்கள். நான்

[1st November 1958

முன்பு கூறியது போல விலைவாசியைத் தடுக்க சில விஷயத்தில் தகுதி யான ஏற்பாடு செய்ய முடியும். இப்போது இருக்கும் தானிய விலைவாசி களைப் பற்றி உண்மையில் அதிகமாக விவசாயிகள் கவலைப்பட வேண்டிய தில்லை.

SRI A. A. RASHEED : Is there any proposal to take punitive action against the hoarders and blackmarketers of foodstuffs?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I may tell the hon. Member that so far as this State is concerned, we need not exaggerate this question of hoarding and blackmarketing. There is no such thing here.

SRI S. LAZAR : ஆன் எ பாய்ன்ட் ஆப் ஆர்டர், ஸார். இந்தப் பக்கத்தில் இருப்பவர்களுக்கு கைகளைத் தூக்கித் தூக்கி கைகளெல்லாம் வலியெடுத்துப் போய்விட்டது. சபாநாயகருடைய கண்ணைக் கவர முடிய வில்லை. இதற்கு (to catch the Speaker's eye) சபாநாயகர் வேறு ஏதாவது ஒரு புதிய முறையை ஏற்படுத்தினால் சௌகரியமாக இருக்கும். (சிரிப்பு).

MR. SPEAKER: எங்கேயும் இந்த முறைதான் இருக்கின்றது. உலகத்திலேயே இத்தனை நாட்களாக வேறு ஒரு புது முறையையும் கண்டு பிடிக்க முடியவில்லை. (சிரிப்பு.)

SRI K. S. G. HAJA SHERIFF : Sir, is it not a fact that one of the major reasons for the rise in prices is due to the heavy cost of production which has gone up very high? If so, will the Government consider the possibility of freezing the wages of labourers?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, it is true one of the reasons for the rise in prices is the increase in the cost of production. Therefore, the other question does not arise.

SRI K. VINAYAKAM : ஸார், நம்முடைய அமைச்சர் டில்லிக் குப் போய் மற்ற மாகாண அமைச்சர்களோடு கலந்து பேசி விலை ஏறாமல் பார்த்துக் கொள்ள முடிவான திட்டம் செய்யும் வரையில் சென்னையில் விலை ஏறாமல் தடுக்க உத்திரவாதம் அளிப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்கள் மிகுந்த அனுபவம் வாய்ந்தவர். அவர் குறிப்பாக ஏதாவது யோசனை சொன்னால் அதை நான் கவனிக்கிறேன். (சிரிப்பு.)

SRI R. CHIDAMBARA BHARATHI : உணவு உற்பத்தியில், முக்கியமாக நெல் உற்பத்தியில் ஆகும் செலவைப் பார்த்தால் நெல் விலை குறைவாக இருக்கிறது என்று கூறினார்கள். பிண்ணாக்கு, மற்றும் இதரப் பொருள்களின் விலை முன்பு இருந்த விலையைவிட இப் போது அதிகமாக இருக்கிறது என்று அறிந்திருப்பார்கள் என்று நினைக்கி றேன். விவசாயத்துக்கு வேண்டிய பொருள்களை குறைந்த விலைக்குக் கொடுக்க ஏற்பாடுகள் செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விலைவாசி இருக்கும் நிலைமையில் விவசாயிகளுக்கு ஆகும் செலவு கட்டுப்படியாகிறது. இன்கம்-டாக்ஸ் என்று பயப்படுகிறார்கள். இப்போது கட்டுப்படியாகிறது என்று சொன்னேன். அம்மோனியம் சல்பேட் விலை கட்டுப்படுத்தப்பட் டிருக்கிறது. மற்ற விஷயத்திலே எப்படிக் கட்டுப்படுத்துவது என்று பரிசீலனை செய்யப்பட்டு வருகின்றது. விலை கொடுத்து வாங்கிச் சாப்பிடுகிறவர்களுக்கு

1st November 1958]

விலை குறைக்கவேண்டுமென்று சொல்வதற்கும், விவசாயத்திற்கான செலவைக் குறைக்கவேண்டுமென்று சொல்வதற்கும் சம்பந்தம் இல்லை என்று சொல்கிறேன்.

SRI R. SWAMINATHA MERKONDAR: தலைவர் அவர்களே, தஞ்சை ஜில்லாவிலே பெரும்பாலான விவசாயிகள் நெல்லை விற்றுத் தான் தங்களுக்கு வேண்டிய இதர சாமான்களை வாங்கும் நிலையில் இருக்கிறார்கள். இதர சாமான்களின் விலை உயர்வைத் தடுக்க அரசாங்கம் முன் வருமா என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இப்போது முக்கியமான முதல் பிரச்னை உணவு தானிய விலை ஏற்றத்தைத் தடுப்பதுதான். மற்ற சாமான்களின் விலையேற்றத்தைத் தடுக்க பிறகு தான் நடவடிக்கை எடுக்க வேண்டும். உணவு தானிய விலையேற்றத்தைத் தடுப்பதில் தான் முதலில் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது.

SRI V. SUBBIAH: இன்றைய விலைவாசிகளை எடுத்துக்கொண்டால், குறிப்பாக இரும்பு விலையை எடுத்துக் கொண்டால், 6 அணுவாக இருந்த கொழு 2 ரூபாயாக விற்கப்படுகிறது. 10 அணுவாக இருந்த மண்வெட்டி 3 ரூபாயாக விற்கப்படுகிறது. வண்டிக் கட்டு 7 ரூபாயாக இருந்தது, இப்பொழுது 70 ரூபாயாக விற்கப்படுகிறது. இதை எல்லாம் அரசாங்கம் கவனித்து விவசாயிகளுக்கு இவைகள் நியாயமான விலையில் கிடைப்பதற்கு அரசாங்கம் முயற்சி செய்யுமா ? விவசாய இரும்புக் கோட்டாவை அதிகப்படுத்தி நல்ல முறையில் வினியோகிக்க வேண்டுமென கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத்தினர் கூறுவது உண்மைதான். இருந்தாலும் உணவு தான்யங்களின் விலையைக் குறைக்கவேண்டுமென்கிற அவசியத்தை மறுக்கமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

*Medicinal plants*

* 790-I *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY: கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

சித்த-யூனனி-வைத்தியங்களுக் குகந்த உயர்ந்த பச்சிலைகள் பயிரிட அரசாங்கத்தார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU: The required plants are cultivated in the Medical Farm at Arumbakkam and also in a small garden in the compound of the College of Integrated Medicine.

SRI K. SATTANATHA KARAYALAR: சப்தகிரந்தா, அமிருத கிரந்தா போன்ற மூலிகைகளை, இரத்த அழுத்தத்திற்காக பென்சிலின் போன்ற anti-biotics-களுக்குப் பதிலாக உபயோகப் படுத்தலாமென்று மத்திய ஆராய்ச்சிக் கழகம் சிபார்சு செய்திருக்கிறது. ஆகவே, இவைகளைப் பயிரிடுவதற்குத் திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: அவைகளையும் பயிர் செய்துக் கொண்டுதான் வருகிறோம். காட்டு இலாக்காவினரும் மற்ற இலாக்காவினரும் பயிர் செய்கிறார்கள்.

SRI M. D. THIAGARAJA PILLAI: சித்த வைத்தியம், யூனனி வைத்தியம் இவைகளுக்கு மூலிகைகள் முக்கியமானதாக இருப்பதனாலும், இவைகள் பயிரிடுவது குறைவாக இருப்பதனாலும், இது சம்பந்தமாக

[1st November 1958

அரசாங்கம் ஒரு உத்தியோகஸ்தரை நியமித்து, அறிக்கை சமர்பிக்கும்படி செய்து, அதை வெளியிடுவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது மூலிகைகள் பயிரிடுவதைப் பற்றியது. விஸ்தரிக்கப்பட்டுத் தான் வருகிறது. இப்பொழுது இரட்டிப்பாகச் செய்து வருகிறோம்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : என்னென்ன பச்சிலைகளைத் தயாரித்து வருகிறார்கள் என்ற பட்டியலை சபை முன்பு வைக்க கனம் அமைச்சர் அவர்கள் முன்வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : " மூலிகைகள் " என்று சொல்லுகிறார்களே, அந்தச் செடிகளை வளர்க்கிறோம். (சிரிப்பு.)

SRI K. B. S. MANI : பண்டைக் காலத்தில் அகஸ்தியர் ? யாகூப் போன்ற பெரிய முனிவர்கள் இந்தப் பச்சிலைகளை வளர்க்கும் தத்துவ முறையை எழுதி வைத்திருக்கிறார்கள். அவர்கள் கூறியுள்ள தத்துவ முறைப்படி, ஆகமங்களின்படி அவைகளை மருந்திலே சேர்த்தால் தான் சரியாக வேலை செய்யும். அந்தத் தத்துவ முறைப்படி அரசாங்கத்தால் வளர்க்கப்படுகிற பச்சிலைகள் வளர்க்கப்படுகின்றனவா, அந்த முறைப்படி மருந்துகள் தயாரிக்கப்படுகின்றனவா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : மூலிகைகளைக் கொண்டு மருந்துகளைச் செய்வது முறைப்படி செய்யவேண்டும். செடியை வைத்திய முறைப்படி வளர்ப்பதற்கு இதுவரையிலும் சாஸ்திரம் கண்டுப்பிடித்ததாகத் தெரியவில்லை. (சிரிப்பு.)

MR. SPEAKER : இன்னும் ஐந்து நிமிஷங்கள்தான் இருக்கின்றன. ஆகையால் மூலக் கேள்விகளுக்கு மட்டும் பதில்கள் அளிக்கப்படும். அடுத்த கேள்வி . . . .

SRI A. GOVINDASAMY : உப கேள்விகள் கேட்பதற்காகத் தான் மூல கேள்விகள் போடப்படுகின்றன. ஆகையால் இவைகளை நாளைக்கு எடுத்துக் கொள்ளலாமென்று வேண்டிக் கொள்கிறேன்.

MR. SPEAKER : நாளைக்கும் கேள்விகள் பாக்கி இருக்கும். முக்கியமான கேள்வியாக இருந்தால் உப கேள்விகள் போடுவதற்கு நானே அனுமதித்து வருகிறேன்.

*Construction of houses for Harijans of Salem Town*

* 790-J Q.—SRI A. MARIAPPAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சேலம் நகரிலுள்ள ஹரிஜனங்கள் தங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்க வேண்டுமென்று விண்ணப்பங்கள் கொடுத்திருக்கிறார்களா ?

(ஆ) அப்படி கொடுத்திருந்தால், அவை மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir. The Salem Harijans Munnetra Sangam has given a representation on behalf of the Harijans of Narayanaswamipuram.

(b) The Harijan Housing Scheme is not at present implemented in urban areas. Hence no action can be taken on the request. The question of acquisition of lands for house-sites to the Harijans of Narayanaswamipuram is, however, under consideration.

1st November 1958]

*Pablo boats*

* 790-K *Q.*—SRI A. GOVINDASAMY: Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the reasons for the objection to the use of pablo boats at Colachel in Kanyakumari district; and

(*b*) the action taken by the Government to meet the objection?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (*a*) The use of pablo boats in Kanyakumari district was objected to alleging that the pablo boat fishermen fished near the shore area where the catamaran fisherman fished and wanted that the pablo boats should conduct fishing operations beyond 15 miles in the sea.

(*b*) At the instance of Government, the Director of Fisheries convened a meeting at Nagercoil of fishermen and others to clear their misapprehensions for the use of mechanised boats. No other action has been found necessary.

*Ex-zamin and private forests*

* 790-L *Q.*—SRI W. P. A. R. CHANDRASEKARAN: Will the Hon. the Minister for Home be pleased to state whether the usual regulations and control are being enforced and maintained in the transferred zamindari and private forests in conformity with the regular reserve forests?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The answer is in the affirmative.

*Starting of factories*

*** 790-M Q—SRIMATHI A. S. PONNAMMAL**: கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

சோழவந்தான், கருப்பட்டி போன்ற இடங்களில் தீப்பெட்டித் தொழிற்சாலை, சோப்பு செய்யும் தொழிற்சாலை போன்ற தொழில்கள் ஏற்படுத்த அரசாங்கத்திற்கு ஏதேனும் உத்தேசமுண்டா?

THE HON. SRI **M. BHAKTAVATSALAM**; **There is no such** proposal at present.

*Village officers*

* 790-N *Q.*—SRI C. MUTHIAH: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether a uniform policy is followed in the matter of appointments of village officers in all the districts; and

(*b*) if not, why?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) & (*b*) No uniform policy is followed as village officers are non-hereditary in some districts and hereditary in the other districts of this State. Hereditary offices are governed by the provisions of the Madras Hereditary Village Offices Act, 1895. In non-hereditary areas, the principles

of hereditary succession is followed, as far as possible, in making appointments to village offices. But the conditions of service are almost the same in the hereditary and non-hereditary areas.

*Superior quality silk*

* 790-O *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

நமது ராஜயத்திலே எந்த ஜில்லாவில் உயர்ந்தபரகமான பட்டு உற்பத்தியாகிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir, Charka silk is being produced in small quantity in the Talavadi area in Gobichettipalayam taluk, Coimbatore district, Gudiyatham taluk in North Arcot district and in Hosur taluk, Salem district. Steps are being taken to increase the production in these areas.

*Amenities to Harijan colonies in Nannilam taluk*

* 790-P *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58-ல் நன்னிலம் தாலூகாவில் பஞ்சாயத்து போர்டாரால் ஹரிஜன தெருக்களுக்கு (1) நடைபாதை, (2) கிணறு, (3) பிளாட்பாரம், (4) குடி தண்ணீர் பம்புகள், (5) லைட் போடுதல், (6) குளம் வெட்டுதல், (7) குளத்திற்குப் படிகட்டுதல் முதலிய வேலைகள் எத்தனை நடைப் பெற்றன ?

(ஆ) அவைகளில் எத்தனை கிணறுகள் உபயோகமற்றவை ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Mileage of feet-paths formed—6 miles and 2 furlongs.

Wells dug—20.

Platforms laid—19.

Tube wells provided—42.

Lights provided—29.

Tanks dug—9 (including tanks deepened).

Tanks to which steps were provided—3.

(*b*) All wells are in use.

MR. SPEAKER : Before I go to the next item, I have to make one or two observations. Members have expressed dissatisfaction that they have not been able to ask enough number of supplementaries. The remedy is, they must ask fewer supplementaries. I would put down 25 questions for answer and they must not ask many supplementaries on them. Otherwise those Members on whose questions no supplementaries are allowed will complain.

Unless the matter is important, there is no point in putting many supplementaries. To-day, for example, on the question relating to the price of foodstuffs, we had 25 to 30 supplementaries. So on important questions, Members may put supplementary questions.

1st November 1958]

With regard to Mr. Lazar's point, that is a problem with very many Speakers. At the recent Presiding Officers' Conference, I had the same difficulty. I could not catch the Speaker's eye. (Laughter.)

SRI A. V. P. ASAITHAMBI : கேள்வி நேரத்தை 1½ மணியாக ஆக்கினால் நல்லதாக இருக்கும். ஆகவே இதை பிஸினஸ் அட்வைசரி கமிட்டியிலே வைத்து. . . .

MR. SPEAKER : The Assembly Rule says that Question Hour shall be one hour. When the rules are placed before the House, Members can move an amendment that it should be extended. Then, I would have no objection. Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—CORRECTION TO AN ANSWER.

MR. SPEAKER : The Hon. Minister for Home wants to correct the answer to a supplementary question put by Sri K. Anbazhagan on 12th March 1958 under Question No. 299.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : In reply to a supplementary by Sri K. Anbazhagan on Starred Question No. 299, the Minister for Industries stated on 12th March 1958, that the Mining, the Fertiliser and the Thermal Power Schemes of the Integrated Lignite Project, had all been included in the ' Core of the Plan '. It has subsequently been found that even though the Government of India had previously informed the Neyveli Lignite Corporation (Private), Limited, that the Project as a whole had been included in the ' Core of the Plan ' they have subsequently intimated the Corporation that only the Mining Scheme in the Project has been included in the ' Core of the Plan '. The Neyveli Lignite Corporation (Private), Limited, has however recommended to the Government of India that the entire project should be brought into the ' Core of the Plan ' as the schemes are closely interlinked and mutually dependent.

## III.—CALLING ATTENTION TO THE OUTBREAK OF FIRE IN TINDIVANAM TOWN.

SRI M. JAGANNATHAN : Sir, I rise to call the attention of the Hon. Minister for Home to a matter of urgent public importance, viz. :

" The outbreak of fire in Tindivanam Town in July 1958, and the consequent loss to properties worth about three lakhs of rupees, and the failure of the Government to provide a fire station in that town."

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Speaker, Sir, three fire accidents were reported to the Fire Service from Tindivanam Municipal Town during July 1958 on the 16th, 20th and 23rd. The fire accident that occurred on 16th July 1958 was at Bazaar street, Tindivanam, at 11-00 hours in which Rs. 2 lakhs worth of property was damaged. The Fire Units of Cuddalore, Chingleput, Villupuram and Pondicherry Fire Stations turned out and the fire was completely extinguished in 5½ hours. The cause 10-20 a.m.

[Sri M. Bhaktavatsalam] [1st November 1958

of the fire is reported to be a spark from an oven. There was no loss of human life. The fire that broke out on the 20th July 1958 was at about 13-20 hours. Standing crops over an area of 20 acres was involved. The fire units of Villupuram and Chingleput tackled the fire and it was completely put out in 20 minutes. The value of the property damaged was Rs. 1,500. The cause of the fire is reported to be the careless disposal of a lighted cigar. There was no casualty in the fire accident. The third fire that occurred was on 23rd July 1958 at 12-42 hours, in which four thatched dwelling houses with household articles were involved. The fire units of Villupuram were turned out and the fire was completely extinguished within one hour. The actual damage was estimated at Rs. 200. The cause of the fire is reported to be a spark from an oven. There was no casualty.

In 1944, when the question of retention of A.R.P. equipment on a peace-time basis was considered, it was approved in principle that the fire service should be organized in the then 60 Municipal towns of the composite Madras State. Tindivanam Municipality was not one of the places included in the above list. Subsequently in 1954, the Inspector-General of Police, Fire Service Branch, drew up a list of places in which fire stations had to be opened including Tindivanam and Tindivanam was given the eighth place in that priority list. As the above scheme was drawn up a long time ago and as many other municipalities have come into being since then a revised priority list in the matter of opening new fire stations in the State has been drawn up in July 1958 in consultation with the Inspector-General of Police (Fire Service Branch), taking into account the various aspects, such as the importance of the town, its population, industrial and other fire risks in and around the town, water sources available, the needs of the municipalities concerned, etc. According to the revised priority list, Tindivanam Municipal Town has been given the fourth place in the order of priority.

Proposals have since been received from the Inspector-General of Police, Fire Service Branch, for establishing new fire stations in the first four places in the order of priority including Tindivanam for consideration as Part II Scheme for 1959–60. The proposals are under consideration.

## IV.—GOVERNMENT RESOLUTION.

### AMENDMENT TO THE ESTATE DUTY ACT, 1953 (34 OF 1953).

* THE HON. SRI M. A. MANICKAVELU : Mr. Speaker, Sir, I move that—

"Whereas by resolutions passed in pursuance of Article 252 of the Constitution, the levy of estate duty in respect of agricultural land in the State of Madras is governed by the Estate Duty Ac, 1953 (34 of 1953) passed by Parliament;

1st November 1958] [Sri M. A. Manickavelu]

And whereas the Estate Duty Act, 1953 (34 of 1953) has been amended by Act 17 of 1954, Act 41 of 1954, Act 36 of 1957 and Act 33 of 1958 passed by Parliament;

And whereas it appears to this Assembly to be desirable that the matters specified in the amending Acts aforesaid in so far as they relate to estate duty in respect of agricultural land should be regulated, in the State by Parliament by law;

Now, therefore, this Assemlby hereby resolves in pursuance of Article 252 of the Constitution that the matters aforesaid in so far as they are matters with respect to which Parliament has no power to make laws for the State may be regulated in the State by Parliament by law and for this purpose the Estate Duty Act, 1953 (34 of 1953) may be amended accordingly ".

Estate duty is a levy on the principal value of all property settled or not settled, which passes on the death of a person to his heirs or successors-in-law. Under Article 269 of the Constitution of India, Estate duty in respect of property other than agricultural land has to be levied and collected by the Government of India and assigned to the States. Under item 48 of List II in the Seventh Schedule to the Constitution, the State Legislature has got the power to legislate in regard to estate duty in respect of agricultural land. Under Article 252 of the Constitution, if it appears to the Legislatures of two or more States to be desirable that any of the matters with respect to which Parliament has no power to make laws for the States except as provided in Articles 249 and 250 should be regulated in such States by Parliament by law, and if resolutions to that effect are passed by all the Houses of the Legislatures of those States, it shall be lawful for Parliament to pass an Act for regulating the matter accordingly and any Act so passed shall apply to such States and to any other State by which it is adopted afterwards by resolutions passed in that behalf by the House or where there are two Houses by each of the Houses of the Legislature of that State.

The Parliament passed the Estate Duty Act in 1953 providing for the levy of estate duty on property including agricultural land. The Madras Legislative Council and the Assembly passed resolutions on 21st February and 2nd April 1955, respectively adopting the Estate Duty Act, 1953, in respect of estate duty on agricultural land situated in this State.

After the Estate Duty Act was passed in 1953 certain minor amendments have been carried out by Act 17 of 1954, Act 41 of 1954 and Act 36 of 1957. Act 17 of 1954 introduced sub-section (3) to section 3 of the principal Act by way of classification and made a minor change in clauses (*f*) and (*g*) of sub-section (1) of section 33 of the Act. Act 41 of 1954 extended the principal Act to Jammu and Kashmir and Act 36 of 1957 merely corrected a printing error.

[Sri M. A. Manickavelu] [1st November 1958

With a view to tighten up the provisions of the Estate Duty Act, 1953, the Government of India have now passed the Estate Duty (Amendment) Act, 1958. The Amendment Act among other things provides for the following :—

(i) lowers the present exemption limit in case of property other than an interest in the property of joint family governed by Mitakshara, Marumakkattayam or Aliyasantana law, from Rs. one lakhs to Rs. 50,000;

(ii) changes the basis on which the rate of duty is charged in the case of coparcenary interest of a deceased who was governed by Mitakashara, Marumakkattayam or Aliyasantana law;

(iii) reduces the allowance for probate duty from 100 per cent to 50 per cent of the duty;

(iv) makes certain changes in the assessment and appellate procedures so as to bring them in line with the other direct taxation Acts.

Provision has also been made in the Act to enable the Government of India to bring the Act into force on a suitable date after the State Legislatures pass the necessary resolutions required under Article 252 of the Constitution.

The Government of India have pointed out in this connection that the benefit of the additional revenue which will be realised on account of the changes effected by the amending Act will accrue entirely to the States and have requested this Government to move the necessary resolutions before the Legislature.

This State has already committed itself to this taxation by passing a resolution in the year 1955. Now this resolution is necessary because certain amendments have subsequently been made to the Acts passed by Parliament. The resolution is proposed in order to enable Parliament to make the necessary provisions in their Act.

MR. SPEAKER : Motion moved—

" Whereas by resolutions passed in pursuance of Article 252 of the Constitution, the levy of estate duty in respect of agricultural land in the State of Madras is governed by the Estate Duty Act, 1953 (34 of 1953) passed by Parliament ".

And whereas the Estate Duty Act, 1953 (34 of 1953) has been amended by Act 17 of 1954, Act 41 of 1954, Act 36 of 1957 and Act 33 of 1958 passed by Parliament;

And whereas it appears to this Assembly to be desirable that the matters specified in the amending Acts aforesaid in so far as they relate to estate duty in respect of agricultural land should be regulated, in the State by Parliament by law;

1st November 1958] [Mr. Speaker]

Now, therefore, this Assembly hereby resolves in pursuance of Article 252 of the Constitution that the matters aforesaid in so far as they are matters with respect to which Parliament has no power to make laws for the State may be regulated in the State by Parliament by law and for this purpose the Estate Duty Act 1953 (34 of 1953), may be amended accordingly ".

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Mr. Spetker, Sir, I would request that a copy of the statement made by the Hon. Minister in introducing this Resolution may be circulated to hon. Members of this House. We have all been taken by surprise and we do not know what exactly the amendments are. If a copy of the statement read out by the Hon. Minister is supplied to us, we would get some details about the proposed Resolution. I would therefore request you to circulate a copy of the Statement and also to take up Resolution for discussion on Monday.

MR. SPEAKER : I have no objection if the Hon. Minister will agree to the proposal. The suggestion made by the hon. the Leader of the Opposition is I think that the resolution might be taken up as the first item after questions on Monday.

THE HON. SRI M. A. MANICKAVELU : If it is the desire of the House that the resolution should be taken up on Monday, I have no objection. I thought that being a simple and formal resolution, this could be disposed of to-day.

MR. SPEAKER : I think the Hon. Minister has agreed to the suggestion of the hon. the Leader of the Opposition. A copy of the statement will be circulated and the resolution taken up as the first item after questions on Monday, the 3rd November.

* SRI R. SRINIVASA IYER : Sir, his resolution relates to Estate Duty leviable on agricultural property in this State. How many people are likely to be affected by that duty and what is the additional revenue that is likely to be derived by this levy by the Central Government from the agriculturist of this State and what proportion of it will be given to this State and such other information should be given to us. Otherwise we will not be able to understand the scope of the resolution. I would therefore request the Hon. Minister to give information . . .

MR. SPEAKER : That would not be correct. The hon. Member may raise all these points when he speaks on the resolution and the Hon. Minister will answer them in the course of his reply. It is not correct now to anticipate what all the hon. Member may want or others may want. The whole discussion on the resolution is postponed to Monday, 3rd November 1958. The hon. Member may speak on the Resolution on Monday and the Minister will reply to all his points then.

### V.—DISCUSSION ON THE MADRAS STATE ELECTRICITY BOARD BUDGET.

10 a.m.

MR. SPEAKER : Now we shall take up the budget of the Madras State Electricity Board for discussion.

SRI A. V. THOMAS : Sir, I want to make a submission. A bulky document containing the speech of the Hon. Minister for Electricity running to 66 pages had been circulated to most of us only last night. Some Members may not have got it. Does the Hon. Minister expect us to read the whole of it overnight?

MR. SPEAKER : Let the hon. Member wait and see what the Hon. Minister has to say in the matter. He need not anticipate what he is going to say.

THE HON. SRI V. RAMAIAH : Mr. Speaker, Sir, I rise to move—

"That the Annual Financial Statement for 1958–59 and the Supplementary Financial Statements for 1957–58 of the Madras State Electricity Board laid on the table of this House be taken up for discussion".

Sir, I do not want to take much time of the House by reading the entire speech which I have already circulated for the consideration of hon. Members. Along with that speech, we have also given a detailed Appendix in which we have brought out all the activities of the Electricity Board and various points to which hon. Members should give deep consideration. I would like you to take the entire speech as read in this House.

Another point that I would like to state here is that I have not been able to give a Tamil version of my speech and the appendix. I have given detailed and deep consideration to that question but unfortunately I am not able to do it. I really regret such a state of affairs. But in the coming years we will do our best to give the entire speech and additional notes also in Tamil. This year I would request the House to excuse me for not being able to do it. I do not like to take up the further time of the House. But I would give a detailed reply to the various points which will be raised in the course of the next three days on which the House is going to discuss the Budget.

MR. SPEAKER : Motion moved—

"That the Annual Financial Statement for 1958–59 and the Supplementary Financial Statements for 1957–58 of the Madras State Electricity Board laid on the table of this House be taken up for discussion."

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, நமது மாகாணம் மின்சார அபிவிருத்தி விஷயங்களில் மிகவும் முன்னேறியிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. அது உண்மையும் கூட. இதற்காக நாம் எல்லோரும் பெருமைப்படுகிறோம். இப்பொழுது 3,21,500 கிலோ வாட்ஸ் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. மேலும் 67,000 கிலோ

1st November 1958] [Sri N. K. Palanisami]

வாட்ஸ் மின்சாரம் உற்பத்தி செய்யப்படும் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, நம் நாட்டில் இன்னும் தொழில் அபிவிருத்தி ஏற்பட ஏற்பட அதிகப் படியான மின்சாரம் தேவை. இப்பொழுது உற்பத்தி செய்யக்கூடிய மின்சாரம் போதுமானதாக இருக்காது என்பது தெரிந்த விஷயம். ஆகவே, இந்த மின்சார அபிவிருத்தியைக்காண இன்னும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் முன்னேற வேண்டியிருக்கிறது. மூன்றுவது திட்டமும் இருக்கிறது. அடிப்படை தொழில் அபிவிருத்திக்கு மின்சாரம் மிகவும் இன்றியமையாததன் காரணமாக, திட்டங்கள் போடுவதற்கு முன்பாக, எந்தெந்த இடங்களில் எப்படி எப்படி மின்சாரத்தை எடுப்பது என்பதை கவனித்து இப்பொழுது அதற்கான ஏற்பாடுகளை செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். உதாரணமாக, ஏற்கனவே பற்றுக் குறையை போக்குவதற்காக ஆந்திரப் பிரதேசத்திலிருந்து நமக்கு கொஞ்சம் மின்சாரம் கிடைக்கிறது. கேரளாவில் ஆறு மாதங்களுக்கு மழை பெய்கிறது. அங்கே ஏராளமாக மின்சார அபிவிருத்தி செய்ய முடியும். அப்படி நமக்கு கிடைக்கக்கூடிய வழியிருந்தும், நமது சர்க்கார் இதுவரையிலும் அம் மாதிரி செய்வதற்கு கேரள சர்க்காருடன் பேச்சு வார்த்தை நடத்தி மின்சாரம் கிடைப்பதற்கான நடவடிக்கை எடுத்திருக்கிறார்களா என்பது எனக்குத் தெரியாது. அப்படியில்லாவிட்டால், அவசியம் அதற்கான நடவடிக்கை எடுக்க வேண்டும். அது மட்டுமல்ல. அப்படி இரண்டு சர்க்காரிலும் நமக்கு கிடைத்தபோதிலும், நெய் வேலியில் ஏற்படப்போகிற தெர்மல் ஸ்டேஷனை இன்னும் விரிவுபடுத்திய போதிலும், குந்தா அதிகப்படியாக விஸ்தரிக்கப் பட்ட போதிலும், நமக்கு வேண்டிய தொழிலுக்குத் தேவையான மின்சார ரம் கிடைக்காது. ஆகவே, இன்னும் அணுசக்தி மூலமாக மின்சாரத்தை அதிக மாக உற்பத்தி செய்வதற்கான நடவடிக்கை எடுக்கவேண்டும். ஏற்கனவே ஸர் ஸி. பி. ராமசுவாமி அய்யர் அவர்கள் திருவாங்கூரில் மந்திரியாக இருந்த காலத்தில் கன்யாகுமாரி ஜில்லாவில் சில இடங்களில் மண்களில் தோரியம் இருப்பதாக சொல்லப்பட்டது. இப்பொழுது சர்க்கார் அவசியமான நடவடிக்கை எடுத்து அதை பரிசீலித்துக் கொண்டிருப்பதாகச் சொல்லப் படுகிறது. அந்தத் தோரியத்தை எடுத்து அதன் மூலம் நம் மாகாணத் திற்கு மின்சாரம் கிடைக்கக்கூடிய வசதி இருக்கிறது.

(Srimathi Kolanthai Ammal in the Chair.)

சமீபத்தில் நடந்த ஸோனல் கவுன்சில் கூட்டத்தில்கூட இதுபற்றி சொல்லப் பட்டது. அணுசக்தி நிலையம் முதல் முதலாக நம் மாகாணத்தில் ஏற் படப்போவதாகச் சொல்லப்பட்டது. ஆகவே, சர்க்கார் இதில் உடனடி யாக கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நம் மாகாணத்தில் ஒரு ஹெவி எலக்டிரிக் பிளாண்டு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் ஏற்படப்போவதாக சொல்லப்பட்டது. உண்மையாகவே அம்மாதிரியான ஹெவி எலக்டிரிக் பிளாண்டு நம் மகாணத்தில் ஏற்பட்டிருந்தால், வேண்டிய டிரான்ஸ்மிடர், ஸ்விட்ச் கியர் முதலியவைகளை இங்கேயே செய்வதற்கு வசதி இருந்திருக்கும். இப் பொழுது சர்க்கார் என்ன காரணத்தைக் கொண்டோ அதை இங்கிருந்து போபாலுக்கு மாற்றுவதற்கு சம்மதித்தார்கள் என்று தெரியவில்லை. நமது சர்க்கார் இது விஷயமாக மத்திய சர்க்காருடன் கலந்து பேசி, இதை நம் மகாணத்திலிருந்து அங்கே கொண்டு போகக்கூடாது என்று சொன்னார்களா? அல்லது கவனம் குறைவாக விட்டுவிட்டார்களோ தெரிய வில்லை.

அடுத்தபடியாக, 1948-வது ஆண்டு மத்திய எலக்டிரிஸிடி ஆக்ட் 60 (2) பிரிவு பிரகாரம், ஒரு போர்டு ஏற்படுத்தினால், இரண்டு மாதங் களுக்குள் பாலன்ஸ் ஷீட் கொடுக்கவேண்டுமென்று இருக்கிறது. அந்த சட்டப்பிரகாரம் இரண்டு மாதங்களுக்குள் பாலன்ஸ் ஷீட் கொடுக்கவேண்டு மென்று இருந்ததை ஏன் கொண்டு வரவில்லை? இந்த போர்டு ஒரு பிரைவேட் பாடி, அது வருமான வரி செலுத்தவேண்டும். வருமான வரி செலுத் துவதற்கு ஆறு மாதங்களுக்குள் பாலன்ஸ் ஷீட் கொடுக்க வேண்டும். அதை யாவது அனுசரித்து கொடுக்கப்பட்டிருக்கிறதா என்பது தெரியவில்லை. அல்லது சர்க்காரிடமாவது அந்த பாலன்ஸ் ஷீட் வந்திருக்கிறதா என்பதுகூட தெரியவில்லை. அம்மாதிரி ஒரு வரவு செலவுக் கணக்கு நம் முன்னால்

இருந்தால்தான் போர்டு ஏற்பட்டதற்குப் பிறகு எந்த அளவு நாம் அபிவிருத்தி அடைந்திருக்கிறோம், ஜனங்களுக்கு எந்த அளவுக்கு அதில் சலுகை ஏற்பட்டிருக்கிறது என்பது தெரியும். அதுமட்டுமல்ல. "காபிடல்" செலவு உத்தேசமாக ரூபாய் 70 கோடி என்று கணக்கு சொல்லப்படுகிறது. உத்தேசக் கணக்கு என்றால் என்ன? உத்தேசம் எந்த அடிப்படையில் யோசனை செய்யப்பட்டது. அந்த 70 கோடி ரூபாயில் தொழிலாளிகளுக்குச் சேரவேண்டிய ரூபாயும் சேர்ந்திருக்கிறதா? அல்லது சர்க்காருக்கு போர்டு கொடுக்கவேண்டிய தொகையும் இதில் சேர்ந்திருக்கிறதா என்ற விவரம் கொடுக்கப்படவில்லை. அதுமட்டுமல்ல. இன்னும் சர்க்கார் போர்டுக்கு கொடுக்கக்கூடிய கடன்களுக்கு 5¼ பர்சென்ட் வட்டி போட்டிருக்கிறார்கள். 70 கோடி ரூபாய்க்கு 5¼ பர்சென்ட் என்றால், 4 கோடி 10 லட்சம் ரூபாய் ஆகிறது. அந்த 4 கோடி 10 லட்சம் ரூபாய்க்கு காம்பவுண்டு வட்டி ரூ. 40 லட்சம். ஆனால் ஏற்கனவே சர்க்காரே சொல்லுகிறார்கள். 4½ பர்சென்ட் வட்டியில் 2 கோடி ரூபாய் கடன் வேண்டும் என்று போர்டு கேட்டபொழுது சில நிமிஷங்களுக்குள் "ஓவர் ஸப்ஸ்க்ரைப்" ஆகிவிட்டது என்று சொல்லுகிறார்கள். 4 பர்சென்ட் அதிகப்படியான பணம் வெளியில் கிடைக்கும்பொழுது சர்க்கார் மட்டும் 5¼ பர்சென்ட் வட்டி போடுவதற்குக் காரணம் என்ன? உண்மையாகவே இந்த சர்க்காருடைய உத்தரவில் "நோ பிராபிட் நோ லாஸ்" என்று தான் சொல்லப்படுகிறது. அப்படியிருக்கும் பொழுது, இம்மாதிரி அதிக வட்டி போட்டு வியாபாரம் செய்வதற்காக இது செய்யப்பட்டதா, அல்லது மின்சார அபிவிருத்திக்காக செய்யப்பட்டதா என்று தெரியவில்லை. ஏற்கனவே போர்டு சர்க்காரிடம் வட்டியை குறைக்கவேண்டுமென்று கேட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆகவே, அதை சர்க்கார் கவனித்து உடனடியாக வட்டியை குறைப்பதற்கான நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக விவசாயத்தைப்பற்றி பெரிய கன்செஷன் கொடுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதற்கு கன்செஷன் என்று சொல்வதற்கு பதிலாக ரெஸ்ட்ரிக்ஷன் என்று சொல்லலாம். அப்படிச் சொன்னால் தான் பொருந்தும் என்பது என்னுடைய எண்ணம். ஏற்கனவே இருக்கும் ட்ரான்ஸ்பார்மர்களை எடுத்துக்கொண்டால் அதிகப்படியான லோட் இருக்கிறது. பல மோட்டார்கள் ஓடினாலும் அது கருகிவிடுகிறது. இன்னும் 70-ல் 14½ பங்கு விவசாயத்திற்குக் கொடுக்கப்படுவதாக சொல்லப்படுகிறது. அதை 100-க்கு என்று எடுத்துக்கொண்டால் அது கிட்டத்தட்ட 19 முதல் 20 பர்சென்ட் வரையில் ஆகிறது. இந்த அளவில் விவசாயத்திற்குக் கொடுக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. விவசாயத்திற்கு தினம் ஒன்றுக்கு பத்து மணி நேரம் கொடுப்பதை "கட்" பண்ணியிருக்கிறார்கள். ஏன் இந்தத் தடை செய்ய வேண்டும்? ஏன் இதை எடுத்துவிடக் கூடாது என்று கேட்கிறேன்.

அது மட்டுமல்ல. கிணறுகளில் தண்ணீர் இல்லை என்று சொன்னால் ரிவினியூ அதிகாரிகள் சர்டிபிகேட்டுகள் கொடுத்தால் அவர்களுக்கு மினிமம் சார்ஜ் கட்டுவதற்கு விதிவிலக்கு கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். கிணறுகளில் கொஞ்சம்கூட தண்ணீர் இல்லாமல் இருக்காது. அதனால் கொஞ்சம் தண்ணீர் இருந்தாலும் சர்ட்டிபிகேட் கிடைப்பது இல்லை. ஆனால் அவர்கள் என்ன சொல்லியிருக்கிறார்கள் என்றால் ஏதோ பெரிய சலுகை கொடுத்திருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

அதுமட்டுமல்ல, மினிமம் காரண்டி ஒரு வருஷத்திற்கு ஒரு ஹார்ஸ் பவருக்கு 50 ரூபாய் வரையில் வாங்கப்படுகிறது. இது கூடாது. இதைக் குறைக்க வேண்டும் என்று நான் சொல்லுகிறேன். கனம் மந்திரி அவர்களே சொல்லுகிறார், விவசாயத்திற்கு 500 யூனிட்டுக்குக் குறைவாக எடுத்துக்கொண்டால் 0.9 அணு அல்லது 500-க்கு மேல் இருந்தால் 0.75 என்றும் சொல்லுகிறார். அதே சமயத்தில் மின்சாரத்தை எடுத்துக்கொண்டால் நாலு தம்படி குறைவாக இருக்கிறது. ஆனால் அதே சமயத்தில் பல்க் கன்ஸ்யூமர்களுக்கு இன்னும் அதிகப்படியான சலுகைகள் கொடுக்கப்படுகிறது. புதியதாக ஏற்படுத்தக்கூடிய தொழிற்சாலைகளுக்கு சர்க்காருடைய நஷ்டமாகவே ஒரு நயா பைசா நஷ்டக் குறைவாகக் கொடுக்கிறார்கள்.

1st November 1958] [Sri N. K. Palanisami]

ப்ளாண்டேஷன் இருக்கிறது, சிமெண்ட் தொழில் இருக்கிறது, இன்னும் டெக்ஸ்டைல் மில்கள் இருக்கின்றன. இதற்கெல்லாம் சார்ஜ் நிர்ணயம் பண்ணியிருப்பது, 1929-ம் வருஷம் இந்த டிபார்ட்மெண்ட் ஏற்பட்டபோது டாரிப் ரிவிஷன் கமிட்டி ஒன்றை ஏற்படுத்தினார்கள். அப்பொழுது இன்னின்ன தொழிலுக்கு இன்னின்ன சார்ஜ் என்று நிர்ணயம் பண்ணிவிட்டு அதன்படி வசூலித்து வருகிறார்கள். அதன் பிறகு இப்பொழுது ரொம்ப வருஷங்களாகி விட்டன. இன்றைக்கு சிமெண்ட் தொழிற்சாலை, ப்ளாண்டேஷன்ஸ் இவைகளுக்கு எந்த அளவுக்கு லாபம் ஏற்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்க வேண்டும். அவர்களுக்கு உற்பத்தி ஜாஸ்தியாகி இருக்கிறது, அதனால் அவர்களுக்கு லாபம் ஏற்பட்டிருக்கிறது என்று இங்கே சொல்லுகிறோம். ஆனால் விவசாயத்தை எடுத்துக்கொண்டால் உற்பத்தி அதிகமாகி இருந்தாலும் அவர்களுடைய உற்பத்தி செலவு ரொம்பவும் அதிகமாக ஆகியிருக்கிறது என்பதை நாம் மறந்து விடக்கூடாது. நாற்பது ரூபாய் வருகிறது என்பது ரொம்பவும் குறைவாக வருகிறது என்று காட்டியிருக்கிறார்கள். கணக்குப் பார்த்தால் விவசாயத்திற்கு இது குறைவு படியாக இருக்கும். உற்பத்தி செலவு அதிகமாகி இருக்கிறது. ஆகவே ஹை டென்ஷன் கரண்டைப் பற்றி ஏற்கெனவே டாரிப் ரிவிஷன் கமிட்டி 1953-ல் என்ன சிபாரிசு செய்திருக்கிறது என்பது தெரியும். போர்டு ஏற்பட்ட பிறகு மறுபடியும் கூடி என்ன முடிவு செய்தார்கள் என்பது தெரியாது. அதைப்பற்றி கனம் மந்திரி அவர்கள் சொல்லுவார் என்று நினைக்கிறேன். தர்மல் ஸ்கீமிலிருந்து ஹைட்ரோ எலெக்ட்ரிக் ஸ்கீமுக்கு மாறினால் 40 லட்சம் ரூபாய் சர்க்காருக்கு லாபம் கிடைக்கிறது என்று அவர்கள் சொன்னார். ஹைடென்ஷன் கரண்ட், பிளாண்டேஷனிலும், சிமெண்ட், டெக்ஸ்டைல் இம்மாதிரி தொழிற்சாலைகளிலும் உபயோகப்படுத்துகிறவர்களுக்கு ஒரு நயா பைசாவுக்கு 70 லட்சம் ரூபாய் லாபம் கிடைப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆகவே விவசாயத்திற்கு கொடுக்கும் மின்சாரத்தில் 7.5 அல்லது·90 அதாவது அறை பாகமாக குறைப்பதற்கு வழி இருந்தும் சர்க்கார், விவசாயித்திற்குக் கொடுக்கும் மின்சாரத்திற்குள்ள சார்ஜை ஏன் குறைக்கக்கூடாது என்று கேட்கிறேன். இதனால் ஒரு பக்கம் அங்கேயுள்ள தொழிலாளர்களுக்கு சம்பளம் கொடுக்க வேண்டிய அவசியமும் இருக்கிறது. இன்னொரு பக்கத்தில் விவசாயத்தில் உற்பத்தி செலவையும் குறைக்க வேண்டியதாக இருக்கிறது. ஆகவே இந்த இரண்டிற்கும் தேவையானதற்காக கண்டிப்பாக ஹைடென்ஷன் கரண்ட்டுக்கு இரண்டு அல்லது மூன்று நயா பைசாவை அதிகப்படுத்த அவசியமாக இருந்தும் அவர்கள் மீது கை வைக்க தயங்குவதற்கு என்ன காரணம் என்பது தெரியவில்லை. ஆனால் இன்றையதினம் கனம் மந்திரி அவர்கள் சொல்லுகிறார்கள் இந்த மாதிரி ஒரு நெகோஷியேடிங் கமிட்டி இருக்கிறது என்று. மொத்தம் 40,500 தொழிலாளர்கள் இதில் இருக்கிறார்கள், அதாவது மின்சார இலாகாவில் வேலை செய்யக்கூடியவர்கள். மின்சார அபிவிருத்தியில் நமது மாகாணம்தான் முன் நிற்கிறோம் என்று பெருமைப்படுகிறோம். அங்கே இருக்கக்கூடிய தொழிலாளர்களை நாம் மறந்து விடக்கூடாது. இந்தத்தொழில் முன்னேற்றத்திற்கு அவர்களுடைய வேலைதான் முக்கியமான காரணம் என்பதை நாம் எல்லோரும் உணருகிறோம். இப்படிப்பட்ட நிலைமையில் 1953-ம் வருஷத்திலிருந்து அவர்களுடைய சாதாரண பிரச்னை கூட இது வரையிலும் தீர்க்கப்படாமல் நீண்டு கொண்டே இருப்பதற்கு காரணம் என்ன ? அப்படி ஏன் இருக்கிறது என்பது புரியவில்லை. ஸ்ட்ரைக் நோட்டீஸ் கொடுத்தவுடன் கனம் மந்திரி அவர்கள் என்ன சொன்னார் என்றால் நெகோஷியேடிங் கமிட்டி ஒன்றை அமைத்திருக்கிறோம் என்று. அதில் எல்லோரும் உட்கார்ந்து சில சிபாரிசுகளைச் செய்து சர்க்காருக்கு அனுப்பியிருக்கிறார்கள். அந்த நெகோஷியேடிங் கமிட்டியை நியமிக்கக் கூடிய காலத்தில் எல்லோரும் ஒத்துக்கொண்ட விஷயம் என்னவென்றால் *status quo* வை மெயின்டெயின் செய்ய வேண்டும் என்று. ஆனால் பிறகு என்ன நடந்தது ? ஸ்ட்ரைக் நோட்டீஸ் கொடுத்தவுடன் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையிலிருந்து வெளியேற்றப்பட்டார்கள். அல்லது பலர் வெவ்வேறு ஊர்களுக்கு மாற்றப்பட்டார்கள். *status quo* என்றால் என்ன ? பழையபடி எங்கெங்கே இருந்தார்களோ அந்தந்த இடங்களில் அவர்கள் எல்லோரும் அப்படியே

[Sri N. K. Palanisami] [1st November 1958

இருக்க வேண்டும். கமிட்டியில் அப்படி ஏற்றுக்கொள்ளப்பட்ட பிறகும் நீக்கப்பட்டவர்கள் இன்னும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. மாற்றப்பட்ட வர்களும் அதே இடத்திற்குக் கொண்டு வரப்படவில்லை. ஆனால் இன்னும் அங்குள்ள தொழிலாளர்கள் மாற்றக்கூடிய நிலைமையில்தான் இருக்கிறார்கள். இன்றைக்கு அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட வாக்குறுதி காற்றில் பறக்க விடப்பட்டிருக்கிறது என்பதை மட்டும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். நெகோஷியேடிங் கமிட்டி முதல் கூட்டம் போட்ட ஆறு மாதங்களுக்குள் **interim relief** 4 ரூபாய் கொடுப்பதாக ஒத்துக்கொள்ளப் பட்டது. ஆனால் இப்பொழுது கொடுக்கிறார்களா என்று பார்த்தால் இன்னும் 1½ மாதங்களுக்குப் பிறகு தான் அது கொடுக்கப்படும் என்றும் சொல்லப்படுகிறது. சர்க்கார் சார்பிலும் ஒரு ஜட்ஜ் நியமிக்கப்பட்டு அவர் சொன்னதை எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள், அப்படியிருந்தும் அதை 1½ மாதத்திற்கு ஒத்தி வைப்பதன் காரணம் என்ன என்பது தெரியவில்லை. இது இன்றைக்கு இருக்கக்கூடிய அடிப்படையான பிரச்னை.

இதைத்தவிர இன்றைக்கு இதில் 41 ஆயிரம் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அவர்களில் சுமார் பத்து அல்லது பதினைந்து வருஷங்களாக வேலை செய்துகொண்டிருப்பவர்களை இன்னும் பர்மனென்ட் செய்யவில்லை. பர்மனென்ட் ஆகாமல் இருக்கக்கூடியவர்களுக்கு மற்றவர்களுக்குக் கிடைக்கக்கூடிய சலுகைகள்கூட கிடைக்காமல் இருக்கிறது. அவர்களை பர்மனென்ட் செய்ய வேண்டும் என்று சிபாரிசு செய்தவுடனேயே சர்க்கார் என்ன உத்தரவு போடுகிறார்கள் என்றால் எங்கேயெல்லாம் டெம்பரரியாக இருக்கிறார்களோ அங்கேயெல்லாம் இருக்கக்கூடியவர்களை மாற்றும்படியாகவும் வேலையை விட்டு வெளியேற்றும்படியாகவும் உத்தரவு போடுகிறார்கள். ஐந்தாண்டு திட்டத்தின் மூலமாக அவர்களுக்கு அதிகப்படியான வேலை கிடைப்பதற்கு பதிலாக வேலையை விட்டு போகும்படியான துர்பாக்கிய நிலைமை ஏற்படுகிறது. சென்ற வருஷம் ஒரு சர்க்குலர் விடப்பட்டிருக்கிறது. அது என்னவென்றால் டெம்பரரியாக எவ்வளவு பேர்கள் இருக்கிறார்களோ அவர்களை வெளியேற்ற வேண்டும் என்று சொல்லப்படுகிறது. இது எவ்வளவு நியாயம் என்று கேட்கிறேன். இன்றைய தினம் அவர்களுக்கு குறைவான ஊதியம் 18 ரூபாய் கொடுக்கப்படுகிறது. அதே சமயத்தில் ட்ரான்ஸ்போர்ட் டிபார்ட்மெண்டை எடுத்துக்கொண்டால் அங்கே குறைந்த பட்சம் 26 ரூபாய் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் மைசூரில் 1957-ம் வருஷத்திற்கு முன்பு 18 ரூபாய் குறைந்த சம்பளமாக நிர்ணயம் செய்திருந்தார்கள். 1957-ல் குறைந்து பட்ச சம்பளம் 30 ரூபாய் என்று நிர்ணயித்து இருக்கிறார்கள். ஆனால் இப்பொழுது சிபாரிசு செய்திருப்பது 29 ரூபாய். இதை ஏன் இந்த சர்க்கார் உடனடியாக ஒத்துக்கொள்ளக்கூடாது என்று கேட்கிறேன்.

அதற்கு மேல் பஞ்சப்படியை எடுத்துக்கொண்டால் ஒரு புள்ளி உயர்வுக்கு 2½ அணா கொடுக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறார்கள். மற்றும் கிராடியுட்டி எல்லாம் கொடுக்கவேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. இது நியாயமான ஒரு கோரிக்கை. 1956-ம் வருஷத்தில் இந்த சபையில் இது ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. அப்பொழுது பேசிய கனம் அமைச்சர் அவர்கள் சொன்னதை அப்படியே இப்பொழுது படிக்க விரும்புகிறேன்.

" The workers presented a memorandum detailing their demands last year and of course it was presented to me in the House. I have considered their demands and I have myself drawn up certain minimum concessions which, I felt, ought to be given to them and I have passed them on to my colleagues. With regard to minimum wages, they said that the other departments also will have to give them and so it will affect the financial position. But I did really insist that we ourselves have laid down rules of conduct and

standards to be observed by other employers in respect of labour and working classes and if our Government institutions do not act in an exemplary way for others to follow, people will simply laugh at us . . .

SRI R. SRINIVASA IYER : On a point of order, Madam. Is it in order for an hon. Member to read a whole book during a speech in the Assembly, when we do not know from what he is reading?

TEMPORARY CHAIRMAN (SRIMATHI KOLANTHAI AMMAL) : கனம் அங்கத்தினர் பார்த்து வாசிக்காமல் பேசும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI N. K. PALANISAMI : " We can preach morals to others, but we must practise them ourselves. It is a very powerful argument which anybody cannot answer. I concede that the demands of the workers are reasonable. I have been . . ."

SRI R. SRINIVASA IYER : Another point of order, Madam. The hon. Member does not obey the Chair; he continues to read the book. I want to know whether that is in order.

TEMPORARY CHAIRMAN (SRIMATHI KOLANTHAI AMMAL :) கனம் அங்கத்தினரை பேசும்படியாக கேட்டுக்கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI : " எக்ஸ்ட்ராக்ட் " படிக்கலாம் என்று விதி இருக்கிறது. எக்ஸ்ட்ராக்ட் படிக்கக்கூடாது என்று இல்லை.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் தலைவி அவர்களே, இப்பொழுது பாயிண்ட் ஆப் ஆர்டர் எழுப்பிய கனம் அங்கத்தினரே கூட பல நேரங்களில் பல சட்டப் புத்தகங்களைக் கொண்டு வந்து படித்துக் காட்டியிருக்கிறார். அதுபோல் கனம் அங்கத்தினர் பழனிசாமி அவர்களும், குறிப்பிட்ட ஒரு பிரச்னையைப்பற்றிப் பேசும்போது, அமைச்சர் அவர்கள் 1956-ம் ஆண்டில் என்ன சொல்லியிருக்கிறார் என்பதைப் படித்துக் காண்பிப்பதில் தவறு இல்லை. ஆகையால், அதைக்குறித்து பாயிண்ட் ஆப் ஆர்டர் எழுப்புவதே தவறு என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

(Mr. Speaker in the Chair.)

MR. SPEAKER : Let the hon. Member repeat his point of order.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, அங்கத்தினர் ஸ்ரீ என். கே. பழனிசாமி அவர்கள் பேசிக்கொண்டிருந்த போது மின்சாரத் தொழிலாளர்கள் சம்பந்தமான பிரச்னையில், 1956-ஆம் ஆண்டில் கனம் அமைச்சர் என்ன பேசினார் என்பதை நம்முடைய சட்ட சபை ரிபோர்ட்டிலிருந்து படித்துக் காண்பித்தார்கள். அப்படிப் படித்துக் காட்டும்போது, அங்கத்தினர் ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள், அப்படிப் படிக்கக்கூடாதென்று ஒழுங்குப்பிரச்னை எழுப்பினார்கள்.

SRI R. SRINIVASA IYER : Sir, the speaker (the hon. member) was reading from a book which other hon. Members did not know. I raised a point of order with reference to that. The Temporary Chairman ruled that the member should not read from the book. Subsequently also he was reading from the book. I raised a point of order whether the hon. Member was not disobey-

ing the order of the Chair, whether right or wrong. He may perhaps quote one or two sentences, but he was going on reading. None of us knew what it was. I said it was not in order for a member to read from a book. Of course the Chair was pleased to request the hon. member to continue his speech rather than read from the book. Subsequently, the hon. Member Sri Kothandaraman raised the point of order that I was also similarly reading from legislative Acts. I might have given some quotations when I was moving amendments. That was his point of order when the Hon. Speaker occupied the Chair. Quoting from Acts is not like reading from a book.

MR. SPEAKER: What the Chairman (Srimathi Kolandai Ammal) ruled was correct. Let us proceed with the debate. I am sorry I did not fix any time limit. The hon. Member has taken more than half an hour. There are other members also to speak. (An hon. member: He was initiating the discussion.) There is nothing like initiating the debate. The Hon. Minister for Electricity has initiated the discussion. How can another member initiate discussion? Is he moving an amendment to the Hon. Minister's motion? No. Therefore, there must be a limit to that. I now fix a time limit of 15 minutes for every member. Mr. N. K. Palanisami may continue now.

SRI N. K. PALANISAMI: ஆகவே நெகோஷியேடிங் கமிட்டி சிபார்சு வெளியிட்டிருக்கிறார்கள். சர்க்காருக்கும் அது கிடைத்திருக்கும். 22 பிரச்னைகளிலே பத்து பிரச்னைகளில் எந்தவிதமான டிஸ்ஸெண்டிங் மினிட்டும் கிடையாது. அவைகளைப் பொறுத்தவரையில் யாரும் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. அவைகளையாவது இந்தச் சர்க்கார் எப்பொழுது அமுல் செய்யப் போகிறார்களோ தெரியவில்லை. பணம் இல்லை, பணம் இல்லை என்று சொல்லிக்கொண்டிருப்பதில் அர்த்தம் இல்லை. பணத்திற்கு என்ன வழி என்று சொல்லிவிட்டேன். ஆகையால், அவர்களுடைய கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டும். நிறைவேற்றாவிட்டால் பெரிய நெருக்கடியான நிலைமை ஏற்படும் என்பதை எச்சரிக்கை செய்துகொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER: The correct position is this. No hon. member can read anything of which the House is not aware. If he wants to read anything, he should put it before the House.

SRI N. K. PALANISAMI: I was only quoting extracts from the speech of a previous Minister in 1956.

MR. SPEAKER: In that case, the hon. member must make it available to the House. Anyway, I make two requests. Every hon. member will speak for 15 minutes each. I am going to ask the Chairman (Srimathi Kolanthai Ammal) to occupy the Chair again. Let not hon. members give her trouble by raising points of orders. They should all remember that one day every one of them may find himself in a similar predicament. Members can raise points of orders when I am, or the Deputy Speaker is, in the Chair. Mr. Srnivasa Iyer will now speak.

1st November 1958]

(Srimathi Kolanthai Ammal in the Chair.)

* SRI R. SRINIVASA IYER : Respected Madam, in dealing with the Budget of the Electricity Board which has already been discussed threadbare in the Upper House, the Council, and when encomiums have been paid to the work of the electricity department of this Government, I join in the chorus of encomiums paid already in the Upper House. I congratulate the Hon. Minister for Electricity, the Electricity Board, the Chief Engineer and all officials connected with the Board and department on the excellent work that they have done so far in the development of electricity particularly in the matter of rural electrification, with the result that Madras leads to-day other States in the whole of India.

Sir, we have got in rural electrification the total in 1957–58 of 1,301 villages and 16,956 pumpsets. The target for 1958–59 is 1,000 villages and 10,000 pumpsets. We have already electrified 536 villages and connected 7,984 pumpsets. This shows in a period of six months, we have advanced far ahead of schedule. Madam, the total of electrification done upto 30th September 1958 is 7,233 villages and 17,701 pumpsets. Pumpsets are there for agricultural purposes. We have got a target for increasing food production by cent per cent by the end of the Second Plan period. I believe that if the same pace of quickness and efficiency is maintained by the entire staff of the electricity department, we will over-reach or overdo the target expected of us within the Second Plan period. Madam, this Budget should have been prepared and submitted in February of every year along with the Financial Memorandum. But the speech of the Hon. Minister was given to us only yesterday night. We had not sufficient time to study it. But yet with the material available and within the time available, I propose to give my views on the development of electricity and what we have got to do. Under section 5 of the Electricity Act for the first time in 1957 we constituted the Electricity Board. It took about ten years for the Madras Government to constitute the Board after the passing of the Electricity Supply Act of 1948. Under that section, three members is the minimum and seven members is the maximum strength of the Board. Now we have got a Board of five members. The Act did not envisage an absolutely official body. Of the five members already on the Board four are officials and one a retired Accountant-General who has withdrawn from the Board and a substitute in his place is yet to be appointed by the Government. The Act requires that the Members should be full-time servants of the Board because if these Members of the Board have other departmental duties to perform, they cannot devote their entire time to the work of the Board enjoined on them under the Electricity Act of 1948. When seven members could be appointed to the Board, why should this Government limit the number to five? It is high time that more non-officials with experience in production and distribution of electricity and construction of power stations and so on are appointed to the Board. Apart from the

[Sri R. Srinivasa Iyer] [1st November 1958

licensees, we do have non-officials who are expert engineers, who are in private jobs and business and who can very well contribute to the advancement of electricity in the State.

Then, Sir, the council called the consultative council for the State has also been appointed. But the local advisory committees contemplated under the Act have not yet been appointed. Of course I find in the Hon. Minister's speech a reference that the Government are contemplating appointing the local advisory committees. If the problems of every district have to be considered and if every district has to be developed so that the development of electricity could be even in the whole State, there should be a local advisory committee for every district. That work cannot be attended to by the district development councils that we are going to have. That is an unwieldy body of one hundred persons.

THE HON. SRI V. RAMAIAH : I think the present proposal is to entrust this work to the district development council.

* SRI R. SRINIVASA IYER : That is my fear. Therefore it is that I say that this work should not be entrusted to the development council. I am very particular that the local advisory body should be a district body with a few members, not more than half a dozen or seven. The members must be well acquainted with the different aspects of development of electricity power. It is more needed in the districts than in the metropolis. The district development council is an unwieldy body consisting of so many district officials and others. We should not hand over this work to that council. That is my respectful submission. The local advisory council contemplated under the Electricity Act should be a separate, compact and competent body. If such separate local advisory committees were appointed for every district, the needs of each district, the needs of undeveloped areas in each district will get proper and careful attention. Though it is eleven years since the Indian Electricity Act was passed, I request that at least before the 1st of April next year the district committees may be appointed. Why I am particularly stressing this point is this. So far as the Tanjore district is concerned, it is covered by licensees except in one or two taluks which are served by corporations such as the Kumbakonam and the Nagapattinam Electricity Supply Corporations. The licensees have not the means to develop or extend electricity to rural areas. Acquisition of these undertakings is not a possibility at the present stage because the finance of the State and the target fixed or the amount set apart by the Centre under the plan for acquisition of private undertakings is so small that they cannot be acquired very soon. I will later on in my speech refer as to how best these licensees could be helped by the Government for developing electricity in the State.

My submission is that this Board should concentrate on power station development and main line transmission. I do know that very recently in these one or two years very many power stations

1st November 1958] [Sri R. Srinivasa Iyer]

have been completed. Very recently the Periyar Power Station—one unit of it—has been commissioned with 35,000 K.W. Yet there are many more stations which with some extra capital could be commissioned. One such is the third stage in the Pykara which if completed will supply more water to Pykara. When some committees were meeting at Ootacamund, those of us who were members of those committees had occasion to see the Pykara power station. It was then explained to us that on the day of our visit, the water in the dam would not be sufficient for even two days. The water in the reservoir was very little. And these are occasions when we are forced to impose cuts in power supply. If the third stage is taken up such cuts may not be necessary. The scheme has been investigated. The dam has not been constructed. Investigation is complete; everything is ready. Only the scheme has got to be sanctioned and taken up for execution. I do not say that the other projects are not necessary or that they are not important. Other projects like Kundah are certainly important, and Government are taking them up very fast. But what I say is that this should also receive the attention of Government.

One of the duties of the Electricity Board is the extension of electricity to rural areas. They have to concentrate upon supply of electricity throughout the State. Now as it is they are concentrating on areas not covered by electricity licensees. This is not the proper policy to adopt for licensees are commercial bodies and they look more for profit and more profit. They are not able to find the money needed for extension work. In the speech of the Hon. Minister a copy of which has been distributed to us, I find that the Board has applied to the Government for a loan of Rs. 50 lakhs to be disbursed to the licensees as loans. Recently when I met the Hon. Minister for Electricity with the South Madras Electric Supply Corporation in connection with extension of electricity to Orthanad—there is lot of delay in this simply because the Corporation could not find the needed money—I pleaded that the Government should come forward and give loans repayable in ten equal instalments, for extension work by private licensees. The instalments might be more or less. It might be agreed to between the Government and the licensee. It is not a question of solvency of the licensees. There are good returns. If the Government grant them loans recoverable in easy instalments, extension work would proceed faster as these licensees have got plans for extension work within the licensed areas. It is in this connection that I want to strike a note of warning, namely, that the acquisition of private undertakings should proceed slowly. Comparatively speaking, I find there is a difference between the Board's distribution and collection work and the licensee's distribution and collection work. As a commercial body, the licensees take more care to satisfy their customers, please their customers and at the same time are more strict in the matter of collection of revenues. They take the reading of the metre on the last day of the month and send the demand notice to the consumers before the 15th of the next month. The collection is made by the 20th. But what happens under the

Board's administration? I know a little bit of what is happening in Madras City. The reading is taken leisurely, the demand goes after one or one and a half months, and the consumer has to go to the office and pay which he does not generally do. Arrears for three or four months accumulate. Month after month lakhs and lakhs of rupees are thus locked up. And what is the interest on these accumulations? So much of money is lost. Therefore, I desire to say that there should be a system of door to door collection by some officer, say the bill collector, just as the licensees are doing. I am giving this suggestion for the consideration of Government. There is no question of increase in work according to this suggestion. The people required to do this are already there in the department. If only they think of carrying out the work entrusted to them conscientiously, it can be done. I daresay even much more work can be turned out by them as a result of which production would increase, the income would increase also and the clamour for more wages would automatically disappear as they will be automatically paid more wages. The Budget shows a deficit of Rs. 63 lakhs. It has to be made up. I feel if there is greater efficiency in supply of electricity and collection of revenues, this small deficit could be easily be made up.

The next point that I desire to take up, is that the Centre and the State should co-ordinate in the matter of suppling funds to these licensees and making them develop their own areas fully and efficiently. At the same time I find that in the speech of the Hon. Minister that an Investigation Committee has been appointed. If the supplying corporations are taken into confidence, they would be able to help this Investigation Committee in collaboration with the Local District Advisory Committees which I have suggested in the beginning of my speech.

Then I come to the list of prioritites for each district. The Electricity Board, The State Advisory Committee and the District Advisory Committee in consultation with the licensees will have to draw up the list of priorities for each district. Of course, every village wants electricity. As the Hon. Minister for Electricity has put it, every one wants amenities as are available in the cities and that is why there is so much exodus of people from the villages to the cities. If villages are electrified, this exodus from the villages to the cities will drop or rather come to an end. For this a list of priorities is needed. Every villager wants electricity and therefore, wherever there is demand for electricity, it can be easily diverted or extended there. A list of priority has got to be drawn up for the purpose of extending electricity to rural areas. This has got to be done in such a way as every district can be developed equally.

The Board should also plan for additional points of high voltage supply in licensee areas and execute such works rapidly. When the villagers want electricity, they have to apply to the Government. Their application is forwarded to the licensee concerned who makes the investigation. I know in the Pattukottai taluk there are areas

1st November 1958] [Sri R. Srinivasa Iyer]

where a number of pump-sets can be installed. In fact, in Orthanad, one of the potential areas, pump-sets are going to be installed. Other areas are from Peravurani to Avanam and Thiruchitrambalam and from Keeramangalam to Kothamangalam and Merpanakadu where water table is fairly high and pump-sets could be easily installed and the people there are anxious to take to installing pump-sets for raising commercial crops like chillies and groundnut. The licensees have investigated these areas but for want of proper high power stations, electricity could not be extended to these areas. The people there are prepared to pay one year's advance and deposits have been made. Yet electrification could not be extended to such really needy areas because there is no planned scheme for that.

At the same time the licensees have to be congratulated on the speed with which they are doing work for which sanction has been given, I know that during the cyclone period in 1955, they restored the whole connection within 15 days which could not have been done by the concerned department of the Government. Licensees as a commercial body, have got incentive to produce more and give more supply of electricity and get more revenue.

Recently the Hon. Minister for Public Works said that a time would come when we would be producing more electric power which we may have to vend in the streets. In this connection I would submit that the work connected with electrification of the railway line from Tambaram to Villupuram which is one of the items intended for our supplying electricity from the thermal station in Madras, is being slowed down. Interested parties may say that that might be due to the proposal to electrify the railway line from Madras to Arkonam. If the electricity produced by this State is to be sold profitably, I would say that the railway line from Madras to Villupuram is a potential consumer and this Government should take steps to see that the electrification of this line is taken up and priority is given for the completion of this scheme. In this connection, I wish to point out that tenders have been called for by the Eastern Railway and it is also advertised in the newspapers that the north-eastern railway line is to be electrified. Sir, railways belong to the whole of India. Railways in every part of India should be electrified if electricity is available and can be easily done. If the difficulty of getting foreign exchange like sterling and materials does not stand in the way of the Eastern Railway electrifying their railways, why should it stand in the way of the electrification of the railway line from Madras to Villupuram? The work connected with it is being slowed down and I request the Government of Madras to take immediate steps to see that the electrification of the Madras–Villupuram line is completed before the end of the Second Five-year period. Thank you.

* SRI A. V. P. ASAITHAMBI: On a point of information, **Madam**, இப்போது அமைச்சர் அவர்களுடைய பேச்சை அச்சிட்டு வெளியிட்டிருக்கக் கூடிய பிரசுரத்தில் முன் பக்கத்தில் நம்முடைய சென்னை சர்க்காரின் சின்னம் இருக்கிறது. உள்ளே மத்திய சர்க்காருடைய சின்னம்

போடப்பட்டிருக்கிறது. பொதுவாக சென்னை ராஜ்ய பிரசுரத்திலே மத்திய சர்க்காருடைய சின்னம் போட்டதாக இல்லை. இதிலே போட்டிருப்பதைப் பார்த்தால் சீக்கிரமாக மின்சாரத்தையும் மத்திய சர்க்கார் எடுத்துக் கொண்டு விடுமோ என்ற சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. நிலைமை என்ன என்பதை விளக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

**The Hon. Sri V. RAMAIAH** : கனம் அங்கத்தினருக்குச் சந்தேகம் வேண்டாம். இரண்டு சின்னங்களும் நம் தேசத்தைச் சேர்ந்ததுதான்.

* **Sri M. S. SELVARAJAN** : கனம் தலைவி அவர்களே, பிரஸ்தாப விவாதத்திலே இருக்கக் கூடிய, மின்சார சம்பந்தமான அமைச்சர் அவர்கள் சொன்ன குறிப்பிலே காண்கின்ற அத்தனை விஷயங்களும் மனப்பூர்வமாக வரவேற்கத் தகுந்த அம்சங்கள் நிறைந்தது. நம்முடைய ராஜ்யம் தேசத்திலேயே தலை நிமிர்ந்து நிற்கக் கூடிய அளவுக்கு கடந்த 10 வருட காலமாக சரித்திரம், கொண்டிருக்கிறது. பம்பாய் மாகாணம், வங்காள மாகாணம் போன்ற மாகாணங்கள் நம்மை விட ஓரளவுக்கு முன் தங்கியிருந்தாலும் கூட, அவைகளெல்லாம் அங்கங்கே இருக்கின்ற சூழ்நிலைக்கேற்ப, அங்கங்கே இருக்கின்ற வசதிகளுக்கேற்ப, அங்கங்கே இருக்கின்ற மலைப் பிராந்தியங்களுக்கேற்ப, அங்கங்கே ஹைட்ரோ எலெக்ட்ரிஸிடி உண்டாக்க இருக்கக் கூடிய வசதிகளுக்கேற்ப, அவைகளையெல்லாம் பயன்படுத்தி, கிடைக்கக் கூடிய கனிப் பொருள்கள், நிலக்கரி இவைகளை வெட்டியெடுத்து அவைகளைப் பயன்படுத்தி, அவைகளெல்லாம் நம்மை விட முன்னால் இருந்தாலும் கூட, நாம் தலை நிமிர்ந்து பேசக் கூடிய அளவுக்கு பல கிராமங்களிலும், பல குடிசைகளிலும் கூட மின்சாரம் கொடுத்து, பட்டணப் பகுதிகளில் இருக்கக் கூடிய அளவுக்கு வசதிகளையும் வாய்ப்பையும் அளித்து நல்ல முறையில் பயன்படுமாறு செயலாற்றி வந்திருப்பதைப் பார்க்கிறோம். பெரும் அளவு மின்சார வசதிகளைப் பயன்படுத்திக் கொள்வதிலே பம்பாய், வங்காளம் போன்ற மாகாணங்கள் முன்னால் இருக்கலாம். ஆனால் சென்னை ராஜ்யத்தில் அடங்கிக் கிடக்கும் மேன்மை என்னவென்றால், 1947-ம் வருஷத்திலிருந்து, சுதந்திரம் வந்த பிறகு, ஆரம்ப காலத்தில் 800 கிராமங்களில் தான் மின்சாரம் இருந்ததானது இப்போது 8,000 கிராமங்களுக்கு எட்ட வழி செய்திருக்கிறார்கள். அதே நேரத்தில் 3,500 பம்ப் செட்டுகளுக்கு மின்சார இணைப்பு கொடுத்திருந்த நிலையை 10 வருஷங்களுக்கு முன்பு பார்த்தோம். ஆனால் சுதந்திரம் வந்த பிறகு, 10 வருஷ காலத்திற்குள், ஏறத்தாழ 75,000 பம்ப்செட்டுகளுக்கு, விவசாயிகளுக்குப் பயன்படும் முறையில், மின்சார இணைப்பு கொடுத்திருக்கக் கூடிய பெருமை முற்றிலும் சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்தது. நம்மை விட முன்னால் இருக்கிறது என்று சொல்லக் கூடிய பம்பாய், வங்காளம் இவைகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால், பல்லாயிரக் கணக்கான கிராமங்களுக்கு, பல்லாயிரக்கணக்கான குடிசைகளுக்கு, பல்லாயிரக்கணக்கான விவசாயிகளுக்கு மின்சாரத்தை கொடுத்திருக்கும் பெருமை சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்ததாகத் தான் ஆகும்.

அது மாத்திரமல்ல. முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்க்கப்பட்ட திட்டங்களையெல்லாம் முதல் நான்கு ஆண்டுகளிலேயே நிறைவேற்றி விட்டு மேலும் திட்டங்களைப் போட பணம் எங்கே என்று கேட்கும் அளவுக்கு தலை நிமிர்ந்து பெறு நடை போட்டது சென்னை ராஜ்யம். இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் போடப்பட்டிருக்கிற திட்டங்களை நிறைவேற்றுகிற முறையிலும், போடப்பட்ட திட்ட காலத்திற்குள்ளாகவே வெகு திறமையாகவும் சிக்கனமாகவும் நிறைவேற்றுகிற முறையிலும், நல்ல காரியங்களை சுட்டிக் காட்டி மத்திய சர்க்காரிடத்திலிருந்தும், வெளி தேசத்திலிருந்து ஆங்காங்கு நமக்கு உதவி கொடுத்து வருகின்றவர்களிடத்திலிருந்தும் நல்ல பாராட்டுதல்களைப் பெற்று அநேக திட்டங்களை நிறைவேற்றிக் கொண்டு வருகிறோம். முன்னுக்கு வந்திருக்கிற பல்வேறு தேசங்களோடு நம்மை சரி நிகராகச் சொல்லும் அளவுக்கு நாம் முன்னுக்கு வராவிட்டாலும் கூட, உலகத்திலே இருக்கக்கூடிய நாகரிகம் மிகுந்த நாடுகளில் மின்சாரம்

1st November 1958] [Sri M. S. Selvarajan]

உபயோகப் படுத்தக்கூடிய அளவுக்கு சராசரி விகிதாசாரத்தை எட்டிப் பிடிக்கவில்லையாயினும், நாம் தலைநிமிர்ந்து பெருமைப்படக்கூடிய அளவுக்கு இந்தத் துறையில் முன்னேறியிருக்கிறோம் என்பதை யாரும் மறுக்கமுடியாது. பல நூற்றாண்டு காலமாக முன்னேற முடியாத நாம், சுதந்திரம் கிடைத்தபிறகு பெருமைப் படத்தக்க அளவுக்கு முன்னுக்கு வந்திருக்கிறோம். நம்முடைய நாட்டின் முன்னேற்றத்துக்கு இது ஒரு அறிகுறி. பல தொழில்களை வளர்ப்பதற்கு இந்த மின்சாரம் ஏதுவாக யிருக்கிறது. தொழில் துறையில் நாம் போதுமான அளவு முன்னேறு விட்டாலும், நம்முடைய தேசத்திலே ஆங்காங்கே இருக்கக்கூடிய தொழில்களை வளப்படுத்துவதற்கு இந்த மின்சாரம் வாய்ப்பளித்திருக்கிறது என்பதை நாம் பார்த்து வருகிறோம். முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நிறைவேற்றப்பட்ட பல திட்டங்களின் மூலமாக நமக்குக் கிடைக்கக்கூடிய மின்சாரத்தின் அளவு, 1961-ம் ஆண்டுக்குள் முன்பு உள்ளதை விட இரட்டிப்பு மடங்காக அதிகரிக்கும்பொழுது, நம்முடைய ராஜ்யம் தொழில் துறையிலும் முன்னுக்கு வருவதற்கு சந்தர்ப்பம் இருக்கிறது. பல்வேறு மலைப் பகுதிகளிலே இருக்கக்கூடிய அருவிகளையும், ஆறுகளையும் மின்சார சக்திக்காகப் பயன் படுத்தக்கூடிய வாய்ப்பு நமக்கு குறைந்திருந்தாலும்கூட, பூமிக்கு அடியிலே உள்ள கனிப்பொருள்களிலிருந்து எந்த அளவுக்கு அந்த சக்தியைப் பயன்படுத்திக் கொள்ள முடியுமோ அந்த அளவுக்கு செய்து வருகிறோம் என்பதற்கு எடுத்துக்காட்டாக நெய்வேலித் திட்டம் நடைபெற்று வருகிறது. இந்தத் திட்டத்திலிருந்து 2 லட்சத்திற்கு மேற்பட்ட கிலோவாட்ஸ் மின்சார சக்தி கிடைக்கிறபொழுது, நம்முடைய ராஜ்யம் முழுவதிலும் தொழில் வாய்ப்பு அதிகரிக்கும் என்பதை நினைக்கும்பொழுது, நமக்கு திருப்தி ஏற்படுகிறது. பல்வேறு கிராமங்களுக்கு இந்த மின்சார சக்தியை விநியோகிக்கும் முயற்சியிலே, எந்தப் பகுதிகளுக்கு இந்த வாய்ப்பை அளிக்க வேண்டுமோ, எங்கே வெளிச்சம் இருக்க வேண்டுமோ, எங்கே ஒளி வீச வேண்டுமோ, அந்த அபிலாஷை நிறைவேற இங்கே சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையில் நல்ல அம்சங்கள் இருக்கின்றன என்பதை நாம் பார்க்கிறோம். ஹரிஜனப் பகுதிகளுக்கு மின்சாரம் கொடுப்பதிலே அதை எப்படி கட்டுபடியாகக் கூடிய திட்டமாக (**remunerative scheme**) மாற்றலாம் என்பதில் நாம் கவனம் செலுத்தி வருகிறோம். ஆனால் நடை முறையில் பல சிரமங்கள் இருக்கின்றன. ஹரிஜன கிராமம், ஹரிஜன காலனி என்று எதைக் குறிப்பிடுவது என்பதிலே சிக்கல்கள் ஏற்படலாம். ரெவென்யூ கிராமம் ஒன்றாக இருக்கலாம். அல்லது ஒரு ரெவென்யூ கிராமத்தில் பல ஹாம்லெட்கள் இருக்கலாம். ஹரிஜன கிராமம் என்று ரெவென்யூ அதிகாரிகள் செர்ட்டிபிகேட் கொடுத்தாலன்றி, ஹரிஜன நிதியிலிருந்து பயன்படுத்திக் கொள்வதில் சிரமம் இருக்கிறது. சில ஊர்களில், காலனிகளில் ஒன்றிரண்டு ஹரிஜனர் அல்லாதவர்கள் இருக்கலாம். அவ்விடங்களை ஹரிஜன கிராமம் என்று ரெவென்யூ அதிகாரிகள் செர்ட்டிபை பண்ணாத நிலையில் ஹரிஜன நிதியிலிருந்து வழங்கப்படும் மான்யத்தைச் செலவழிப்பதில் கஷ்டம் ஏற்படலாம். இத்தனை சத விகிதம் ஹரிஜனங்கள் வாழக்கூடிய கிராமமாக இருந்தால் அவை ஹரிஜன கிராமங்கள் ஆகும் என்று சர்டிபை செய்ய நமது சர்க்கார் ரெவென்யூ அதிகாரிகளுக்கு உத்தரவிடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேஜர் பஞ்சாயத்துகளுக்கும், மைனர் பஞ்சாயத்துகளுக்கும் கூட இந்த மின்சார வாய்ப்பு கிடைத்திருக்கிறது. அப்படி யிருந்தும் கூட, பஞ்சாயத்துக்களிலுள்ள சிற்சில பகுதிகளுக்கு, குறிப்பாக குக்கிராமங்களுக்கு இந்த மின்சார சக்தி எட்டவில்லை. மத்திய பகுதிகளுக்கு எட்டியிருந்தாலும் கூட, கரையோரமாக இருக்கும் பகுதிகளுக்கு—ஹரிஜனப் பகுதிகளுக்கு மாத்திரம் அல்ல, மேலும் பல பகுதிகளுக்குக் கூட—இன்னும் போய்ச் சேரவில்லை. இதன் காரணமாக பஞ்சாயத்து ஏரியாக்களில் வரிவசூல் செய்வதில் சிரமம் இருக்கிறது. சில இடங்களில் அதிருப்தி ஏற்பட்டு, வேகம் கொண்டு, அதன் காரணமாக லைட்களை உடைக்கும் துற்பாக்கிய நிலைமைகூட ஏற்பட்டிருக்கிறது. பத்து சத விகிதம் வருமானம் கிடைத்தால் தான் "**remunerative scheme**" என்று சொல்லும்பொழுது,

மின்சார இணைப்பில் விட்டுப்போன பகுதி ஒரு தெருவாக இருக்கலாம். அல்லது குக்கிராமங்களாக இருக்கலாம். ஹரிஜனப் பகுதிகளுக்கு ஹரிஜன மானயத்தின் மூலமாக கொடுத்து விடலாம். தொழில் வளர்ச்சி அடையவேண்டிய பகுதியாக இருந்தால், அதற்கு மின்சார சக்தி கிடைத்து விடும். ஆனால் இப்பொழுதுள்ள திட்டத்தின்படி, சிறு சிறு கிராமங்கள் விட்டுப்போகக் கூடிய அபாய நிலையிலிருக்கின்றன. பிற்பட்ட பகுதியாக இருந்தாலும் சரி, முற்பட்ட பகுதியாக இருந்தாலும் சரி, பஞ்சாயத்து ஏரியாக்களிலே விடப்பட்டிருக்கும் கிராமப் பகுதிகளுக்கு விசேஷ மான்யம் அளித்தாயினும் மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எந்தெந்தப் பகுதிகளுக்குக் கொடுக்க வேண்டுமென்பதை அரசாங்கம் பரிசீலனை செய்யவேண்டும்.

கடற்கரைப் பகுதிகளுக்கு, குறிப்பாக மீனவர் வசிக்கும் பகுதிகளுக்கு, மினசார வசதி செய்து கொடுப்பதில் சிரமம் இருக்கிறது. கடற்கரையை ஒட்டிய ஒன்றிரண்டு தெருக்கள் மீனவர் வசிக்கும் பகுதிகளாக இருக்கலாம். அந்தப்பகுதிகளுக்கு வசதி செய்து கொடுப்பதில் சங்கடங்கள் இருக்கலாம். அந்தப் பகுதிகளுக்கும் இந்த வசதி எட்டுவதற்கு, ஹரிஜன இலாகாவிலிருந்து எப்படி மான்யம் பெற்று ஹரிஜன கிராமங்களுக்கு வழங்குகிறார்களோ, அதே போல் மீன் இலாகாவிலிருந்து விசேஷ மான்யம் பெற்று மின்சார வசதி செய்து கொடுக்கவேண்டும்.

குறைந்தபட்சக் கட்டணத்தை 50 ரூபாயிலிருந்து 6 ரூபாய், 15 ரூபாய் என்று குறைத்து விவசாயிகளுக்கு சலுகை காட்டியிருக்கிறார்கள். தண்ணீர் இல்லாத பிரதேசங்களில் பம்பு செட்டுகள் வைத்து கிணறுகளிலிருந்து தண்ணீர் இறைப்பதற்கு தண்ணீர் வறட்சி, பம்புகள் கிடைப்பதில் தாமதம், நில வில்லங்கம் முதலிய கஷ்டங்களை உணர்ந்து பரிகாரம் கண்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்க அம்சம். ஆனால் கிராமத்திலே இருக்கக்கூடிய வீடுகளுக்கு மின்சார இணைப்புக் கொடுப்பதில் சிற்சில சிரமங்கள் இருக்கின்றன. "மெயின்டனென்ஸ்" செக்ஷன் என்றிருக்கிறது. வீடுகளுக்கு மின்சார இணைப்புக் கொடுக்கக் கூடிய சிப்பந்திகள் நியாயமாக நடந்துகொள்வதில்லை என்று அவதூறுகள் வருகின்றன. இதனால் கிராம மக்கள் மிகவும் சங்கடப்படுகிறார்கள். இதை நிவர்த்திக்க அமைச்சர் அவர்கள் தக்க முயற்சி எடுப்பார்கள் என்று நினைக்கிறேன்.

மின்சார இலாகாவிலே, மெயின்டனென்ஸ் செக்ஷன், கமர்ஷியல் செக்ஷன், கன்ஸ்டிரக்ஷன் செக்ஷன் என்று பல பிரிவுகள் இருக்கின்றன. எங்கே எந்த செக்ஷன் இருக்கிறது என்று தேடிப்பிடிக்க வேண்டியிருக்கிறது. பல பிரிவுகளாக பல இடங்களில் இருப்பதால், யாரிடத்தில் போய் எதைச் சொல்லுவது என்று தெரியவில்லை. கட்டிட சிரமம் இருந்த போதிலும், கூடுமான வரையில், இந்த எல்லா செக்ஷன்களும் ஒரே இடத்தில் இருப்பதற்கு வாய்ப்பு இருக்குமேயானால், ஜனங்கள் கஷ்டப் பட மாட்டார்கள்.

மின்சார இலாகாவிலுள்ள சிப்பந்திகளின் குறைகளை மின்சார போர்டு உணர்ந்து அவர்களுக்கு சம்பள உயர்வு கொடுத்திருப்பது மிகவும் பாராட்டத் தக்கது. சமீப காலத்தில் நிறைவேற்றிய திட்டங்களும், இப்பொழுது நிறைவேற்றப்பட்டு வரும் திட்டங்களும் நமது ராஜ்யத்திற்கு பெரும் சொத்து போன்றது. எப்படி ரெயில்வேக்களில் போடப்பட்ட 800 கோடி ரூபாய் மூலதனம் நமது தேசத்திற்கு ஒரு பெரிய சொத்தாக இருக்கிறதோ, அதே மாதிரி இந்த பல்வேறு மின்சாரத் திட்டங்களிலே போடப்பட்ட மூலதனம் நமது ராஜ்யத்திற்கு ஒரு பெரும் சொத்தாக இருக்கும். இந்த 10 சத விகிதமாக இருப்பது எங்கே 18 ஆக மாற்றப்படுமோ என்ற பயம் இருக்கிற நேரத்தில், ஆங்காங்கே கிடைக்கும் தேக்கு, புனை போன்ற பொருள்களையும் அவை போன்ற உறுதியான இதர மரங்களையும் பயன்படுத்திக் கொண்டால், இரும்பு, உருக்குக்காக செலவிடும் பணம் குறையும். மேலும் மத்திய சர்க்காரிடமிருந்து இந்தத் திட்டங்களுக்காக எவ்வளவு மான்யம் பெறமுடியுமோ, அதைப் பெறுவதுடன், கானடியன் எய்டு புரோகிராம், கொழும்புத் திட்டம், ரஷிய உதவி இவைகளையும்

1st November 1958] [Sri M. S. Selvarajan]

பெற்று, தொழில் துறையில் பின்தங்கியிருக்கும் இடங்களுக்கெல்லாம் மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மக்களிடம் கடன் கேட்டபொழுது ஓடோடியும் வந்து கைகொடுத்து உதவி ஞர்கள். இப்பொழுது தனியார் நடத்தும் எட்டு கம்பெனிகளையும் எவ் வளவு சீக்கிரமாக எடுத்து, அவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுத்து, இந்த போர்டார் வசத்தில் ஒப்புவிக்கிறேமோ, அவ்வளவுக்கவ்வளவு இன்னும் இத்துறையில் நாம் அபிவிருத்தி அடையமுடியும். கம்பெனிகளின் மூலம் பல இடங்களில் 3 வருஷங்களுக்கு முன்பே திட்டங்கள் போடப்பட்டிருந் தும், இன்னும் அவைகள் முடிவு பெறவில்லை. கம்பிகளெல்லாம் போடப் படவேண்டியிருக்கின்றன. வீடுகளில் "வைரிங்" போடப்பட்டு முடிந் திருந்தும்கூட, கம்பெனியார் கரண்டு கொடுக்க முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். கொடுப்பதற்குமில்லை, எடுப்பதற்குமில்லை. இத ஞல் மிகுந்த கஷ்டம் உணரப்படுகிறது. பல லட்சக் கணக்கான ரூபாயை மக்கள் கடன் கொடுக்க முன்வருகிறபொழுது, மேலும் கொஞ்சம் செல வழித்து எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் ராஜ்யம் பூராவிலுமுள்ள கம்பெனிகளை சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ராஜ்யம் பூராவும் ஒளி பெறக்கூடிய திட்டமாக இருப்பதற்கு வேண்டிய சகல முயற்சிகளையும் எடுத்துக்கொள்ளவேண்டும். ஜில்லாதோறும் சபையில் இருக்கக்கூடிய அங்கத்தினர்கள் கொண்ட ஒரு குழுவை நிறுவி ஆங்காங்குக்கு உள்ள சிரமங்களைப் போக்குவதற்கு அவர் களுடைய அபிப்பிராயங்களையும், ஆலோசனைகளையும் பெற்று, நல்ல முறை யில் இந்தத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு முயற்சி எடுக்கவேண்டும். அப்பொழுதுதான் திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றுவதற்கு தெம்பு கொடுக்கும். சர்க்கார் போட்டிருக்கக்கூடிய திட்டங்கள் பல நல்ல அம்சங் களோடு கூடியதாக இருப்பதால், அவை மிகவும் வரவேற்கத்தக்கவை என்பது என்னுடைய பணிவன்பான அபிப்பிராயம்.

**Sri P. U. SHANMUGAM :** சட்டமன்றத் தலைவி அவர்களே, மின்சக்தி இலாகா அமைச்சர் அவர்கள் நம்மிடத்தில் விவாதத்திற்கு மட்டும் என்று கொடுத்திருக்கிற மின்சார இலாகா வரவு செலவு திட்டத் தைப்பற்றி விவாதிக்கின்ற வேளையில், நான் குறைகளைச் சொன்னால், அவை களை குறைகளாகக் கருதி எதிர்க்கட்சிக்காரர்கள் வழக்கமாக பாடுகிறதையே பாடுகிறார்கள் என்று எண்ணாமல், அவைகளை நிவர்த்தி செய்ய முடியுமா என்பதை அமைச்சர் அவர்கள் யோசித்து முயற்சி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்று கேள்வி நேரத்தின்பொழுது பதில் அளிக்கையில் மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள் எப்பொழுதுமே திராவிட முன்னேற்றக் கழகத்தினர் வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்று சொல்லுவார்களே, அதுபோலவே தெற்கே நம் மின்சார இலாகா வளர் கிறது, வடக்கே தேய்கிறது என்று பெருமையோடு சொன்னார்கள். அதை காங்கிரஸ் அங்கத்தினர்கள் மேஜை மீது கைதட்டி வரவேற்றார்கள். நான் கவனித்துக்கொண்டிருந்தேன். புத்தகத்தைப் படித்துப் பார்த்ததில் நாம் முதலிலே இல்லை. மூன்றாவதாக இருக்கிறோம் நாம் என்பதை தெரிந்து கொள்ளலாம். நான் ஒன்று ஞாபகப்படுத்த விரும்புகிறேன். மின்சார இலாகாவில் வங்காளமும், பம்பாயும் உற்பத்தி செய்கின்ற அளவு, உபயோ கப்படுத்துகின்ற அளவு, நம்மைவிட மிக அதிகம் என்பதை அமைச்சர் அவர் கள் தமது குறிப்பிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். பம்பாயும் வங்காளமும் மின்சாரத்தை பயன்படுத்துவது தொழில் துறைக்கு என்றும், சென்னை யிலே நாம் விவசாயத்திற்கு அதிகமாக பயன்படுத்துகிறோம் என்றும் அமைச் சர் அவர்கள் பெருமைப் பட்டுக்கொண்டார்கள். வடக்கே இருக்கிற மற்ற மகாணங்களில் தொழில் துறைக்கு மின்சாரத்தை அதிகமாகப் பயன் படுத்துகிறார்கள் என்றால், தெற்கே தொழில் துறைக்கு அதிகமாக மின்சாரத்தை உபயோகப்படுத்துகிற அளவுக்கு தொழில் வளரவில்லை, அதனால் அதற்கு அதிகமாக உபயோகப்படுத்தவும் இல்லை. எனவே தான் ஆசைத்தம்பி அவர்கள் குறிப்பிடும்பொழுது அவ்வாறு குறிப்பிட்டார் கள். 11-30 a.m.

[Sri P. U. Shanmugam] [1st November 1958

அடுத்து, விவாதத்தில் கலந்துகொண்டு பேசிய கனம் சீனுவாசய்யர் அவர்கள் குறிப்பிட்டார்கள். 7 அங்கத்தினர்களை. . . .

THE HON. SRI V. RAMAIAH : கனம் அங்கத்தினர் எதோ தொழில் வளர்ச்சிக்கு அரசாங்கம் மின்சாரம் அதிகமாக கொடுக்கவில்லை என்று சொல்லுகிறார்கள்.

SRI P. U. SHANMUGAM : கொடுக்கவில்லை என்று நான் சொல்லவில்லை.

THE HON. SRI V. RAMAIAH : இப்பொழுது விவசாயத்திற்கு கொடுக்கக்கூடிய 17 பர்சன்டை இன்னும் குறைத்துக்கொண்டு, தொழிலுக்குக் கொடுத்தால் அங்கத்தினர் அவர்கள் சம்மதிப்பார்களா என்று கேட்கிறேன். கேட்கக்கூடிய அளவுக்கு கொடுக்கமுடியாத நிர்ப்பந்தம் இப்பொழுது இருக்கிறது.

SRI P. U. SHANMUGAM : அமைச்சர் அவர்கள் நான் சொல்லியதை தவறுதலாக புரிந்துகொண்டார்களோ என்று ஐயுறுகிறேன். தெற்கே தொழில் வளர்வதற்கு வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது என்று நான் குறிப்பிட்டேனே ஒழிய, தொழில் துறைக்கு அவர் மின்சாரம் கொடுக்கவில்லை என்றோ அல்லது விவசாயத்திற்குக் கொடுக்கும் மின்சாரத்தை குறைக்க வேண்டுமென்றோ நான் குறிப்பிடவில்லை என்பதை தெளிவாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

விவாதத்தில் கலந்துகொண்ட கனம் சீனிவாசய்யர் அவர்கள் குறிப்பிட்டார்கள், 7 அங்கத்தினர்கள் நியமிப்பதற்கு சட்டம் இருந்தும்கூட, 5 பேர்களை நியமித்திருக்கிறார்கள் என்று. அதிலும் ஒருவர் விலகிவிட்டார். அதற்குக் காரணம் என்னவென்று அவர்கள் கேட்டார்கள். அதேமாதிரியாக நானும் ஏன் அப்படிச் செய்தார்கள் என்று சர்க்காரைக் கேட்டால், "நான் எதிர்க்கட்சிக்காரர்" என்று சர்க்கார் கட்சியில் உள்ளவர்கள் என்னை எளனமாகச் பேசமாட்டார்கள் என்று நினைக்கிறேன். ஏன் நியமிக்கவில்லை ? சென்னை சர்க்கார் அலுவலகத்திலுள்ள காரியதரிசிகளை நியமித்துவிட்டு இருக்கிறார்கள். அமைச்சர் இதற்கு சமாதானம் கூறும்போது "இது குழந்தைப் பருவத்தில் (இன்பண்ட்) இருக்கிறது. எனவே சர்க்கார் காரியாலயத்தில் இருக்கிற காரியதரிசிகளை நியமித்திருக்கிறேன்" என்று குறிப்பிட்டார்.

அடுத்து, அவர் சொல்லும்போது "கன்ஸல்டேடிவ் கவுன்சில்" என்று 15 உத்தியோகப் பற்றற்ற அங்கத்தினர்கள் கொண்ட குழுவை ஆலோசனை கேட்பதற்காக வைத்திருக்கிறேன் என்று சொன்னார். பதினைந்து அங்கத்தினர்கள் உத்தியோகப் பற்றற்றவர்கள் என்று சொல்லும்போது, 3 பேர்கள் இந்த சட்ட மன்றத்திலிருந்தும், 2 பேர்கள் மேல் சபையிலிருந்தும் நியமித்துவிட்டு, பாக்கியுள்ள 10 இடங்களில் உத்தியோகஸ்தர்களைப் போட்டு நிரப்பியிருக்கிறார்கள். நான் இந்த நேரத்தில் அமைச்சர் அவர்களை ஒன்று கேட்க விரும்புகிறேன். சர்க்காரால் நியமனம் செய்வது என்று இருப்பதைவிட இந்த சட்ட மன்றத்திலிருந்து 3 பேர்களை தேர்ந்தெடுத்து அனுப்பக்கூடாதா என்று நான்கேட்கிறேன். அப்படி நான் கேட்டால் "நாங்கள் தேர்தல் மூலம் வைப்பதை விட, இப்படிச் செய்வதிலே என்ன தவறு" என்று சொல்லக்கூடும். தேர்தல் முறை என்று சொன்னால் சட்ட மன்றத்திற்கு இப்பொழுது இருக்கும் அதிகாரம் பறிபோய் இருக்கிறதே, அதில் கொஞ்சம் சமாதானம் ஏற்படக்கூடும். பறிபோயிருக்கிற அதிகாரம் என்று சொன்னால், முன்பு மின்சார இலாகா சம்பந்தமான மான்யக் கோரிக்கையை இங்கே பிரேரேபித்தார்கள். நாம் அதற்கு வாக்களித்து மான்யத்தை ஆமோதித்திருக்கிறோம். இப்பொழுது நமக்கு அந்த அதிகாரம் கிடையாது. அந்த அதிகாரம் இல்லாத நிலையில், எந்தவிதமான அதிகாரமும் இல்லாது இருக்கும் நிலையில், சட்டமன்ற அங்கத்தினர்களை நியமிப்பதைவிட தேர்ந்தெடுப்பதில் தவறு ஒன்றும் இருக்க முடியாது என்பதை சுட்டிக்காட்ட விருக்புகிறேன்.

1st November 1958] [Sri P. U. Shanmugam]

1958–59-ம் ஆண்டு மின்சார இலாகா வரவு செலவு திட்டத்தை கொடுக்கும்போது, 2 கோடி ரூபாய் பற்றுக்குறை வருகிறது என்று சொல்லி, 4½ பர்சன்ட் வட்டி விகிதத்தில் கடன் பத்திரங்கள் வழங்குவதற்கு அனுமதி அளித்திருக்கிறார்கள். இவ்வாறு செய்தது அந்த பற்றுக்குறையை சரிக்கட்டுவதற்கான உத்தேசம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அடுத்து இன்னொரு பக்கத்தில் சொல்லுகிறார்கள், ரூ. 63 லட்சம் குறை இருக்கிறது என்று. 'Suitable steps will be taken by the Board to wipe out this deficit என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதற்கு என்ன பரிகாரம் கேட்கப்போகிறார்களோ, அதுதான் புரியவில்லை. கடைசியில் சொல்லுகிறார்கள், "நாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் இந்த மூன்று ஆண்டுகளில் அதிகாமாக செலவு செய்துவிட்டோம். அடுத்து இரண்டு ஆண்டுகளில் ஒவ்வொரு ஆண்டிலும் 10 கோடி ரூபாய் செலவு செய்யப்போகிறோம்" என்று அவர்கள் குறிப்பிடுகிறார்கள்: 'In order to enable the Board to spend at least Rs. 10 crores during each of the last two years of the Second Plan, the Government are considering the question of diverting to the Electricity Board for power projects in the Second Five-year Plan about Rs. 6 crores from the anticipated savings under other Plan heads.' மற்ற தலைப்புகளில் ஏற்படக்கூடும் என்று எதிர்பார்க்கக்கூடிய மிச்சத்திலிருந்து அனுப்புகிறோம், divert செய்கிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். மற்ற திட்டங்களில் 6 கோடி ரூபாய் மிச்சம் ஏற்படலாம் என்று எதிர்பார்க்கிறோம் என்று சொல்லுகிறார்களே, எப்படி திட்டத்தில் மிச்சம் ஏற்படும் என்று எதிர்பார்க்கிறார்கள் என்று எனக்கு புரியவில்லை. மிச்சம் ஏற்படுத்த வேண்டுமென்று நினைக்கிறார்களா, அல்லது மிச்சம் ஏற்படும் என்று நினைக்கிறார்களா ? மிச்சம் என்று சொன்னால், திட்டங்கள் கிடையாதா, அல்லது போட்ட திட்டங்களை நிறைவேற்றாமல் விட்டுவிடப்போகிறார்களா என்பது நமக்குப் புரியவில்லை. எந்த தலைப்பின் கீழ் 6 கோடி ரூபாய் மிச்சப்படுத்தி கொடுக்க இருக்கிறார்கள் என்று நமக்குப் புரியவில்லை.

அடுத்து, மின்சார வெட்டைப்பற்றி சொல்லும்போது, எதிர் காலத்தில் சில ஆண்டு காலத்திற்காவது மின்சாரவெட்டு இருக்காது என்ற நம்பிக்கையை அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். அந்த நம்பிக்கையை நான் பாராட்டுகிறேன்.

அடிக்கடி கிராமங்களுக்குத்தான் வெட்டுகள் ஏற்படுகின்றன. அதற்குக் காரணம் என்ன ? அதைப்பற்றி நாம் சற்று ஆராய வேண்டும். எந்த விதத்தில் அப்படிப்பட்ட வெட்டு ஏற்படுகிறது, அப்படி ஏற்படாமல் பார்த்துக்கொள்வதற்கு ஏதாவது திட்டத்தை தேடிக்கொள்ள வேண்டாமா என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்த மாகாணத்தில் ஐந்து நகர சபைகளிலும், எட்டு தனிப்பட்டவர்களிடத்திலும் இந்த மின்சார உற்பத்தி ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இந்த எட்டும் ஐந்தும் ஆக பதிமூன்று இடங்களில் மின்சாரம் வினியோகிக்கப்படுகின்றன. இதற்கு முன் எந்த அளவுக்கு எந்த ரேட்டுக்கு கொடுக்கப்பட்டதோ அந்த அளவுக்கே இன்னும் கொடுக்கப்பட்டு வருகிறது என்றும் அதே ரேட்டின் அடிப்படையில் இன்னும் வசூல் செய்யப்பட்டு வருகிறது என்றும் மற்றும் சர்சார்ஜ் போடுவதைப்பற்றி பரிசீலனையில் இருக்கிறது என்றும் சொல்லியிருக்கிறார். அந்தப் பரிசீலனை எப்பொழுது முடியும் என்பது தெரியவில்லை. ஆனால் விவசாயிகளிடத்தில் அக்கரை எடுத்துக் கொண்டிருக்கிறோம் என்று சொல்லுகிறார்களே தவிர, இன்னும் அதைப் பற்றி பரிசீலனை செய்யப்படவில்லை. பத்து ஆண்டுகளாகியும் இன்னும் ஒரு முடிவும் செய்யவில்லை. ஏன் இவ்வளவு கால தாமதம் ? நகர சபையினிடம் இருப்பதாவது போகிறது, ஏனென்றால் அதை ஒரு க்வாசி கவர்ண்மெண்டாக வைத்துக்கொள்ளலாம். தனிப்பட்டவர்களைப்பற்றி ஏன் இன்னும் முடிவு செய்யவில்லை. அதைப்பற்றி கேட்டால் அவைகளை எடுத்துக்கொள்வதாக இருந்தால் அவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கவேண்டியதாக இருக்கிறது என்றும், ஐம்பது கோடி ரூபாய் கடனாகக் கொடுக்கவேண்டியதாக இருக்கிறது என்றும் சமாதானம் சொல்லப்படுகிறது. அப்படி

[Sri P. U. Shanmugam] [1st November 1958

கொடுத்தால் பத்து வருஷ தவணையில் திருப்பி வாங்க வேண்டியதாக இருக்கிறது என்றும் சொல்லப்படுகிறது. அப்படி ஐம்பது ரூபாய் கடனைக் கொடுக்கிறது என்று சொன்னால், அதை பத்து ஆண்டு தவணையில் திருப்பி வாங்கவேண்டும் என்று சொன்னால் இந்த பத்து வருஷ காலத்தில் அந்த பதிமூன்று கம்பெனிகளை சர்க்கார் ஏற்றுக்கொள்ளப் போவதில்லையா ? அதனால் சர்க்கார் அவைகளை எடுத்துக்கொள்ளாமல் தனிப்பட்டவர்களிடம் விட்டு விடப்போகிறார்களா என்பது தெரியவில்லை. பத்து வருஷங்களில் திருப்பிக்கொடுக்கவேண்டும் என்று இருந்தால் ஏன் அவைகளை இப்பொழுதே சர்க்கார் எடுத்து நடத்தக் கூடாது ? அதனால் நமக்கு ஐம்பது லட்ச ரூபாய் லாபம் வரவில்லையா ?

அடுத்தபடியாக ஒரு தனிப்பட்ட வீட்டில் மின்சாரத்திற்காக கட்ட வேண்டிய சர்சார்ஜ் பணத்தைக் கட்ட ஒரு நாள் தவறி விட்டாலும் மின் சார இலாகா அவன் வீட்டிற்கு வந்து விசையை எடுத்துவிடுகிறார்கள். அதைப்போலவே மினிமம் சார்ஜ் கட்ட வேண்டிய ஒரு விவசாயி கிராமங்களில் கட்டுவதற்கு ஒரு நாள் தவறிவிட்டாலும், ஒரு வாரம் அல்லது பத்து நாள் தவறி விட்டாலும் அவனைக் குழப்பி விட்டு பணம் ஏன் கட்டவில்லை என்று கேட்டுவிட்டு மின்சாரம் கொடுப்பதை தடுத்து விடுகிறார்கள். அரை அல்லது முக்கால் ரூபாய் கட்டாமல் இருந்தாலும் மின்சாரம் கொடுப்பதை தடுத்து விடுகிறார்கள். அப்படி ப்யூஸை எடுத்து விடுவதனால் அந்த வீட்டுக்காரருக்கும் சரி, விவசாயிக்கும் சரி அதை மறுபடியும் போடுவதற்கு ஐந்து ரூபாய் செலவாகிறது. இவ்வளவு தொல்லைகள் அங்கே இருக்கின்றன. இப்படிப்பட்ட தொல்லைகளை எல்லோரும் அனுபவிக்கிறார்கள். இதையும் நாம் பார்த்துக்கொண்டு தானிருக்கிறோம். இதை ஏன் நிவர்த்திக்கக்கூடாது என்று சர்க்காரை நான் கேட்கிறேன்.

டிராம் கம்பெனியை எடுத்துக்கொண்டால்—அது வெள்ளைக்கார கம்பெனி, திராவிட முன்னேற்றக் கழகம்தான் வெள்ளைக்காரர்களுக்கு அடி வருடி என்று சொல்லுகிறார்களே—அதை என்ன செய்தார்கள். அவர்களிடமிருந்து இரண்டு லட்சத்தி இருபத்தி ஏழு ஆயிரம் ரூபாய் மின்சாரத்தை உபயோகப்படுத்தியதற்கான சார்ஜை இன்னும் வாங்கவில்லை. அதற்கு என்ன காரணம் என்பது தெரியவில்லை. அந்தப் பணத்தை வசூல் செய்யாமல் ஏன் விட்டு வைத்திருக்கிறார்கள் ? ஆடிட் ரிப்போர்ட்டில் வரும் அளவிற்கு அதை விட்டு வைத்திருப்பானேன் ? ஆனால் அப்படி ஏழைகளிடம் விட்டு வைக்கிறார்களா ? ஏழை வைத்திருந்தால் அவனுடைய வீட்டிலுள்ள விசையை கழட்டி விடுகிறார்கள். ஆனால் வெள்ளைக்கார கம்பெனி என்பதற்காக அவர்களிடமிருந்து இந்த இரண்டு லட்சத்தி இருபத்தி ஏழு ஆயிரம் ரூபாயை இன்னும் ஏன் வசூல் செய்யாமல் இருக்கிறார்கள் ? அதற்குக் காரணம் என்ன என்று புரியவில்லை. இதைக்கண்டு தொழிலாளர்கள் சும்மா இருக்கமாட்டார்கள். இதற்கு சர்க்கார் தக்க சமாதானம் சொல்லவேண்டும். அப்படிக் கேட்டால் ஏதாவது சமாதானம் சொல்லுவார்கள். அவைகளை நாங்கள் ஏற்றுக்கொள்ளலாம். ஆனால் பொது மக்கள் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அது பொதுப்பணம். இதற்கு சர்க்கார் என்ன சமாதானம் சொல்லப்போகிறார்கள் என்பதை எதிர் பார்க்கிறேன்.

அந்த தொழிலாளர்களுடைய கோரிக்கையின் பேரில் ஒரு கமிஷன் நியமித்து அதுவும் விசாரணையில் இருந்துக்கொண்டிருக்கிறது. அவர்கள் இண்டரிம் ரிலீப் நான்கு ரூபாய்கள் கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் அதை இன்னும் 1½ மாதங்களுக்குப் பிறகுதான் கொடுக்க முடியும் என்று சொல்லுகிறார்கள். அதன் பிறகு அவர்கள் எழுதி கொடுத்திருக்கக்கூடிய அறிக்கைகள் எல்லாம் குப்பைத் தொட்டிக்குத்தான் போகப்போகிறது என்றுதான் நினைக்கவேண்டியதாக இருக்கிறது. ஆனால் நான் ஒன்று மட்டும் சொல்லிக்கொள்ளுகிறேன். மின்சாரத்தை தொட்டால் உடனே ஷாக் அடிக்கும். அதைப்போலவே ஊழியர்களுக்கு ஒன்றும் செய்யாவிட்டால் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தால் அது எந்த நிலைமையில் கொண்டுபோய் விடும் என்பதை நான் சர்க்காருக்கு எச்சரிக்கிறேன். தொழிலாளர்களைப்பற்றி பேசுவதற்கு அவ்வளவு

1st November 1958] [Sri P. U. Shanmugam]

அனுபவம் இல்லாவிட்டாலும் அவர்களுக்குக் காட்டவேண்டிய அக்கறையைக் காட்டவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே தொழிலாளர்களுக்கு நல்ல வாய்ப்புக் கொடுக்கவேண்டும் என்றும், அவர்களுக்குத் தேவையானதைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI T. K. SUBBIAH : சட்டமன்ற தாற்காலிக தலைவி அவர்களே, இந்த பட்ஜெட்டை வரவேற்று ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல ஆசைப்படுகிறேன். சென்னை மாகாணத்தில் மின்சாரம் அபிவிருத்தி அடைந்து வருகிறது என்று பெருமைகொள்ளும்படியான நிலையில் நானும் பெருமைப்படுகிறேன். இருப்பினும் குறிப்பாக ஒவ்வொரு ஜில்லாவாரியாக ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தைப் பார்க்கும்போது திருச்சி ஜில்லா மிகவும் பின் தங்கிய நிலையில் இருக்கிறது. அதற்குக் காரணம் என்ன என்று தெரியவில்லை. எனக்குத் தெரிந்தமட்டில் பெருமைபடக்கூடிய அளவில் அது முன்னேற்றமடையவில்லை என்று நான் கருதுகிறேன். மற்ற ஜில்லாவுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது போர்டார் நடத்தக்கூடிய மின்சார உற்பத்தி நிலையங்கள்தான் கிராமங்களுக்கு மின்சாரத்தை அதிகமாக விநியோகித்து வருகின்றன. அதன் மூலமாகத்தான் கிராமங்களுக்கு அதிகமாக மின்சாரம் கொடுக்கப்பட்டு வருகின்றன என்று நினைக்கிறேன். 1947-ல் சுயராஜ்யம் அடைந்த பிறகு 1958 வரையிலும் ஒரு பகுதியிலாவது—எங்கள் உடையார்பாளையம் தாலூகா பகுதியிலாவது எந்த விதமான முன்னேற்றமும் அடையவில்லை. அங்குள்ள மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்றால், யார் சமூகத்தில் ஒத்துழைக்கவில்லையோ அவர்களுக்கு நீர் இல்லை நெருப்பு இல்லை என்று சொல்லுவார்கள். அதுபோல் அல்லவா உடையார்பாளையம் தாலூகாவில் நீரும் இல்லை, நெருப்பும் இல்லை. அங்கே நீரிலும் அபிவிருத்தி அடையவில்லை, நெருப்பிலும் அபிவிருத்தி அடையவில்லை என்று சொல்லலாம். மின்சாரம் அங்கே இல்லை என்பதால் அங்கே நெருப்பு இல்லை. பக்கங்களில் மின்சாரம் வரவில்லை அதனால் அங்கு மின்சாரத்தை பரப்ப முடியவில்லை என்றும் சொல்வதற்கு இல்லை. பக்கத்து ஜில்லாவில் அணைக்கரை வரையில் மின்சாரம் பரவி இருக்கிறது. வட பகுதியைப் பார்க்கும்போது ஸ்ரீமுஷ்ணம் வரையில் மின்சாரம் பரவி இருக்கிறது. ஆனால் உடையார்பாளையம் தாலூகாவில் மின்சாரம் வரவில்லை.

(Mr. Speaker in the Chair)

எங்கள் பகுதி நீர் அபிவிருத்தி அடைய வேண்டும் என்று கேட்டால் அங்கு இயற்கை வசதி இல்லை, ஆறுகள் இல்லை, அதனால் அபிவிருத்தி செய்ய முடியவில்லை என்று சொல்லுகிறார்கள். அது உண்மைதான். இயற்கையின் காரணமாக, அங்கு பல ஊற்றுக் கிணறுகள் இருப்பதால் அவைகளுக்கு பம்புகளை வைத்துக்கொடுத்து நீர் அபிவிருத்தி செய்து கொடுக்கலாம். அங்கே ஊற்றுக் கிணறுகள் இருக்கின்றன, அவைகளை பயன்படுத்திக்கொள்ளலாம் என்று செண்டரல் கவர்ண்மெண்ட் பரீட்சை பார்த்து அந்தப் பகுதிக்கு 6 அல்லது 7 பம்புகள் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனால் அங்கே தண்ணீர் இறைப்பதற்கு மின்சாரம் வேண்டியதாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. ஆகவே அந்த பகுதியில் தண்ணீர் வசதி இல்லாத காரணத்தால் மின்சார சப்ளை கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. மின்சாரம் அதிக தூரத்தில் இருக்கிறது என்று சொல்வதற்கும் இல்லை. எங்கள் தாலூகாவில் மேஜர் பஞ்சாயதாகிய அரியலூர் பஞ்சாயத்திலும், கீழப்பழூர் பஞ்சாயத்திலும்தான் மின்சாரம் இருக்கிறது. கீழப்பழூர் பஞ்சாயத்தின் மற்ற பகுதிகளும் கீழையூர் கிராமம் இப்படி அங்குள்ள சுமார் பத்து கிராமங்கள் மின்சார அபிவிருத்தி அடையவில்லை. அதற்குக் காரணம் குறிப்பாக இந்தக் கம்பெனிகள்தான் என்று சொல்லப்படுகிறது. ஆகவே இந்த போர்டார் அந்தக் கம்பெனிகளை எடுத்துக்கொண்டு அபிவிருத்தி அடைய எவ்வளவு முன் சலுகை காட்டுகிறார்களோ அவ்வளவு நல்லது.

அப்படிச் செய்யும்போது குறிப்பாக திருச்சி ஜில்லாவில் செய்தால் நலமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். ஆனால் நஷ்ட ஈடு கொடுக்கவேண்டுமே என்று சொல்லலாம். குறிப்பாக இந்த தாலூகாவில் அதிகமான பகுதி களில் மின்சாரம் விநியோகிக்கப்படாததால் அதிகப்படியான நஷ்ட ஈடு கொடுக்கவேண்டிய அவசியமே இல்லை. ஜில்லாவாரியாக எடுப்பதில் அதிக சிரமம் இருந்தால் குறிப்பாக உடையார்பாளையம் தாலூகா சம்பந்தப்பட்ட மட்டில் விரைவில் மின்சார முன்னேற்றமடையச் செய்ய வெண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது அரசாங்கம் சொல்லிக்கொள்ளக் கூடிய நிலையில் தேசிய விஸ்தரிப்பு பகுதிகளில் அதிக சலுகைகள் காட்டுவதாக சொல்லியிருக்கிறார்கள். அந்த மாதிரி பார்த்தாலும் எங்கள் தாலூகாவில் தேசிய விஸ்தரிப்பு பகுதிகள் அதிகமாக ஏற்பட்டிருக்கின்றன. அந்தப் பகுதியில் குறிப்பாக திருமானூரில் தேசீய விஸ்தரிப்பு பகுதி இருக்கிறது. அங்கு சுமார் பத்து மைல் தூரத்தில் பத்து பஞ்சாயத்து கிராமங்கள் இருக்கின்றன. அந்த பத்து பஞ்சாயத்துகள் தேசீய விஸ்தரிப்பு பகுதியாக இருந்தபோதிலும் அந்தப் பகுதிகளில் அபிவிருத்தி காண முடியவில்லை. ஆனால் விவசாயிகள் தங்களுடைய உபயோகத்திற்கு என்று சொல்லக்கூடிய நிலங்களில் போரிங் பைப்புகள் நிறைய வைத்திருக் கிறார்கள். அங்கே சுமார் 50 அல்லது 60 ஆயில் எஞ்சின்கள் வேலை செய்கின்றன. அப்படி இருந்தும் அங்கே இன்னும் மின்சாரம் இது வரைக்கும் கொடுக்கவில்லை. இதை முக்கியமாக கருதி அந்தப் பகுதியில் மின்சார அபிவிருத்தி செய்வதற்காக எடுத்துக்காட்டாக இங்குள்ள சேஷ சாயி கம்பெனியை அரசாங்கம் எடுத்து நல்ல முறையில் உடையார் பாளையம் தாலூகாவிற்கு மின்சாரம் கொடுத்து அபிவிருத்தி அடையச் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

11-50 a.m. SRI J. MATHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, மின்சார அமைச்சர் சமர்ப்பித்திருக்கும் இந்த அறிக்கையிலே, இன்றைக்கு நம்முடைய நாட்டிலேயே சென்னை மாநிலம் மின்சாரத்திலே முதன்மையாக விளங்குகிறது என்பதைக் காண்கிறோம். அதைக் குறித்து மகிழ்ச்சியடைகிறோம். ஆனால், அதே நேரத்திலே, இந்த நாட்டிலே தொழில் வளர்ச்சி மின்சாரத்தினாலே பயன் அடையவில்லை என்பதைச் சுட்டிக்காட்டி, நம்முடைய மாநில அரசாங்கத்தைக் குறைகூறும் நோக்கத் தோடு எதிர் கட்சி அங்கத்தினர்கள் சொல்வதைப் பார்த்து மிகவும் ஆச்சரியப்படவேண்டிய நிலையில் இருக்கிறது. நாங்கள் எங்களுடைய பேச்சில் மத்திய சர்க்காரைப்பற்றி குறைகூறிப் பேசினால், வட நாடு வாழ்கிறது, தென்னாடு தேய்கிறது என்று நாங்கள் சொல்கிறோம் என்று அங்கலாயத்துக்கொள்ளுகிறார்கள்.

SRI A. V. P. ASAITHAMBI : கனம் தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்களுடைய பேச்சிலே நம்முடைய மாநிலம் மூன்றாவது ராங்கிலே இருக்கிறது என்று பேசியிருக்கிறார். இப்பொழுது பேசுகிற கனம் உறுப்பினர் நம்முடைய மாநிலம் மின்சாரத் துறையில் முதன்மையாக இருக்கிறது என்று பேசுவதோடு அல்லாமல், வட நாடு வளருகிறது, தென்னாடு தேய்கிறது என்ற வாதத்தையும் இங்கு சொல்கிறார்.

MR. SPEAKER : உங்களுக்குப் பேச வாய்ப்பு ஏற்படும்போது நீங்கள் பதில் சொல்லுங்கள்.

SRI J. MATHA GOWDER : ஆனால், அவர்கள் பேசுவதைப் பற்றி யாரும் அங்கலாய்த்துக்கொள்ளவில்லை. கூத்துக்குக் கோமாளி இருந்தது மாதிரி பேசிக்கொண்டே போகட்டும்; வேண்டாமென்று சொல்லவில்லை.

(கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீ ப. உ. சண்முகம், ஸ்ரீ ஏ. கோவிந்த சாமியும் எழுந்தனர்.)

MR. SPEAKER : "மாதிரி" என்றுதான் சொன்னார்.

1st November 1958]

(கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி மறுபடியும் எழுந்தார்.)

MR. SPEAKER : When I am on my legs, the hon. Member cannot stand. I would appeal to hon. Member Sri Matha Gowder not to use strong language in his speech.

SRI A. GOVINDASAMY : பயித்தியக்காரத்தனமாகச் சொல்கிருர். அப்படியெல்லாம் அவர் சொல்லலாமா ?

SRI P. U. SHANMUGAM : "பயித்தியக்காரன் மாதிரி" என்று சொன்னுல், அவர் ஒத்துக்கொள்வாரா ?

MR. SPEAKER : அவர் சொன்னூர் என்ருல், உங்களுக்குப் பேச சந்தர்ப்பம் கிடைக்கும்போது பதில் சொல்லுங்கள்.

SRI J. MATHA GOWDER : புத்தகத்திலே இருக்கக்கூடிய அட்டைகளிலும்கூட சொட்டைகள் இருப்பதாக சொல்லிக்கொள் கிருர்கள். முதல் அட்டையிலே நம்முடைய மாநில சர்க்காருடைய சின்னம் இருக்கிறது. இரண்டாவது பக்கத்திலே மத்திய சர்க்காருடைய சின்னம் இருக்கிறது என்று இப்படியாகச் சொல்லிக்கொண்டு ஏதோ அட்டையிலே இருக்கக்கூடியதைப் பார்த்துக்கொண்டிருப்பதைப் பார்த்தால்....

SRI M. P. SARATHI : இதற்கு முன்பு வெளியிட்ட புத்தகங்களில் ஒரு புத்தகத்திலாவது அம்மாதிரி வந்திருக்கிறதா என்று மாதா கவுடர் அவர்களை நான் கேட்கிறேன்.

MR. SPEAKER : அவர் சொல்கிருர் என்ருல், நீங்களும் சந்தர்ப்பம் வரும்போது பதில் சொல்லுங்கள்.

SRI M. P. SARATHI : தனக்குத்தான் தெரியும் என்று பேசு கிருர்.

MR. SPEAKER : நீங்கள் பேசும்போது பதில் கொடுங்கள் ; நான் அதை அனுமதிக்கிறேன்.

கனம் அங்கத்தினர் மாதா கவுடர் அவர்களுக்கு நான் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நீங்கள் பேசுவதில் தவறு இல்லாமலிருக்கலாம். ஆனுல், நீங்கள் பேசியதற்கு மற்றவர்கள் பதில் கொடுத்தால், அப்பொழுது பாயிண்ட் ஆப் ஆர்டர் எழுப்பவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். என்ருலும், சண்டை எதற்கு ? சமா தானமாகப் பேசினுல் நன்ருக இருக்கும். ஆங்கிலத்தில் "அப்பீல்" என்று சொல்லுவார்களே அந்த முறையில் உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் இப்பொழுது கேட்காவிட்டால், அவர்கள் பின்னுல் பதில் கொடுத்தால், தயவு செய்து கேட்டுக்கொள்ளுங்கள். மின்சார இலாகா அமைச்சர் அவர்களுடைய அறிக்கையின்பேரில் பேசும்போது கட்சிச் சண்டை எதற்கு ?

THE HON. SRI V. RAMAIAH : உண்மை என்ன என்று அவர் சொல்கிருர்.

SRI J. MATHA GOWDER : அவர்கள் எனக்கு முன்பு பேசி விட்டதால், நான் பேசவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. ஸ்பீக்கர் அவர்கள் சொன்னதற்குப் பிறகு நான் இனி கிளப்புவது இல்லை.

குந்தா திட்டத்தைப் போன்ற மாபெரும் திட்டம் நம்முடைய மாநிலத்தில் இப்பொழுது நடைபெற்றுக்கொண்டு வருவதைப்பார்த்து நாம் சந்தோஷம் அடைகிறோம். பெரியாறு திட்ட வேலை முடிந்த பிறகு நம்முடைய மாநிலத்திலேயே மின்சக்தி குறைவு அதிகமாக

இருக்காது. குறைவு சற்று இருந்தபோதிலும், அதுவும் மான்சூன், காலத்தில் நிவர்த்தியாகிவிடும் என்பதைப்பற்றி ஓரளவு நாம் சந்தோஷப்படவேண்டிய நிலையில் இருக்கிறோம். குந்தா திட்டம் முடிந்ததும் நம்முடைய மாநிலத்திலே மின்சக்தியினுடைய விஸ்தரிப்பு ஓரளவு எல்லா இடங்களுக்கும் பூர்த்தியாகலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலையிலே, எந்தத் திட்டங்களைப் போட்டாலும், அந்த திட்டங்கள் நடைபெறக்கூடிய இடங்களிலே, திட்டத்தை தாமதப் படுத்துவதற்காக அங்கும்கூட சில அரசியல் கட்சிகள் தொழிலாளர்களைப் பயன்படுத்திக்கொண்டு, திட்டத்திற்கு பாதகம் விளைவிக்கக்கூடிய நிலையிலே, தாமதப்படுத்தக்கூடிய நிலையிலே, கிளர்ச்சி செய்து கொண்டிருப்பதையும் நாம் பார்த்துக்கொண்டிருக்கிறோம். இது மிகவும் துர்ப் பாக்கியமான விஷயம். தொழில் வளர்ச்சி பெருக வேண்டும். அதற்காக மின்சக்தி அதிகமாக வேண்டும் என்று நாம் பேசிக்கொண்டிருக்கும் அதே நேரத்தில், மின்சக்தியை அதிகரிக்கும் வண்ணம் ஏற்பட்டுள்ள திட்டங்களில் வேலை செய்துகொண்டிருக்கும் தொழிலாளர்களிடையே கிளர்ச்சி செய்து கொண்டிருப்பதைப் பார்க்கும்போது என்ன பேசுவது என்றே எனக்குத் தெரியவில்லை. இவ்வளவு துர்ப்பாக்கியமான நிலைமையில் அரசியல் கட்சிகள் அங்கு கிளர்ச்சி செய்துகொண்டிருப்பதை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். சமீபத்தில் குந்தாவிலே நான் கேள்விப்பட்டேன் —சிலர் அங்கு நேரடி நடவடிக்கை என்றும், உண்ணு விரதம் என்றும் ஆரம்பிக்கப்போவதாக விளம்பரம் செய்துகொண்டிருக்கிறார்கள். இதைப் பார்க்கும்போது, குந்தா திட்டம் பூர்த்தியாவதைப் பாதிக்கும் அளவில், திட்டம் பூர்த்தியாவதை நெடுநாளைக்குத் தள்ளிப்போட்டுக்கொண்டிருக்க வேண்டும் என்ற அளவில், அது பூர்த்தியடையக்கூடாத அளவில் அவர்கள் வேலை செய்கிறார்களா என்பதைத்தான் நாம் யூகிக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். தொழிலாளர்களுக்குச் சலுகை வேண்டியதுதான். வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால், இதிலே வேலை செய்பவர்கள் பர்மனென்ட் தொழிலாளர்களா, டெம்பரரி தொழிலாளர்களா என்பதைப் பார்க்கவேண்டும். அவர்கள் சொல்கிறார்கள்—டெம்பரரி தொழிலாளர்களாக இருப்பவர்களையெல்லாம் பர்மனென்ட் ஆக்க வில்லை சர்க்கார், பர்மனென்ட் ஆக்க சர்க்கார் தவறிவிட்டது என்று. அவர்களை எப்படிப் பர்மெனென்ட் ஆக்குவது ? கீழ்ப்பவானி அணைக் கட்டுத் திட்டத்தில் வேலை செய்த தொழிலாளர்கள், அந்தத் திட்டம் முடிந்த பிறகு அனுப்பிவிட்டிருக்கிறார்கள். ஒரு வருஷம், இரண்டு வருஷம் அவர்கள் எங்கேயோ இருந்துவிட்டு மறுபடியும் குந்தா திட்டத் திற்கு வந்துவிட்டார்கள் என்பதற்காக அவர்களையெல்லாம் பர்மனென்ட் செய்யவேண்டுமென்றால் அது எப்படிச் செய்யமுடியும் ? அவர்கள் தொடர்ந்து வேலை செய்தால், அவர்களைப் பர்மனென்ட் ஆக்க முடியுமே தவிர, விட்டு விட்டு வேலை செய்தால், அவர்களை எப்படி நிரந்தரமாக்குவது ? தொடர்ந்தாற்போல் அவர்கள் வேலையில் நிரந்தரமாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அவர்களை நிரந்தரமாக்க முடியும். டெம்பரரியாக இருந்தவர்கள் டெம்பரரியாகத்தான் இருக்க வேண்டும். அவர்களை நிரந்தரமாக்க முடியாதிருந்தும்கூட, அவர்களிடத்திலே புகுந்துகொண்டு கிளர்ச்சி செய்கிறார்கள். குந்தா திட்டம் மிக முக்கியமான திட்டம். எஸன்ஷியல் திட்டம். இதுபோன்ற திட்டங்களில் தொழிலாளர்கள் எந்த விதமான நேரடி நடவடிக்கையிலோ வேறு எந்தவகையிலும் பாதிக்கும் படியான நடவடிக்கையிலோ இறங்கக்கூடாது என்றும், அப்படிச் செய்தால் அது சட்ட விரோதம் என்றும் அவர்களுக்கு அறிவித்து உத்தரவு பிறப்பித்தால் மிக நலமாக இருக்கும். இந்த திட்டமும் கூடிய சீக்கிரத்தில் பூர்த்தியடையும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். மின்சார போர்டார் அவர்கள் தயவு செய்து நல்ல விதத்தில் மக்களுக்குப் பயன்பட ஆவன செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

நீலகிரி ஜில்லாவிலே காட்டேரி மின்சாரத் திட்டம் இருக்கிறது. அதை ஏற்கெனவே வெள்ளைக்காரர்கள் பயன்படுத்திக்கொண்டிருந்தார்கள். பிறகு ஏதோ காரணங்களால், யுத்த காலத்திற்குப் பிறகு அதை மூடி விட்டார்கள். அந்த அணை அப்படியே இருக்கிறது. அது கட்டியவுடனே

1st November 1958] [Sri J. Matha Gowder]

மின்சக்தி உபயோகப்படுத்துவது அதிகமாக இல்லை. தண்ணீர் தேங்கிக் கொண்டிருந்த இடத்தில் மணல் அடைந்த காரணத்தால், மேற்கே விவசாயம் செய்வதைப் பாதிக்கக்கூடிய அளவிலே தண்ணீர் தேங்கிக் கொண்டு, அதிகமாக சேதம் ஏற்படும் என்பதை அமைச்சர் அவர்களுக்குத் தெரியப்படுத்தியிருக்கிறார்கள். இதைப்பற்றி மின்சார இலாகா அமைச்சரிடத்தில், அவர் நீலகிரி ஜில்லாவுக்கு வந்திருந்தபோது நான் சொல்லியிருந்தேன். கூடிய சீக்கிரத்தில் இதை எடுத்து நடத்தினால் நமக்கு லாபகரமாக இருக்கும் என்று நான் யோசிக்கிறேன். ஏற்கனவே அது பூர்த்தியடைந்த திட்டம். ஏற்கெனவே மின்சாரம் உபயோகப்படுத்தப் பட்டது. அந்தத் திட்டத்தையும் மறுபடியும் எடுத்துக்கொள்ளும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன்.

செயின்ட் காதரீன் நீர் வீழ்ச்சியின் அருகில் ஒரு அணைக்கட்டுத் திட்டமும் இன்னொரு இடத்தில் இன்னொரு அணைக்கட்டுத் திட்டமும், ஆக இரண்டு அணைத்திட்டங்களை ஆரம்பிப்பதற்கு சர்வே செய்தார்கள். அதற்குப் பிறகு என்ன நிலையில் இருக்கின்றன என்று தெரியவில்லை. அந்தத் தண்ணீரைக் கட்டுப்படுத்தினால், அங்கே மின்சார நிலையம் ஏற்படுத்துவதற்கு முடியும். அதையும் சற்று ஆராய்ந்து பார்க்கும்படியாக நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

கிராமங்களுக்கு மின்சாரத்தை விஸ்தரிக்கும்போது கிராமப் பகுதியில் இருப்பவர்கள் ஒன்று செய்கிறார்கள். அந்த கிராமத்திற்கு மின்சாரம் வேண்டுமானால் அந்த கிராமத்தில் உள்ள 50 பேர்களோ அல்லது 100 பேர்களோ தாங்கள் விளக்குகள் போட்டுக் கொள்வதாக விண்ணப்பம் செய்து விடுகிறார்கள். அந்த விண்ணப்பம் செய்த பிறகு மின்சாரம் வருவதற்கு மூன்று ஆண்டுகள் பிடித்து விடுகிறது. மூன்று ஆண்டுக்குப் பிறகு அங்கே லைன் போகும்போது எல்லோரையும் மின்சாரம் எடுக்க வேண்டுமென்று சொல்லுகிறார்கள். சிலர் என்ன செய்கிறார்கள் என்றால் விண்ணப்பம் செய்து 3 ஆண்டுகளுக்குப் பின்னர் வந்ததால், அன்றைக்கு விண்ணப்பம் போட்டாலும், அப்போதைக்கு மின்சாரம் எடுத்துக்கொள்ள வசதியில்லையென்று விட்டுவிடுகிறார்கள். மின்சார இலாகாவில் சரியானபடி கவனிக்காமல் இருந்து விட்டு பிறகு இரண்டு ஆண்டுகள் கழித்து, இரண்டு ஆண்டுகளுக்கும் சேர்த்து மொத்தமாக மினிமம் சார்ஜஸ் அத்தனையையும் உடனடியாகக் கட்டவேண்டும், இல்லையென்றால் ரெவின்யூ டிபார்ட்மெண்ட் மூலமாக, சொத்துக்களை ஜப்தி செய்தாவது வசூல் செய்யப்படும் என்று உத்தரவு போடுகிறார்கள். அவர்கள் உடனடியாக 200 ரூபாய், 300 ரூபாய் கட்டவேண்டியிருக்கிறது. இதைப்பற்றி அமைச்சர் அவர்களிடத்தில் கூட விண்ணப்பம் கொடுத்திருக்கிறோம். எழுதிப் போட்டதற்காக அவர்களிடத்திலிருந்து வசூல் செய்யக் கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன். நாம் சொல்லலாம், திட்டத்தில் இவ்வளவு ஆகிறது, அதைச் சரிக்கட்ட இத்தனை பேர்களுடைய வீடுகளுக்கு எடுத்துக் கொள்வதாக விண்ணப்பித்திருக்கிறார்கள் என்று பார்த்துத்தான் மின்சாரம் விஸ்தரிக்கப்படவேண்டும், ஆகையால் அப்படிச் செய்த பிறகு எடுத்துக்கொள்ளவில்லையென்றால் என்ன செய்வது என்று. இருந்தாலும் இந்த மாதிரியாக மின்சாரம் எடுத்துக் கொள்ளாதவர்களிடமிருந்து தொகை வசூலிக்கக் கூடாது என்று சொல்லிக் கொள்கிறேன். ஏற்கெனவேயுள்ள எல்லாத் தொகைகளையும் வஜா செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக டீ பாக்டரிகள். நீலகிரியில் டீ பாக்டரிகள் அதிகமான அளவுக்கு இருக்கின்றன. சிறு சிறு டீ தோட்டக்காரர்கள் கூட பாக்டரி வைத்திருக்கிறார்கள் என்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். கோடை காலத்தில் 25 சதவீதம், 50 சதவீதம் மின்சார சக்தி வெட்டு செய்கிறார்கள். ஆகையால் அந்த மாதங்களில் பாக்டரி வேலை செய்ய முடிவதில்லை. வேறு எந்தத் தொழிலாக இருந்தாலும் ஒரு மாதம் அல்லது இரண்டு மாதம் நடத்தவில்லையென்றால், அதற்குப் பிறகு நன்றாக நடத்த ஏதுவாக இருக்கும். டீயைப் பொறுத்த வரையில் அப்படியல்ல. டீ இலை பச்சை இலை. பன்னிரண்டு மணிக்குமேல் தாங்காது. கெட்டுப் போய்விடு

கிறது. அந்த 12 மணிக்குள் டீ பாக்டரிக்குக் கொண்டுபோய் பக்குவப் படுத்தினுல்தான் அது உபயோகமாகும். அதற்குமேல் போனுல் இலைகளை உபயோகிக்க முடியாது. மின்சார சக்தியில்லாத காரணத்தினுல் இந்த இலைகள் தாங்காத நிலைமை ஏற்பட்டு சென்ற கோடை நாட்களில் அதிக மான நஷ்டம் ஏற்பட்டது. எங்கள் ஜில்லாவான நீலகிரியைப் பொறுத்த வரையில் அதிகமான நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. என்னைப் பொறுத்த வரையிலேயே ஆயிரக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள பச்சை இலை களை வெளியிலே கொட்ட வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. இதுபோல இல்லாமல் நிரந்தரமாக மின்சார சக்தி கொடுக்கவேண்டும். இந்த நிலை மையை நன்கு கவனித்து நிரந்தரமாகக் கொடுக்கவேண்டுமென்று பணி வன்போடு கேட்டுக் கொள்கிறேன்.

சில கிராமங்களில் கலெக்ஷன் செய்ய கலெக்ஷன் ஆபீஸர்கள் போடு கிருர்கள். நீலகிரியை எடுத்துக் கொண்டால், என்னுடைய கிராமமாகிய அரவேனு என்ற கிராமத்தில் 14 டீ பாக்டரிகள் இருக்கின்றன. மொத்த மாக மாதத்திலே 4,000 ரூபாய் இதிலிருந்து வசூலாகிறது. மின்சார இலாகாவுக்கு 4,000 ரூபாய் வசூலாகும்போது அங்கே கலெக்ஷன் ஆபீஸ் ஏற்படுத்தப்படவில்லை. அந்த இடத்தில் ஒரு ஆபீஸ் ஏற்படுத்தலாம். அதில் எந்த விதக் கஷ்டமும் இல்லை. ஒரு ஊழியரைப் போட்டு கலெக் ஷன் ஆபீஸ் ஏற்படுத்தினுல் நலமாக இருக்கும். இது போன்று அநேக இடங்களில், 2,000 ரூபாய் கலெக்ஷன் இருந்தால் ஒரு கலெக்ஷன் ஆபீஸ் ஏற்படுத்தவேண்டும். இல்லையென்ருல் 5 மைல்கள், 6 மைல்கள் மலைப் பிரதேசத்தில் நடந்து சென்று கட்டவேண்டுமென்ருல் ரொம்பவும் கஷ்ட மாக இருக்கிறது. பஸ் போக்குவரத்து போன்ற எந்த வித சௌகரியமும் இல்லாத பக்கத்தில் கலெக்ஷன் ஆபீஸ்கள் ஏற்படுத்த வேண்டும் என்று மிகவும் மன்ருடி அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ள ஆசைப்படு கிறேன்.

அடுத்தபடியாக இந்த அறிக்கையிலே ஏற்கெனவே சொன்னது போல கன்ஸல்டேடிவ் கவுன்ஸிலில் நம்முடைய சட்ட சபை அங்கத்தினர்களில் மூன்று பேர்களை நியமித்திருக்கிருர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி நியமித்திருந்தாலும்கூட யாரை நியமித்திருக்கிருர்கள் என்ற விவரம் தரவில்லை. எங்கு மின்சார உற்பத்தி அதிகம் ஆகிறதோ, எங்கு மின்சார உற்பத்திக்கான வேலைகள் நடக்கின்றனவோ, எங்கு மின்சாரம் இன்னும் உற்பத்தி செய்வதற்கான வாய்ப்புகள் இருக்கின்றனவோ அந்த ஜில்லாக்களைச் சேர்ந்த பிரதிநிதிகளைச் சேர்த்தால்தான் அந்த ஜில்லா வினுடைய குறைகளைப் பற்றிச் சொல்லமுடியும். நான் இப்படிச் சொல்வ தால் என்னை நியமிக்கவேண்டுமென்று சொல்லவில்லை. என்னை நியமிக்க வேண்டிய அவசியமில்லை. எங்கெங்கே மின்சார வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றதோ அங்கு இருக்கின்றவர்களைப் போட்டால் மின்சாரத் திட்டம் ஏற்படுத்துவதில் இருக்கக் கூடிய கஷ்டங்களை, மின்சாரத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கான ஆலோசனைகளை சொல்லலாம். லோகல் அட்வை ஸரி கமிட்டி ஏற்படுத்தும்போது அப்படி இருந்தாலும் பரவாயில்லை. அதையும் உடனடியாக ஏற்படுத்த வேண்டும். இப்போது மின்சாரத்தைப் பொறுத்த வரையில் யாரிடத்தில் சொல்வது என்று தெரியவில்லை. அமைச்சரிடம் சொல்வதைத் தவிர வேறு யாரிடம் சொல்வது என்று புரியவில்லை. உடனடியாக இந்தக் கமிட்டியை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

* Sri V. SUBBIAH : தலைவர் அவர்களே, 'இன்றைய 1958–59-ம் வருஷத்திய மின்சார வரவு செலவுத் திட்டத்தின்மீது பேசும்போது, இன்று மின்சார வெட்டு நீங்கிய பின்னும் பாபனுசம் எலெக்ட்ரிஸிடி ஸிஸ்டத்திலே இருக்கக்கூடிய பல குறைகளைப் பற்றி எனக்கு முன் பேசிய பல மதிப்பிற்குரிய நண்பர்கள் குறிப்பிடாததைக் கண்டு மற்ற ஸிஸ்டங்களிலே இது மாதிரி இல்லாமலிருக்கலாம் என்று நினைக்கிறேன். பாபனுசம் ஸிஸ்டத்திலே, குறிப்பாக விவசாயத்தைப் பொறுத்தமட்டில், தொழிற்சாலைகளுக்கும் மற்ற இண்டஸ்ட்டிரீஸுக்கும் உள்ளது போலல்லாமல்,

1st November 1958] [Sri V. Subbiah]

குரூப் ஸிஸ்டம் என்று ஒரு புதிய முறையை, விவசாயிகளுக்குக் கொடுக்கும் மின்சாரத்தைப் பொருத்தமட்டிலும் வைத்திருக்கிறார்கள். அது எந்த முறையில் செயல்படுகிறது என்றால் விவசாயிகளுக்கு கஷ்ட மாகவும் தொந்தரவு தரக் கூடியதாகவும் இருக்கிறது. இந்த குரூப் முறையில் அஸிஸ்டெண்ட் வொயர்மேன் அல்லது லைன்மேன் இவர்களுடைய தயவில் மின்சாரம் உபயோகப்படுத்த வேண்டிய நிலைமை இருக்கிறது. இன்றையதினம் ஒரு விவசாயி நாற்று நடவு விடுகிறான் என்று வைத்துக் கொள்ளுவோம். காலையில் 6 மணியிலிருந்து 12 மணி வரையில் மின் சாரம் கொடுக்கப்படுகிறது. ஐந்து எக்கர் நடவு நட வேண்டியவன் பல கூலிகளை வைத்து நாற்று எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறான் என்றால் 9 மணி அளவிலே வேலைக்கு வருகிறார்கள், பிறகு 12 மணிக்கு வீட்டுக்குத் திரும்ப வேண்டிய நிலை இருக்கிறது. பல பாத்திகள் மிச்சமாக இருக்கின் றன. நாற்று மிச்சமாக இருக்கின்றது. அவர்கள் முழுக் கூலி கேட் கிறார்கள். இந்த அளவிலே இன்றைக்கு பல கஷ்டங்கள் இருக்கின்றன. பன்னிரண்டு மணிக்குப் பின்னால் இன்னொரு பகுதியிலுள்ள விவசாயி களுக்கு குரூப் ஸிஸ்டத்திலே மின்சாரம் கொடுக்கப்படுகிறது. இந்த நிலைமை இன்று பாபநாசம் ஸிஸ்டத்திலே இருக்கிறது. இதற்கு மின்சார அமைச்சர் அவர்கள் ஏதாவது ஒரு வழி கண்டுபிடித்தாகவேண்டும்.

இதற்கு முன்னால் அன்கனெக்டெட் மினிமம் சார்ஜ் என்று இருந்தது. அதை இப்போது டாரிப் மினிமம் சார்ஜ் என்று மாற்றியிருக்கிறார்கள். இன்றைக்கு ஒரு வருஷத்திலே (5 ஹார்ஸ் பவருக்கு கிட்டத்தட்ட) 50 ரூபாய் காரண்டீட் மினிமம் சார்ஜஸ் கேட்கிறார்கள். இருநூற்று ஐம்பது ரூபாய் ஒரு வருஷத்திலே மின்சாரத்திற்காகக் கொடுக்க வேண்டியிருக்கிறது. அது மட்டுமா? அன்னுவல் மினிமம் சார்ஜ் என்று குறிப்பிடுகிறார்கள். ஒரு வருஷத்திலே எவ்வளவு மின்சாரம் எடுக்கிறானோ அதற்கு அவன் கட்டிய பிறபாடு, 250 ரூபாய் மினிமம் சார்ஜ் என்று குறிப்பிட்டதில் 200 ரூபாய் கரெண்டு எடுத்துக் கொண்டிருந்தால், பாக்கி 50 ரூபாய் அனுவசிய மாகக் கொடுக்க வேண்டியிருக்கிறது. விவசாயத்திற்கு மின்சாரத்தை உப யோகிப்பதிலே இந்த மாதிரியான நிலைமை இருக்கிறது. மின்சாரம் கொடுப் பதிலே இன்றைய தினம் எத்தனை சார்ஜஸ் கேட்கிறார்கள் என்பதை அமைச்சர் அவர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். மீட்டர் சார்ஜஸ் என்று கேட்கிறார்கள், அப்புறம் ஸர்சார்ஜ் என்று கேட்கிறார்கள். இன்றைக்கு விவசாயத்திற்கு அதிகமான அளவுக்கு மின்சாரம் அளிக்கிறோம் என்று பெருமைப்படுகிறோம். இன்றைக்கு பெரிய மில்களிலே டிரான்ஸ்பார்மர் வாங்கி வைத்துக் கொள்ள உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. மின்சாரத் திற்கு யூனிட்டுக்கு அரை அணா என்று வைத்திருக்கிறார்கள். ஸ்பின்னிங், வீவிங் மில்களுக்குக் குறைந்த விலைக்கு மின்சாரம் கொடுக்கப்படுகிறது. அதே நேரத்தில் விவசாயத்திற்கு 9 பைசா கேட்கிறார்கள். மீட்டர் சார்ஜ், ஸர் சார்ஜ் எல்லாவற்றையும் சேர்த்தால் 1½ அணாவுக்கு மேலேயே ஆகிறது. லைன்களில், அந்த கிராமத்தில் லைன் இருந்தாலும் கூட, விவசாயிகளுக்கு மின்சாரம் கொடுக்க ஒரு போஸ்ட், இரண்டு போஸ்ட் ஒருவருக்காக நட வேண்டியிருந்தால், அவர்களுக்கு சப்ளை செய்யும் காலத்தில் அந்த போஸ்டுகளுக்குள்ள கிரயத்தை முன்னாலேயே கட்ட வேண்டியதாக இருக் கிறது. அதோடு மட்டுமல்ல. கிணறுகளிலே தண்ணீர் இல்லாத காலங் களிலே, ரெவின்யூ அதிகாரிகளோ அல்லது மின்சார இலாகா அதிகாரி களோ பார்வையிடும்பொழுது, 1 அடி, 2 அடி தண்ணீர் இருக்கக்கூடிய கிணறுகளிலேகூட தண்ணீர் இருப்பதாக செர்டிபை செய்கிறார்கள். இந்த நிலைமையில் எத்தனை மணி நேரத்திற்கு தண்ணீர் இறைக்க முடியும்? விவசாயிகளின் கதி என்னவாகும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

பாபநாசம் மின்சார சப்ளையைப் பொருத்தவரையில் விவசாயிகளுக்குப் பல கஷ்டங்கள் இருக்கின்றன. நான்கு எக்கர் விஸ்தீரணமுள்ள தோட்ட நிலத்திற்கு 3 அல்லது 4 பேர்கள் பாகஸ்தர்களாக இருப்பார்கள். ஒரு ஆளுக்கு ஒரு எக்கர் வீதம் வரும். அதிலே ஒருவரைப் பிடித்து ஐந்து ஹார்ஸ் பவர் மோட்டாருக்கு மின்சார ஊழியர்கள் ஒப்பந்தம் வாங்கி விடுகிறார்கள். மற்றவர்கள் ஒப்புக்கொள்வது இல்லை. விவசாயிகளுக்கு

விஷயத்தைத் தெளிவுபடுத்தாமலேயே, ஒப்பந்தத்தில் கையெழுத்துவாங்கி விடுகிறார்கள். விவசாயிகளும் அவர்களை நம்பி அதிலே கையெழுத்திடு கிறார்கள். நமுறுவைப் பூர்த்தி செய்வது கிடையாது. வெறும் கையெழுத் தைமட்டும் வாங்கி விடுகிறார்கள். மூன்று ஹார்ஸ் பவர் வேண்டுமென்றால் 5 அல்லது $7\frac{1}{2}$ ஹார்ஸ் பவர் என்று எழுதிக் கொள்கிறார்கள். மொத்தம் இவ்வளவு "லோடு" என்ற அடிப்படையில், எவ்வளவு இருக்கவேண்டு மென்று கணக்கிட்டு, அவர்கள் பாரத்தை பூர்த்தி செய்கிறார்கள். இதனால் விவசாயிகள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள். ஒரு எக்கர் நிலமுள்ளவன் ஐந்து ஹார்ஸ் பவர் மோட்டார் வைத்துக்கொள்ள வேண்டி யிருக்கிறது. விவசாயம் எப்படிக் கட்டி வரும். இது அவனுக்கு பெரிய பாரமாக இருக்கிறது. வருஷந்தோறும் அவன் கடன் வாங்கவேண்டியிருக்கிறது. இம்மாதிரி பல கேஸ்கள் உதவி எஞ்சினியரிலிருந்து சூப்பிரண்டென்டிங் எஞ்சினியர் வரை வந்திருக்கின்றன. ஏன் இதை நாம் வாங்கி வைத்துக் கொண்டோம் என்று விவசாயி மலைக்கிற அளவுக்கு இந்த இலாகாவினர் வேலை செய்கிறார்கள். மின்சார இலாகாவில் வேலை பார்ப்பவர்களில் பலர் நல்ல முறையில் நடந்துகொள்கிறார்கள். இன்னும் பலர் வேறு முறையில் நடந்துகொள்கிறார்கள். ஆகவே ஒப்பந்தத்தில் என்னென்ன ஷரத்துக்கள் இருக்கின்றன என்பதை அவர்களுக்குத் தெளிவுபடுத்தி விவசாயிகளிடம் கையெழுத்து வாங்கவேண்டும் என்று சிப்பந்திகளுக்கு சர்க்கார் உத்தரவிட்டால் நல்லாக இருக்கும். எனவே, கனம் அமைச்சர் அவர்கள் தக்க நடவடிக்கை எடுப்பார்கள் என்று நினைக்கிறேன்.

மேலும், இந்த குரூப் ஸிஸ்டத்திலே, நாத்து நடவை நடந்து கொண் டிருக்கிற காலங்களிலே, விவசாயிகள் தண்ணீர் இறைத்துக் கொண்டிருக் கும் காலங்களிலே, "பியூஸை" எடுத்துக்கொண்டு போய்விடுகிறார்கள். அதனால் "மோட்டார் பர்ன் ஆகிறது". இதனால் விவசாயிகளுக்கு எவ் வளவு ஆயிரக்கணக்கான ரூபாய் நஷ்டமாகிறது என்பதை நாம் பார்க்க வேண்டும். அந்த மோட்டாரை திரும்ப "wind" பண்ணவேண்டு மென்று சொன்னால், அவன் அதை நூறு மைல்களுக்கப்பால் கொண்டு போய், ஏராளமான பணம் செலவு செய்ய வேண்டிய நிலைமை ஏற்படு கிறது. ஆகவே, இம்மாதிரி நடைமுறையிலுள்ள கஷ்ட நஷ்டங்களை கனம் அமைச்சர் அவர்கள் நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இவை கள் சில்லரை விஷயங்களாக இருக்கலாம். ஆனால் எனக்கு முன்பு பேசிய நண்பர்கள் இவ்விதக் குறைகளைப்பற்றிப் பேசவில்லை. பாபநாசம் ஸிஸ் டத்தில்தான் இக்குறைகள் இருக்கின்றன. அங்கே விவசாயிகள் அனுப வித்துக்கொண்டிருக்கிற நிலைமையைத்தான் சொல்லுகிறேன். கூடுத லாகவோ, வேண்டுமென்றோ ஒரு வார்த்தைகூட நான் சொல்லவில்லை. கனம் அமைச்சர் அவர்கள் இதை நம்பவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

இந்த மின்சாரம் விநியோகம் செய்வதில் தொழில் துறைக்கும் விவ சாயத் துறைக்கும் ரொம்ப வித்தியாசம் இருக்கிறது. போட்ட மூலதனத் திற்கு 10 சதவிகிதமாவது வட்டி வேண்டுமென்று சர்க்கார் நினைக்கிறார்கள். மின்சார வசதி செய்து கொடுப்பதில் 5 சதவிகித வட்டியைக்கூட எதிர் பாராமல் மின்சாரம் வழங்கவேண்டும். அப்படியிருந்தால்தான் உணவு உற்பத்தி பெருகும். விவசாயிகளும் மின்சாரத்தைத் தாராளமாக வர வேற்பார்கள். அமைச்சர் அவர்கள் இதை மனதில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பாபநாசம், மேட்டூர் நிலையங்களிலிருந்து பெரிய, பெரிய "டவர் லைன்கள்" கொண்டு வருகிறார்கள். ஏழைகளாக இருக்கக் கூடிய $\frac{1}{4}$ எக்கர், $\frac{1}{2}$ எக்கர் நிலம் வைத்திருப்பவர்களை இது பாதிக்கிறது. அவர்களுக்கு தகுந்த நஷ்டஈடு கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். தவிர, எலெக்டிரிக் மோட்டார், ஸ்டார்ட்டர், பம்புசெட்டுகள், அவைகளை சர்க்கார் பாக்டரி வைத்தோ அல்லது வாங்கியோ விவசாயி களுக்கு சப்ளைசெய்ய வேண்டுமென்பது என்னுடைய நோக்கம். அப் பொழுதுதான் நியாயமான விலையிலே அவைகள் கிடைக்கும்.

1st November 1958] [Sri V. Subbiah]

இன்றையதினம் எல்லா மாகாணங்களையும்விட பெருமைப்படக்கூடிய வகையிலே ஏறத்தாழ 8,000 கிராமங்களுக்கு மின்சாரம் வழங்கப்பட்டிருக்கிறது. நமது தமிழ் நாட்டிலே 70,000-க்கு மேற்பட்ட பம்பு செட்டுகள் ஓடுகின்றன. இன்னும் பல கிராமங்களுக்கு விஸ்தரிக்க வேலை நடந்துகொண்டிருக்கிறது. விவசாயத்திற்காக வழங்கப்படும் மின்சாரத்திற்காக வாங்கப்படும் கட்டணத்தைக் குறைக்கவேண்டும். முக்கியமான தொழில்களுக்கும் இந்தக் கட்டணத்தைக் குறைத்தால் நமது நாட்டிலே நல்ல அபிவிருத்தி ஏற்படும் என்று சொல்லிக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri A. R. SUBBIAH MUDALIAR :** நமது மின்சாரத்துறை சம்பந்தப்பட்ட மட்டில், விவசாயிகள் நன்மை பெறக்கூடிய அளவுக்கு ராஜ்யம் முன்னேற்றகரமான நிலையில் இருந்துகொண்டிருக்கிறது. ஆனாலும் 1961-ம் ஆண்டு வரும்பொழுது, இப்பொழுது நடைபெற்று வரும் திட்டங்கள் பூர்த்தியானாலும், நமது தேவையைப் பூர்த்தி பண்ணக்கூடிய நிலையில் வேண்டிய கிலோவாட்ஸ் கிடைக்குமா என்ற பயம் இருந்து கொண்டிருக்கிறது. தற்சமயம் நாம் உற்பத்தி செய்யக்கூடியது மூன்று லட்சம் கிலோவாட்ஸ். இரண்டாவது ஐந்தாண்டு திட்ட கால முடிவில் $5\frac{1}{4}$ லட்சம் கிலோவாட்ஸ் கிடைக்குமென்று தெரிகிறது. ஆனால் இதிலே இரண்டு லட்சம் கிலோவாட்ஸ மழையை நம்பிப் பெறக்கூடிய நிலையில் இருக்கிறோம். நெய்வேலித் திட்டத்தின் மூலமாக $1\frac{1}{4}$ லட்சம் கிலோவாட்ஸ் கிடைக்குமென்று தெரிகிறது. மொத்தத்தில் சுமார் 50,000 கிலோவாட்ஸ் பற்றுக்குறையாக இருக்கலாம். மழை போதுமான அளவு இருநதால் தான் இரண்டு லட்சம் கிலோவாட்ஸை எதிர்பார்க்க முடியும். இப்பொழுது பலவிதமான திட்டங்கள் பரிசிலனையில் இருக்கின்றன. அந்தத் திட்டங்கள் பயனளிக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டாலும் சர்க்கார் எதிர்பார்க்கக்கூடிய அளவுக்கு கிலோவாட்ஸ் கிடைக்குமா என்று சந்தேகப்படவேண்டியிருக்கிறது. இதை உத்தேசித்துத்தான் ஒரு அடாமிக் பவர் ஸ்டேஷன் வேண்டுமென்று மத்திய சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்கள் என்று கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கும் அறிக்கையில் தெரிகிறது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்திலோ அல்லது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் பூர்த்தியாவதற்குள்ளோ ஒரு அடாமிக் பவர் பிளாண்டை நிறுவுவது மிகவும் அவசியமென்று நினைக்கிறேன். இந்தத் திட்டம் நிறைவேற்றப்பட்டால்தான் நமக்கு பற்றுக்குறை ஏற்படாது.

அடுத்தபடியாக, போர்டின் கொள்கைப்படி இது ஒரு கமெர்ஷியல் பாடியாக இருப்பதால் அநேக "**unremunerative**" ஸ்கீம்களை **drop** பண்ணிவிடுகிறார்கள். ஒரு ஹார்ஸ் பவருக்கு 50 ரூபாய்க்கு மேல் தொகை கட்ட ஏற்பட்டால், திட்டம் கைவிடப்படுகிறது. அந்த இடங்கள் ரொம்பவும் பிற்பட்ட பகுதிகள் என்பது சர்க்காருக்குத் தெரியும். அந்த மாதிரி விவசாயிகள் மின்சாரம் தேவை என்று கருதக்கூடிய இடங்களுக்கு, "**unremunerative**" ஆகயிருந்தாலும் மத்திய சர்க்காரிடமிருந்து சப்ஸிடி பெற்றோ, அல்லது நமது அரசாங்கமே சப்ஸிடி கொடுத்தோ நிறைவேற்றவேண்டுமென்று கருதுகிறேன். ஏனென்றால், அங்குதான் ரொம்ப உணவு பற்றுக்குறை இருக்கிறது. அங்குதான் ஜனங்களின் கஷ்டம் ரொம்ப இருந்து கொண்டிருக்கிறது. இப்பொழுது கூட போர்டு 4 லட்சம் ரூபாய் 'பாக்வேர்டு ஏரியா' வுக்கு உதவி வேண்டும் என்று கேட்டிருக்கிறார்கள். நான் சொல்லுவது 'பாக்வேர்டு' ஏரியாவுக்கு மட்டும் இல்லை. உதாரணமாக 5, 7 பம்பு செட்டுகள் தேவை என்றால், அங்கு ஸ்கீம் 'ரெம்யூனரேடிவ்' ஆக இருக்காது. 'அன்ரெம்யூனரேடிவாக' இருந்தாலும் 'ஸப்ஸிடி' கொடுத்து உதவவேண்டும். சாதாரணமாக 50 ரூபாய் அதிகபட்ச துகையாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ராஜ்யங்களைப் பொறுத்தமட்டில், உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்காக பல அம்சங்களில் 'ஸப்ஸிடி' கொடுக்கிறார்கள். அன்னிய நாட்டிலிருந்து வரக்கூடிய உரங்களுக்கு 'ஸப்ஸிடி' கொடுத்துக் குறைந்த விலைக்கு விவசாயிகளுக்கு கொடுக்கிறார்கள். உணவு உற்பத்திக்காக 'ஸப்ஸிடி' கொடுக்கும் தொகையிலிருந்து, 5, 6 பம்பு செட்டுகள் வரக்கூடிய இடங்களுக்கும் உதவித் துகை கொடுக்கவேண்டும்.

[Sri A. R. Subbiah Mudaliar] [1st November 1958

'குரூப் ஸிஸ்டத்தைப்' பற்றி எனக்கு முன் பேசியவர் குறிப்பிட்டார். நானும் அந்தத் தொகுதியிலிருந்துதான் வருகின்றவன். பத்து வருஷங்களாக பருவ மழையே இல்லாத ஒரு தொகுதி. அங்கு கரண்டை நம்பித்தான் உணவு உற்பத்தி செய்து வாழக்கூடிய நிலைமையில் மழை குறைவாக பெய்து கொண்டிருக்கிறது. அப்படியிருக்கும் பொழுது இந்த 'குரூப் ஸிஸ்டத்தினால்' நாங்கள் ரொம்பவும் அவதிப் படுகிறோம். காலையில் 6 மணி நேரம் கரண்டு கொடுத்தால், கிணற்றில் இரண்டு அல்லது மூன்று மணி நேரத்திற்குத்தான் தண்ணீர் இருந்துகொண்டிருக்கிறது. ஆறு மணி நேரத்தில் இரண்டு அல்லது மூன்று மணி நேரம்போக பாக்கி நேரத்தில் கரண்டை உபயோகப்படுத்த முடியவில்லை. நான்கு மணிநேரம் கழித்துத்தான் கிணற்றில் தண்ணீர் ஊறுகிறது. பகல் பூராவும் கரண்டு கொடுத்தால்தான் எதிர்பார்க்கக்கூடிய அளவுக்கு விவசாயம் நடத்த முடியும். இரண்டு, மூன்று ஏகர் இருந்தால், 'குரூப் ஸிஸ்டத்தில்' ஒரு ஏகருக்கு மேல் சாகுபடி செய்ய முடியவில்லை. இரவு நேரத்தில் மின் சாரம் உபயோகப்படுத்தக்கூடிய திட்டம் இருந்துகொண்டிருக்கிறது. இரவு நேரத்தில் தண்ணீர் பாய்ச்சுவது முடியாத காரியம். விவசாயிகளுக்குள்ள கஷ்டம் எல்லோருக்கும் தெரிந்ததுதான். திட்டத்தைப் போட்டு விவசாயிகளின் கஷ்டத்தை தெரியாமல் நடத்திக்கொண்டிருக்கிறார்கள். பகல் நேரத்தில் பூராவும் கரண்டு கொடுத்து, 'குரூப் ஸிஸ்டத்தை' எடுக்கக் கூடிய நிலைமையில் இப்பொழுது பரிசீலனை நடந்துகொண்டிருக்கிறது என்று மந்திரி அவர்கள் அறிக்கையில் தெரியப்படுத்தியிருக்கிறார்கள்.

அதற்கு அடுத்தபடியாக, "டாரிப் ரேட்" ஒரு "ஹார்ஸ் பவருக்கு" ரூ. 6 என்று இருக்கிறது. அது ரொம்ப குறைந்த ரேட் தான். ஸர் சார்ஜ் 50 சத விகிதம் சேர்க்கிறார்கள். ஆதலால் சுமாராக ஒரு "ஹார்ஸ் பவருக்கு" ரூ. 9 வரும் என்று நினைக்கிறேன். இது ரொம்பவும் குறைவு. புதியதாக மின்சாரம் வேண்டும் என்று நினைக்கக்கூடியவர்கள் ஒரு ஹார்ஸ் பவருக்கு 50 ரூபாய் கொடுக்கவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. "டாரிப் ரேட்டை" 6 ரூபாய் என்பதை 12 ரூபாயாக உயர்த்தலாம். புதியதாக கேட்பவர்களுககு ரூபாய் 50 என்பதை குறைக்கவேண்டும். ஒரு ஹார்ஸ் பவருக்கு 50 ரூபாய் கொடுப்பதற்கு ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். அநேகம் பேர்கள் இதனால் பம்புசெட்டுகள் வைப்பதற்கு முடியவில்லை. உயர்ந்தபட்சம் ஹார்ஸ் பவருக்கு 25 ரூபாய் அல்லது 30 ரூபாயாக வைத்து, நஷ்டமாகும் தொகையை ஸப்ஸிடியாக சர்க்கார் கொடுத்து விட்டால் ஜனங்கள் அதிக பம்புசெட்டுகள் வைக்க முன்வருவார்கள். இந்த திட்டத்தை அமுல் நடத்தினால் நாட்டின் உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்கு வழி ஏற்படும். 50 ரூபாய் என்று இருந்தால் அநேகர் பம்புசெட்டுகள் வைக்கமுடியாது. அதிக ரேட் இவ்வளவுதான் என்று தீர்மானித்து பாக்கியை "ஸப்ஸிடி" யாகச் சர்க்கார் கொடுக்கவேண்டும்.

ஒவ்வொரு ஜில்லாவிலும் இருக்கும் கஷ்டங்களை போக்கு வதற்கு ஒவ்வொரு ஜில்லாவிலும், அல்லது ஒவ்வொரு system கீழும் வெல்பேர் ஆபீஸர்கள் தேவை. தொழிலாளிகளின் கஷ்டங்களை கவனிக்க மில்களில் வெல்பேர் ஆபீஸர் போடுகிறோம். ரெயில்வேயில் சிப்பந்திகளின் கஷ்டங்களை தீர்ப்பதற்காக வெல்பேர் ஆபீஸர்கள் இருக்கிறார்கள். ஆகவே, ஒவ்வொரு ஜில்லா லெவல், அல்லது பிராஜக்ட் லெவலில் ஒரு வெல்பேர் ஆபீஸர் போட்டால், அடிக்கடி மக்கள் தங்களுடைய கஷ்டங்களை எடுத்துச் சொல்ல முடியும். உடனடியான பரிகாரம் தேடுவதற்கு வாய்ப்பு ஏற்படும். சர்க்காருக்கு முறையிட்டு, சர்க்கார் பிறகு போர்டுக்கு எழுதி பரிகாரம் காணவேண்டுமென்றால் ரொம்பவும் காலதாமதம் ஏற்படுகிறது. ஆகையால் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு வெல்பேர் ஆபீஸர் போடுவது நலம் என்று நினைக்கிறேன்.

இப்பொழுது 3 மாத current charge டெபாஸிட் வாங்கப்படுகிறது. இது ஏழைகளுக்கு ரொம்பவும் கஷ்டமாகத் தெரிகிறது. முன்பு 2 மாத டெபாஸிட்தான் இருந்தது. இப்பொழுதுதான் 3 மாத டெபாஸிட்டாக உயர்த்தப் பட்டிருக்கிறது. ஆகையால் இதை பழையபடியே இரண்டு மாத டெபாஸிட்டாக வைத்துக்கொள்ளவேண்டும்.

1st November 1958] [Sri A. R. Subbiah Mudaliar]

இதுபோக, டிஸ்டிரிக்ட் லெவலில் அட்வைஸரி கமிட்டி ரொம்பவும் தேவை. டிஸ்டிரிக்ட் அட்வைஸரி கமிட்டியை டிஸ்டிரிக்ட் பிளானிங் போர்டோடு இணைக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டால், எதிர்பார்க்கக்கூடிய நன்மை ஏற்படாது. எஸ்.இ. அவர்கள் ஒவ்வொரு ஜில்லாவுக்கும் மாதம் தவருமல் வந்து கொண்டிருக்கிருர்கள். பிராஜக்டை கவனிப்பதற்காகவோ, அல்லது மெயிண்டினன்ஸை கவனிப்பதற்காகவோ வந்துகொண்டிருக்கிருர்கள். அப்பொழுது அவர் ஜில்லா லெவலில் ஒரு கூட்டம் போடக்கூடிய நிலைமையில் ஒரு அட்வைஸரி போர்டு ஏற்படுத்திஞல், 2 மாதம், 3 மாதங்களுக்கு ஒரு முறையாவது குறைகளை தெரிவித்துக்கொள்ளுவதற்கு ஏதுவாக இருக்கும். தேவைகளை பூர்த்தி செய்வதற்கு சௌகரியமாக இருக்கும். டிஸ்டிரிக்ட் பிளானிங் போர்டோடு இணைத்தால், எதிர்பார்க்கக்கூடிய அளவில் நன்மை ஏற்படாது.

இப்பொழுது பம்புசெட்டுகள் வெளியிலிருந்து வரவழைக்கக்கூடிய நிலைமையில் இங்குள்ள உற்பத்தி இருந்துகொண்டிருக்கிறது. அன்னிய நாட்டிலிருந்து வரும்பொழுது பல பேர்கள் வாங்கி விநியோகிப்பதால், விலை அதிகமாகிறது. " எக்ரிமெண்டு " எழுதிக் கொடுத்தாலும் பம்பு செட்டு வந்தபிற்பாடுதான் கனெக்ஷன் கொடுக்கிருர்கள். அன்னிய நாட்டிலிருந்து வரக்கூடிய பம்புசெட்டுகளை போர்டு மூலமாக வாங்கி வைத்து விநியோகிக்கலாம். இப்பொழுது இதை விவசாய இலாகா கவனித்துக்கொண்டு வருகிறது. இதை மின்சார போர்டிற்கு மாற்றி விட்டால், எக்ரிமெண்டு கையெழுத்தாகும்பொழுது, பம்புசெட்டுகளை வழங்குவதற்கு ஏற்பாடு செய்யலாம். அல்லது சர்க்கார் நேரடியாக விநியோகம் செய்தால் விலை குறையும். இப்பொழுது " மிடில்மென் பிராபிட் " அதிகமாகப் போய்க்கொண்டிருக்கிறது.

லைசென்ஸி ஏரியாவில் இருப்பவர்கள் ரொம்பவும் கஷ்டப்படுகிருர்கள். " நான்-லைசென்ஸி ஏரியாவில் " இருப்பவர்கள் யோகம் செய்தவர்கள் என்று நினைக்கிருர்கள். அது வாஸ்தவம்தான். பலவிதமான நன்மைகள் உடனடியாகக் கிடைக்கின்றன. ஆனல், " லைசென்ஸிங் ஏரியாவில் " லைசென்ஸ் எப்பொழுது ரத்தாகப் போகிறது என்று பயந்துகொண்டே இருப்பதால், அங்கே ஒருவித முன்னேற்றமும் ஏற்படாமல் இருக்கிறது. ஜமீன் ஒழிப்பு ஏற்பட்டபொழுது, ஒரு சட்டம் மூலம், சர்க்கார் ஜமீன் மானேஜ்மெண்டை எடுத்துக்கொண்டு, சில சதவிகிதம் "அட்மினிஸ்ட்ரேடிவ் எக்ஸ்பென்ஸஸ் " எடுத்துக் கொண்டு நிர்வாகத்தை நடத்தி வந்தார்கள். அதனல் ஜமீன் ஏரியாவில் மக்களுக்கு உடனடியாக நன்மை கிடைத்தது. லைசென்ஸிங் ஏரியாவை பணம் கொடுத்து எடுக்க கஷ்டமாக இருந்தால், நிர்வாகத்தை எடுத்து நடத்தக்கூடிய சட்டத்தைக் கொண்டு வந்து, உடனடியாக நிர்வாகத்தை எடுத்து நடத்திஞல் நலம் என்று நினைக்கிறேன். அல்லது கம்பெனிகளை உடனடியாக அக்குவயர் பண்ணிஞல் கவலை இல்லை. எப்பொழுது அக்வயர் பண்ணப்போகிருேம் எவ்வளவு நஷ்ட ஈடு கொடுக்கப்போகிருேம் என்பதும் தெரியாமல் இருக்கிறது. பத்து வருஷங்களுக்கு நாம் அக்குவயர் பண்ணப் போவதில்லை என்ற ஒரு திட்டம் சர்க்கார் வகுத்தால் அவர்கள் பயம் இல்லாமல் விருத்தி பண்ணுவதற்கு வாய்ப்பு ஏற்படும் என்று நினைக்கிறேன். 12-30 p.m.

1955–56 வருஷத்திய அட்மினிஸ்ட்ரேஷன் ரிப்போர்ட் இப்பொழுதுதான் கிடைத்திருக்கிறது. அதைப்பற்றி பேசுவதற்கு பலமாதங்களுக்கு பிறகுதான் வாய்ப்பு ஏற்படுகிறது. மாகாணரீதியிலும் Advisory Committee இருக்க வேண்டும். நான்-அபிஷியலை அதில் சேர்த்துக் கொள்ளவேண்டும். அப்படி ஒரு கமிட்டியை அமைத்தால் பல தொகுதிகளிலுள்ள கஷ்டங்களையும் குறைகளையும் எடுத்துச் சொல்ல வாய்ப்பு ஏற்படும். அபிஷியல் மட்டும் இருந்தால் முடிவு காண்பதும் கஷ்டமாக இருக்கும். ஏதாவது இப்பொழுது கவனத்திற்குக் கொண்டுபோனல் உடன் பதில் வருவதற்கு கஷ்டமாக இருக்கிறது. உத்தியோகப் பற்றற்றவர் இருந்தால் உடன் பதில் வருவதற்கு இடம் ஏற்படும். இல்லாவிட்டால்

மாதக் கணக்கில் பதிலே வராது. இப்பொழுது விவசாயிகள் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். கிராமங்களுக்கு இருக்கக்கூடிய கஷ்டம் இன்டஸ்ட்ரியல் ஏரியாவில் இல்லை. ரைஸ் மில்களுக்கு இரவு நேரங்களில் மின்சாரத்தைக் கொடுத்து விவசாயிகளுக்கு பகல் பூராவும் மின்சாரத்தைக் கொடுக்கலாம். விவசாயிகளுக்கு எந்த விதமான ஸ்தாபனமும் இல்லாமல் இருப்பதால் அவர்கள் கஷ்டத்தை எடுத்துச் சொல்ல முடியாமல் இருக்கிறார்கள். ஆனால் தொழில் ஸ்தாபனங்களுக்கு சங்கங்கள் இருப்பதால் அவர்கள் எடுத்துச்சொல்லுகிறார்கள், அரசாங்கமும் அதைப் பற்றி கவனித்து வேண்டியதைச் செய்து கொடுக்கிறது. ரைஸ்மில் மற்றும் **Industrialist** என்ன சொன்னாலும் சர்க்கார் கேட்கிறார்கள். அவர்கள் கிளர்ச்சி செய்கிறார்கள், விவசாயிகள் எந்த விதமான கிளர்ச்சியும் செய்வது இல்லை. ரைஸ் மில்காரர்கள் கிளர்ச்சி செய்ததால்தான் ஆந்திராவில் அவர்களுக்கு நன்மை ஏற்பட்டது. ஆனால் அப்படி விவசாயிகள் கிளர்ச்சி செய்ய முடியவில்லை. என்ன சொன்னாலும் விவசாயிகள் தங்களுடைய குறைகளை எடுத்துச் சொன்னால் அதை எடுத்து நடத்துவதற்கு **Board** பயப்படுகிறார்கள்.

மின்சார இலாகா **Electricity Board**-ஆக வந்த பிறகு அதிலுள்ள சிப்பந்திகள் கூட பழைய நிலைமையில் இல்லை. முன்பு சோஷலாக இருந்தார்கள். இப்பொழுது இல்லை. முன்பெல்லாம் அவர்கள் மின்சாரம் தேவைக்கு கான்வெஸ் பண்ணிக்கொண்டிருந்தார்கள். இப்பொழுது அவர்கள் பேட்டி கொடுக்க யோசிக்கிறார்கள். மற்றவர்கள் சொல்லும் யோசனைகளை கவனிப்பதில்லை. ஒரு **Advisory Board** அமைத்து அவர்கள் இணைப்புடன் **Electricity Board** நிர்வாகத்தை நடத்தினால் இந்தியாவிலே நம் மாகாணம் மின்சார முன்னேற்றம் இப்பொழுது இருப்பதைவிட அதிகம் முன்னேற்றம் அடைவது திண்ணம்.

*SRIMATHI **KOLANTHAI AMMAL**: கனம் சபாநாயகர் அவர்களே, மின்சாரம் சம்பந்தமாக மின்சார அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கிற அறிக்கையிலிருந்து அதனை வாசித்து அறிந்த அங்கத்தினர்கள் எல்லோரும் நம்முடைய சென்னை மாகாணமானது மின்சார உற்பத்தியிலும் அந்த மின்சார உற்பத்தியின் மூலமாக தொழில் அபிவிருத்தி செய்வதிலும் எந்த அளவு முன்னேறி இருக்கிறது என்பதை நினைத்து பெருமைப்படக்கூடியவர்களாகத்தான் இருக்கிறார்கள். அப்படி பெருமைப்படுவதில் இப்பொழுது இருக்கும் இந்த முன்னேற்றமானது நம்முடைய குறுகிய கால முன்னேற்றம் என்று ஒப்புக் கொண்டால், ஒரு சிலர் எதிர் கட்சியிலிருக்கிறவர்களுக்கு மதிப்புக் குறைந்து விடும் என்பதற்காகவும், இந்த மின்சாரத் துறையிலாவது நம்முடைய தமிழ் நாடு இவ்வளவு முன்னேற்றம் அடைந்து முதன்மையில் இருக்கிறது என்று சொல்லிக்கொள்ள முடியாமல் முதன்மையற்ற வழியில்தான் இருக்கிறது என்று பக்கத்துக்கு பக்கம் அவர்கள் எடுத்துக்காட்டிக்கொண்டு வருகிறார்கள். ஆனால் பாரத நாடு முழுவதையும் எடுத்துக்கொண்டால் மின்சார உற்பத்தியிலும் சரி, பத்து ஆண்டுகள் மின்சாரத்தை உபயோகித்து தொழில்களை நிறுவுவதிலும் சரி நம் தமிழ் நாட்டில் சிறந்த முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். முதன்மை ஸ்தானத்தில்தான் முன்னேற்றமடைந்திருக்கிறது. அந்தத் துறையில் நல்ல முறையில் தமிழ் நாட்டை எடுத்துப் பார்த்தால் வட நாடு மங்கியும் தென் நாடு பொங்கியும் தான் இருக்கிறது, என்பதை சிறப்புடன் சொல்லிக் கொள்ள பிரியப்படுகிறேன்—பெருமைப்படுகிறேன். மின்சாரத்தை உபயோகிப்பதிலும் வட நாடு மங்கி இருக்கிறது, தென் நாடு பொங்கி இருக்கிறது. மின்சாரத்தைக் கொண்டு தொழில் வளம் அமைந்திருப்பதைப் பார்த்தாலும் வட நாடு மங்கியும் தென்னாடு பொங்கியும் இருக்கிறது. ஆனால் சில எதிர் கட்சி அங்கத்தினர்கள் சொன்னார்கள், வங்காளமும், பம்பாயும் தொழில் துறையில் முன்னேற்றமடைந்திருக்கிறது என்று. இன்றைக்கு இந்த பத்து வருஷத்திலுள்ள சாதனையை எடுத்துக்கொண்

டால் இன்றைக்கு சென்னை மாகாணம் மற்ற மாகாணத்தைக் காட்டிலும் முன்னேற்றத்தில் குறைந்து விடவில்லை. அதிகப்படியான முன்னேற்றத்தைக் காட்டியிருக்கிறது.

அதற்கு எடுத்துக்காட்டாக பெரியாறு திட்டத்தை எடுத்துக்கொள்ளலாம். அங்கே போட்ட திட்டத்திற்கு ஒரு கோடி ரூபாய் குறைவாகவே செலவு செய்து அந்தத் திட்டத்தை வெற்றிகரமாக முடித்திருக்கிறார்கள் என்றால் சென்னை மாகாணத்தின் சாதனையைத் தெரிந்து கொள்ளலாம். இதைக் கண்டு ஆளும் கட்சியை போற்றித்தான் ஆக வேண்டும் என்பதை கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஒரு கோடி ரூபாய் குறைவில் முடித்து விட்டதாகச் சொன்னால் போட்ட திட்டத்தை சரிவர நிறைவேற்ற முடியவில்லை என்று சொல்லலாம். போட்ட திட்டத்தில் குறைந்த செலவு செய்து அதுவும் வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டிருக்கிறது என்று சொன்னால் அதைக்கண்டு பெருமைப்பட வேண்டியதுதான் என்று கூறுகிறேன்.

அத்துடன் வரப்போகிற குந்தா திட்டமானது எங்கள் பகுதிக்கு மிக அருகாமையில் இருக்கிறது என்பதை நான் பெருமையுடன் சொல்லிக்கொள்ளுகிறேன். அந்தத் திட்டத்தின் கீழ் உற்பத்தியாகும் மின்சாரம் பெரும்பாலும் இண்டஸ்ட்ரியல் ஏரியாவுக்குத்தான் பயன்படப் போகிறது. அது எங்களுக்கு மட்டுமல்லாமல் மாகாணம் முழுவதற்கும் பரவுவதற்கு வசதியாக இருக்கும். மற்றும் அதிலிருந்து வரக்கூடிய கழிவு நீர் அந்தப் பகுதியிலுள்ள நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதிக்கு பயன்படுத்தப்படும். அந்த வட்டாரங்களிலுள்ளவர்கள் அதை பயன்படுத்திக்கொள்ளுவார்கள் என்றும் சொல்லிக்கொள்ளுகிறேன். விசை சக்திகளுக்கும் அதை உபயோகப்படுத்திக்கொள்ள வசதி இருக்கிறது. அதிலிருந்து வரக்கூடிய கழிவு தண்ணீரை எவ்வளவு தூரம் பயன்படுத்திக்கொள்ள முடியுமோ அவ்வளவு தூரம் பயன்படுத்திக்கொள்வதற்கும் இந்த விசையின் மூலமாக பயன் ஏற்படுகிறது. ஆகவே நல்ல முறையில் இப்பொழுது விவசாயம் நடைபெறாத இடங்களில் நல்ல விவசாயம் ஏற்படுகிறது.

போன தடவை இந்த சட்டசபையில் பட்ஜெட் விவாதத்தில் பேசிய போது ஏழை விவசாயிகள் இரவில் வயல்களுக்கு வந்து தண்ணீர் பாய்ச்ச வேண்டியதாக இருக்கிறது என்றும், அதனால் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள் என்றும், அதனால் பல பேர்கள் பாம்புகள் கடித்துக்கூட இறக்க நேரிடுகிறது என்றும் சொன்னேன். அதற்கு நமது கனம் அமைச்சர் அவர்கள் என்ன சொன்னார் என்றால், பாம்புகள் பகலில் கடிப்பது இல்லையா என்று நல்ல முறையில் பதில் அளித்தார். அதனால் இந்த திட்டத்தின் மூலமாக அந்தப் பகுதிகளுக்கு தண்ணீர் விவசாயத்திற்கு உபயோகப்படுத்திக்கொள்வதற்கு ஓரளவு இருக்கிறது என்று பெருமையோடு சொல்லிக்கொள்ளுகிறேன்.

அங்கே அநேகர் பருத்தி செடிகளை வைத்துப் பயிரிடுகிறார்கள். அவைகள் சுமார் எட்டு முதல் பத்து அடி வரையில் உயர்ந்து இருக்கின்றன. சுமார் 300 காய்கள் அவற்றில் காய்க்கின்றன. அவைகளை நிறுத்துப் பார்த்தால் மிகவும் கனம் பொருந்தியதாக இருக்கும். அவ்வளவு நல்ல முறையில் அங்கே பருத்தி பயிராகிறது. அப்படிப்பட்ட தோட்டங்களில் இரவில் தண்ணீர் கட்ட வேண்டுமென்று சொன்னால் அது முடியவே முடியாது என்பதை மிகவும் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதே மாதிரி சோளம் இருக்கிறது அவைகளுக்கும் இரவு நேரங்களில் தண்ணீர் பாய்ச்சுவது என்பது முடியாத காரியம். இந்த பெரியாறு திட்டத்தை நிறைவேற்றியிருக்கும்படியான நமது கனம் அமைச்சர் அவர்கள் விவசாயிகளுக்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்தவர்களாக இருக்கிறார். இரவில் மின்சாரத்தைக் கொடுப்பதை நிறுத்தி விட்டு பகலில் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

[Srimathi Kolanthai Ammal] [1st November 1958

12–40 p.m. தொழில் என்று சொன்னால் விவசாயமும் ஒரு தொழில் தான். தொழிற்சாலையில் வேலை செய்வதும் தொழில் தான். தொழிற்சாலையில் வேலை செய்கின்றபோது, மின்சார விளக்கின் அடியிலே இருந்து வேலை செய்கின்றான். ஆனால், விவசாயி, காற்றிலும் மழையிலும் நனைந்து, அரை வயிற்றுக்குக் கூட சோறு கிடைக்காத முறையில் பட்டினியாக வாடுகின்றான் என்பதை நன்றாக உணருகிறோம்.

விவசாயக் கூலி ஆட்களுக்கு ஒரு ரூபாய் கூலி கொடுக்கவேண்டு மென்றால் முதலாளிகள் கூலி ஏறிவிட்டதே என்று கதறுகிறார்கள். ஆனால், மில்லிலே, தொழிற்சாலையிலே வேலை செய்கின்ற தொழிலா ளர்கள் நாளொன்றுக்கு குறைந்தபட்சம் மூன்று ரூபாய் கொடுத்தாலும், அதுவும் பற்றாக்குறை என்று சொல்லி தொழிலாளர் தலைவர்களும் பிரதிநிதிகளும் வேலைநிறுத்தம் செய்யச் செய்கின்றார்கள் ; தலைமை தாங்கி ஊர்வலமும் நடத்துகின்றார்கள். இப்படிப்பட்ட கோளாறு நம் முடைய தமிழ்நாட்டில்தான் ஏற்பட்டிருக்கிறதோ என்றுகூட தோன்று கிறது. இது மிகவும் பரிதாபமான நிலைமையாகும். மில் தொழிலா ளிகளுக்கு மட்டும் இப்படியெல்லாம் ஏற்பட்டிருக்கும் வசதிகள் என்றைக் குத்தான் விவசாயத் தொழிலாளிகளுக்கும் ஏற்படும் என்று நான் வர வேற்போடு எதிர்பார்க்கிறேன்.

விவசாயம் முன்னேறவேண்டும் என்று அடிக்கடி சொல்லிக் கொண் டிருக்கிறோம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கிய நோக்கம் நிறைவேறுவது விவசாயிகளின் கையில்தான் இருக்கிறது என்று நம்பும் படியான நாம், விவசாயிகளுக்கு முதல் சலுகையாக இந்த மின்சாரத்தைக் கொடுக்கவேண்டும். இரவிலே கண்டிப்பாக தண்ணீர் கட்டவே முடியாது. அமைச்சர் அவர்கள் எந்த முறையில் பதில் சொன்னாலும், அதை நாங்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராய் இல்லை. இரவில் தண்ணீர் கட்டுவது என்பது அவர்களுக்கு மிகவும் முடியாத காரியம். பகலில் தான் கட்ட முடியும் என்பதை நாங்கள் வற்புறுத்திச் சொல்லிக்கொள்கிறோம்.

அடுத்தபடியாக, மினிமம் சார்ஜ் என்று போட்டிருக்கிறார்கள். பத்து ஆண்டில் இவ்வளவு மின்சாரத்தை உபயோகிக்கவேண்டும். உபயோகிக்கா விட்டால், உபயோகிக்காத பகுதிகளுக்கு பணம் கட்டவேண்டும் என்று இருக்கிறது. இதை 20 ஆண்டுகளுக்குத் தளர்த்தவேண்டும் என்று பல விண்ணப்பங்கள் மூலம் தெரிவித்திருக்கிறோம். எங்களுடைய ஜில்லாவிலே கூட்டப்படும் கூட்டங்களிலும் சொல்லியிருக்கிறோம். அமைச்சர் அவர்கள் வந்தபோதும் அதனைச் சொல்லியிருக்கிறோம். 20 ஆண்டுகளுக்குத் தளர்த்து வோமானால் ஏழை விவசாயிகளுக்கு அது மிகவும் உதவியாக இருக்கும். அவர்களுக்கு எந்தப் பக்கம் திரும்பினாலும் கடன் தொல்லையாக இருக்கும் போது பத்து ஆண்டுகள் என்று இருப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆகவே, 20 ஆண்டுகள் என்று தளர்த்தவேண்டுமென்று நாங்கள் மிகவும் வற் புறுத்திக் கூறிக்கொள்கிறோம்.

மூன்று, நான்கு ஆண்டுகளுக்குமேல் கம்பங்கள் நட்டு, ஒயரிங் இழுக்கப் பட்டிருக்கும் எத்தனையோ தோட்டங்களிலே இன்னும் லைன் கொடுக்காமல் இருக்கிறார்கள். "பெரியாறு மின்சாரத் திட்டம் நிறைவேறியவுடனே உங்களுக்குக் கிடைக்கும்" என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். நான் கைந்து ஆண்டுகளாக மோட்டார் பம்ப் செட்டுகளை வட்டிக்குக் கடன் வாங்கி வைத்திருக்கும் விவசாயிகள் இன்னும் கனெக்ஷன் கிடைக்காமல் பரிதாப மான நிலையில் இருக்கிறார்கள். ஆகவே, அவர்களுக்குக் கண்டிப்பாக, சீக்கிரமாக மின்சார கனெக்ஷன் கொடுத்து, அவர்கள் வாங்கி தயாராக வைத்திருக்கும் மோட்டார் பம்ப் செட்டுகளை விவசாயத்திற்கு உபயோகப் படுத்தும்படி ஆவனசெய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இரண்டு மாதம் அடிஷனல் செக்யூரிடி டெபாசிட் என்று சொல்லி யிருந்தார்கள். அதைப் பெரும்பாலும் எல்லோரும் கட்டிவிட்டார்கள். ஆனால், குறிப்பிட்ட சில ஏரியாக்களில், இப்பொழுது அதிகமாக விவ சாயத்திற்குப் பணம் செலவழிக்கும்படியான ஏரியாக்களிலே, பங்கீடு முறை

1st November 1958] [Srimathi Kolanthai Ammal]

யில் கட்டவேண்டுமென்று சட்டத்தைப்போட்டு கூட சில அதிகாரிகள் அதை நல்லமுறையிலே நடத்துவதில்லை. அதுபற்றி அமைச்சர் அவர்களிடமும் எடுத்துச்சொல்லியிருக்கிறோம். மேலே இருக்கின்றவர்கள் நியாயமான முறையில் நல்ல சட்டங்களைச் செய்தாலுங்கூட, தொழில் துறையிலே ஈடு பட்டு அதைச்செயல்படுத்தும் சில தொழிலாளர்கள் ஆங்காங்கு கோளாறு செய்கிறார்கள் என்று அதை நிச்சயமாக எடுத்துக்காட்டாமல் இருக்க முடியவில்லை. ஏனென்று கேட்டால், ஏழை விவசாயிகளிடம் சில சமயங் களில் பணத்தை வாங்கிக்கொண்டுகூட என்ன என்னவோ செயல்களைச் செய்கிறார்கள். அதைச் சொல்வோமானால், அந்த மின்சாரத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்காக ஒரு கூட்டம் பரிந்து பேசிக்கொண்டி ருக்கிறது. அந்த மின்சாரத் தொழிலாளர்களுக்கு வருகிற சம்பளமும் கிராம மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரியில் ஒரு பங்கு என்று சொன்னால் மிகையாகாது. மின்சாரத் துறையிலே வேலை செய்யும் தொழிலாளர் கள் அதிகமான சம்பளம் கேட்கிறார்கள் என்று சொன்னால், அவர்கள் ஒன்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அதாவது, அவர்கள், அதிகமாகக் கேட்கின்ற சம்பளத்தையும் கொடுக்கவேண்டியவர்கள் விவ சாயிகளாகத்தான் இருக்கிறார்கள். விவசாயிகள் உழைத்து பூமியிலிருந்து பொருளை உற்பத்தி செய்து, விற்று, சர்க்காருக்கு வரி கொடுப்பதன் மூலம் மின்சாரத் தொழிலாளர்களுக்கும் சம்பளம் கொடுக்கின்றான் என்பதையும் நிச்சயமாக கவனத்தில் கொள்ளவேண்டுமென்பதைத்தான் இந்த இடத் தில் ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும்.

தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளி அதிகச் சம்பளம் வேண்டும் என்று கேட்கலாம்; அதிலும் சிறப்பாக மின்சாரத் தொழி லாளிகள் அதிகச் சம்பளம் வேண்டும் என்று கேட்கலாம். அப்படிக் கேட்பவர்கள் எல்லாம் எட்டு மணி நேரம் வேலை செய்கிறார்கள். ஆனால், விவசாயிகள் இரவு பகல் என்று பாராமல் உழைக்கிறார்கள். தொழிற் சாலையில் வேலை செய்பவர்களுக்குள்ள அதே நீதி விவசாயத் தொழி லாளர்களுக்கும் காட்டப்படவேண்டும் என்று நாங்கள் வற்புறுத்திக் கூறு கிறோம். விவசாயத் தொழிலாளர்களுக்கும் பரிவு காட்ட வேண்டும் என்று நாங்கள் கோருகிறோம். தினமொன்றுக்கு இரண்டரை ரூபாய், மூன்று ரூபாய் என்று குறைந்த பட்சமாகச் சம்பளம் பெறும்படியான தொழி லாளர்களுக்கு மேலும் பற்றாக்குறை என்று பேசும்பொழுது, அந்த ஏழை விவசாயிகளிடம்தான் வரி போடுவார்கள்; அவர்கள் செய்யும் படியான தொழிலைக் கசக்கிப் பிழிந்துதான் வாங்க வேண்டிய நிலைமை இருக்கிறதென்பதையும் இங்கே மிகவும் தாழ்மையோடு நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்னும் நாம் தொழிற் துறையில் முன்னேற்றத்தை அடையவில்லை. என் முன்னேற்றத்தை அடையவில்லையென்றால், நமக்கு போதுமான மின் சக்தி, விசை கிடைக்கவில்லை என்பதை நம்முடைய எதிர்க்கட்சி யிலிருக்கும் ஒரு சிலருக்கு கூறிக்கொள்ள விரும்புகிறேன். நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டம் வேலை செய்ய முற்பட்டவுடனே டெக்ஸ்டைல்ஸ் என்று சொல்லக்கூடிய ஜவுளி உற்பத்திக்கும், அதோடுகூட இல்லாமல், இரும்பைக் காய்ச்சி உருக்கி அதற்குமேல் இயந்திரப் பொருள்களையெல் லாம் உற்பத்தி செய்வதற்கும், நாமே நமக்குத் 'தேவையான —சுயதேவைப் பூர்த்தி செய்துகொள்ளும் வகையில்—பேப்பர் முதலிய வற்றையும் செய்து கொள்வதற்கும், ஸ்மால் ஸ்கேல் இன்டஸ் ட்ரீஸ் என்று சொல்லக்கூடிய சிறு கைத்தொழில்களில் பல்வேறு தொழில்களை அபிவிருத்தி செய்துகொள்வதற்கும் இந்தத் திட்டம் நிறை வேற்றப்படுகிறது என்பதைத் தான் இந்த இடத்திலே ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். சக்தி இல்லையென்றால் ஒன்றுமே செய்ய முடியாது. அதிலும் மின் சக்தி இல்லையென்றால் தொழில் பெருக முடியாது. தெய்வத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள் சிவ சக்தியை நம்பாவிட்டாலும் மின் சக்தியை நம்பி நாட்டில் பொருளாதாரத் துறையை உயர்த்துவதற்கு நல்ல முறையிலே ஒரு ஒத்துழைப்பு கொடுக்கவேண்டும். வளர்ந்த தொழிலை வளரவில்லை என்று சொல்லிக்கொண்டு, பெருகி, முதன்

[Srimathi Kolanthai Ammal] [1st November 1958

மையிலே நிற்கும் ஒரு துறையை பெருகவில்லை என்று சொல்லிக்கொண்டு பொதுமக்களிடம் அதிகமான அதிருப்தியைப் பெருக்கக்கூடாது என்று மிகத் தாழ்மையோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தத் திட்டத்திலே கண்டிருக்கும் வெற்றிகளுக்குப் பாராட்டுதல் தெரிவித்துக்கொண்டு, மேலும் புதிய திட்டங்களுக்கு நாங்கள் யோசனை கூறுவதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். கீழ் பவானியிலிருந்து கூட மின்சாரம் எடுக்க முடியும். அந்தத் திட்டத்தை நிறைவேற்றினுல் எங்கள் பகுதிக்காவது மின்சார வெட்டு வராமல் இருக்கும். இந்த யோசனையை கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது கட்டியிருக்கும் அணைகளிலிருந்து கிடைக்கின்ற விசையைப் பயன்படுத்துவதற்கான திட்டங்களை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நிறைவேற்ற முடியாவிட்டாலும், மூன்றுவது ஐந்தாண்டு திட்டத்திலாவது நிறைவேற்ற முடியும் என்று நான் நம்புகிறேன்.

கடைசியாக, எதிர்க்கட்சி நண்பர் ஒருவர் பேசும்போது, எலெக்ட்ரிக் ட்ராம் கம்பெனிக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பணத்தை வாங்குவதற்கும், அவர்கள் கட்டவேண்டிய எலெக்ட்ரிக் பில் பணத்தை வாங்குவதற்கும் அரசாங்கம் பின் தங்கியிருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். "எங்களைத் தான் ஆங்கிலேயர்களுக்கு அடி வருடிகள் என்று கூறினுர்கள், இவர்கள் என்ன செய்தார்கள்?" என்று எல்லாம் குறிப்பிட்டார்கள். ஆனுல், எந்த உபயோகமும் பொதுமக்களுக்கு உரியது என்பதை நாம் மறுக்க முடியாது. வண்டி ஓடுகிறதென்றால், ஆங்கிலேயர் மட்டும் அதில் ஏறுவது இல்லை. நாட்டிலிருக்கும் அத்தனை பேரும் அதில் ஏறுகிறுர்கள். ஏற்கனவே அவர்கள் குறிப்பிட்ட ஒரு சிலருக்கு அடகு வைத்திருக்கும்படியான அந்தக் கம்பெனி விஷயம் கோர்ட்டிலே இருக்கும் செய்தி. எலெக்ட்ரிக் பில் பணம் எப்படியும் வந்துவிடும். அப்படியிருக்கும்போது அரசாங்கத்தின் பேரில் குற்றச்சாட்டு சொல்வதற்கு எந்த விதமான அனுபந்தமும் இல்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன். யார் கம்பெனி ஆரம்பித்தாலும் பொதுமக்கள் அதில் பங்கு எடுத்துக்கொள்கிறுர்கள் என்ற எண்ணம் தான் நல்லது. அதுதான் பரந்த எண்ணம் என்று சொல்லிக்கொண்டு, அமைச்சர் அவர்களுக்கு விவசாயிகள் படும் கஷ்டத்தை, அதிலும் குறிப்பாக எங்கள் வட்டார விவசாயிகள் படும் கஷ்டத்தை, எடுத்துரைக்கும் வகையில், "பட முடியாது இனித் துயரம் பட்டதெல்லாம் போதும் அமைச்சர் அவர்களே!" என்று கூறிக்கொண்டு மின்சாரமானது விவசாயிகளுக்கு வாழ்வைக் கொடுப்பதற்கேற்ற சந்தர்ப்பத்தை உண்டாக்க வேண்டுமென்று கூறிக்கொண்டு என்னுடைய சிறிய உரையை முடிக்கின்றேன்.

SRI M. P. SUBRAMANIAM: அவைத் தலைவர் அவர்களே, தமிழ் நாட்டில் மின்சாரத் துறையிலே நாம் அடைந்திருக்கும் முன்னேற்றத்தை நான் குறைத்துக் கூறவோ, குறைத்து மதிப்பிடவோ விரும்பவில்லை. கணிசமான முன்னேற்றம் அடைந்திருக்கிறேம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். நாம் எல்லாம் விரும்புகிறபடி இந்தியாவிலேயே நம்முடைய மாநிலம் முதலாவதாக இல்லாவிட்டாலும்—மூன்றுவதாக இருந்தாலும்—குறிப்பாக விவசாயித்திற்கு மின்சாரம் வழங்குவதிலும், தெருக்களுக்கு விளக்குப் போடுவதிலும் நாம் முதல் மாநிலமாக இருக்கிறேம் என்று சொல்வதில் அந்தப் பெருமை எங்களுக்கும் உண்டு என்பதையும் நாங்கள் மறக்க வில்லை. அதுவும் பற்றுக்குறை என்று சொல்லும் நேரத்தில் விவசாயிகளுக்குக் கொடுக்கப்படவேண்டியது மிக அவசியம் என்பதையும் கிராமப் புறங்களிலேயிருந்து வந்த எங்களைப் போன்றவர்கள் உறுதியாக உணருகிறேம். ஆனுல், இந்த நேரத்திலே ஒன்றை மட்டும் நாம் கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும் என்று நான் இந்த அவைக்குக் குறிப்பிட விரும்புகிறேன்.

1st November 1958] [Sri M. P. Subramaniam]

(Deputy Speaker in the Chair.)

விவசாயத்தை மட்டுமே நாம் பெருக்கிக்கொண்டு போவோமேயானல், இந்தியாவில் ஒரு பகுதியாக இருக்கும் தமிழ்நாடு விவசாய நாடாகவும், மிகக் குறைந்த அளவுக்கு மின்சார உற்பத்தி செய்தாலும், தொழிற் துறையிலே கூடுதலான பலனை வடநாட்டவர்கள் அடைந்து விடுவார்கள். அவர்கள் நம்மைவிட உற்பத்திச் சாதனங்களை அதிகமாகப் பெருக்கி, நம்மை ஒரு விவசாய நாடாகவே வைத்திருந்து, நம்மிடத்தில் விற்கும் சந்தைக் கடையாக ஆக்கிவிடக் கூடிய நிலை ஏற்பட முடியும் என்பதை அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

எந்த ஒரு நாடு விவசாயத்தை மட்டும் நம்பியிருக்கிறதோ, அந்த நாடு வாழ்க்கைத் துறையிலும் சரி, மக்களுடைய முன்னேற்றத்திலும் சரி அதிகமாக இருக்க முடியாது என்பது அமைச்சர் அவர்கள் உணராதது அல்ல என்பதையும் நான் அவர்களுக்கு குறிப்பிட விரும்புகிறேன். ஏன் இதைச் சொல்கிறேன் என்றல், பல சந்தர்ப்பங்களிலே இதே அவை யில் நாங்கள் பேசும்போது பல தொழில் திட்டங்களை—குறிப்பாக சேலத் தில் அலுமினியத் தொழிற்சாலையை—நிறுவவேண்டும் என்று நாங்கள் கேட்டபோதெல்லாம் நமக்கு மின்சாரம் போதுமான அளவு கிடைக்காத காரணத்தால் பல திட்டங்கள் தடைப்படுகின்றன என்று இதே அவையில் 12-50 அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறர் என்பதற்கான ஆதாரம் என்னல் p.m. குறிப்பிட முடியும். மின்சாரத்திலே நாம் மிக முன்னேற்றம் அடைந் திருக்கிறோம் என்று சொல்லும் நேரத்திலே விவசாயத் துறையிலே மட்டும் கவனத்தைச் செலுத்துவதை விட்டு, விவசாயத்தை விட முக்கியமான—பலன் அளிக்கக்கூடிய—நாட்டு மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயரு வதற்கு வழி செய்யக்கூடிய—தொழில் துறையில் அதிக கவனம் செலுத்த வேண்டும். அது நான் சொல்லித் தெரியவேண்டியதில்லை. அரசாங்கம் போட்டிருக்கக் கூடிய திட்டமே அந்த அடிப்படையில் தான் இருக்கிறது என்று சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது. இந்தப் பகுதியிலிருப்பவர்கள் மின்சாரத்தை விவசாயம் செய்வதற்கும், தண்ணீர் இறைப்பதற்கும், விளக்கு போட்டுக் கொள்வதற்கும் உபயோகிப்பதைப் போவல்லாமல், பம்பாய் வங் காளம் போன்ற இடங்களில் மின்சாரத்தை உபயோகிப்பதிலே விவசாயத்தை கவனிக்காத காரணத்தினல் அங்குள்ள மக்களுடைய வாழ்க்கைத் தரம் குறைந்து விடவில்லை, அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்த்து தான் இருக்கிறது. இதற்கு மின்சாரத்தை உபயோகிப்பதிலே தொழில் துறையில் அதிக அக்கரை காட்டுவதுதான் என்பதை அமைச்சர் அவர்கள் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தப்படியாக மின்சார போர்டு ஆரம்பித்து ஏறக்குறைய ஒரு ஆண்டு ஆகி விட்டது. ஒரு ஆண்டுக்குப் பின்னல் தான், அதனுடைய வரவு செலவுகளைப் பற்றித் தெரிந்துக்கொள்ளக் கூடிய வகையில் வரவு-செலவுத் திட்டம் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. 1-7-57-ல் ஆரம்பிக்கப்பட்ட மின்சார போர்டு, 70 கோடி ரூபாயை மூலதனமாக வைத்து ஆரம் பிக்கப்பட்டிருக்கிறது என்று புள்ளி விவரம் கொடுத்திருக்கிறர்கள். எது 70 கோடி ரூபாய் மூலதனமாகக் கருதப்படுகிறது என்று போதுமான புள்ளிவிவரம் நம்மிடத்தில் இல்லை என்று சொல்லவேண்டும். நாம் பரவலாகத் தெரிந்து கொள்வது, இந்த 70 கோடி ரூபாய் என்பது ஏற்கெனவே இருந்த சர்க்கார் எலெக்டிரிஸிடி டிபார்ட்மென்டின் அதன் வருமானத்தையும், பொது வருமானத்தையும், டெப்ரிஸியேஷன் பண்ட், ஸ்பெஷல் ரிஸர்வ் பண்ட் எல்லாவற்றையும் இந்த மின்சார போர்டுக்கு கடனுகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு வட்டியும் கொடுக்க வேண்டி யிருக்கிறது மின்சார போர்டு. இப்படி ஏற்படுத்துவதனல் மின்சார போர் டானது சாதகமாக சூழ்நிலையில்லாமல்—பாதகமான சூழ்நிலையில்—ஆரம் பிக்கப்பட்டிருக்கிறது என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். மின் சார போர்டு நியமனமானது செய்யப்படவேண்டியது என்று கருதி சட்டம் 1948-ல் நிறைவேற்றப்பட்டு, 10 ஆண்டுகளுக்குப் பிறகு இப்பொது ஒரு போர்டு அமைத்திருக்கிறர்கள். அதற்கு 70 கோடி ரூபாய் கொடுத்து

வருஷத்திற்கு 410 லட்சம் ரூபாய் கடனுக்கு வட்டியாகக் கொடுக்கவேண்டு மென்று இங்கே கொடுத்திருக்கிறார்கள். அவர்களுடைய செலவினங் கள் போக, 410 லட்சம் ரூபாயைப் கொடுத்தால் 60 லட்சம் ரூபாய் துண்டு விழும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். மின்சார இலாகா சம்பந்த மாக இருக்கக் கூடிய தொகையையே எடுத்துக்கொடுத்து அதற்கு வட்டி கொடுக்க வேண்டுமென்று 410 லட்சம் ரூபாய் வட்டி போட்டு அதைக் கொடுக்க வில்லையென்றால் அதற்கும் வட்டி கொடுக்க வேண்டுமென்றால், மின்சார போர்டு என்று சொன்னவுடன் கவர்ச்சியாக இருக்குமே தவிர, திருப்திகரமாக லாபகரமாக நடக்காது என்று நாட்டு மக்களுக்குத் தெரிந் தேயிருக்கும்.

மற்றும் ஒன்று, இந்த மின்சார போர்டுக்குக் கொடுக்கும் கடனுக்கு 5¼ சதவிதம் வட்டி கணக்கிட்டுக் கொடுக்க வேண்டும் என்றிருக்கிறது. இதே மின்சார போர்டு சமீபத்தில் சில கோடி ரூபாய்களை மக்களிட மிருந்து கடனைப் பெற்றது 4½ சத வீத வட்டியில். சாதாரணமாக நமக்குத் தெரிந்தது கோவாபரேடிவ் பாங்க் போன்ற பாங்குகளுக்கு ரிஸர்வ் பாங்கு கடன் கொடுக்கும்போது அதற்கு வட்டி 2½ சத வீதம் அல்லது 3 சத வீதம்தான். கடன் கொடுக்கும் போது, பொதுமக்களுக்கு எவ்வளவு சௌகரியங்கள் செய்து கொடுக்கவேண்டுமென்று விரும்பு கிறோமோ அதற்குத் தக்கபடி, 5¼ சத வீதம் வட்டி கொடுக்க வேண்டு மென்று சொன்னால் எப்படி அது லாபகரமாக வேலை செய்யும் என்று கேட்கிறேன். பொதுமக்களை 4½ சதவீதத்திற்கு கடன் கொடுக்கும்போது அரசாங்கம் தன்னுடைய ஒரு நிறுவனத்திற்கு கடன் கொடுத்து 5¼ சத வீதம் வட்டி எதிர்பார்ப்பது சரியல்ல. அதை 3 சதவீதமாகக் குறைத்து வட்டி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கூறிக் கொள்ள விரும்புகிறேன். அப்படிச் செய்தால் தான் லாபகரமாக ஒரு கமர்ஷியல் கன்ஸெர்னை நடத்திக்காட்ட முடியும் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அதைப்போலவே இந்த மின்சார போர்டு அமைப்பை எடுத்துக்கொண் டால், சட்டத்தில் அதிகாரப் பற்றற்றவர்கள் இருக்க வேண்டும் என்று இருக்கின்றது. இடைக் கால காரியமாக இந்த அமைப்பை சரியான முறையில் ஏற்படுத்த, அதிலுள்ள சிக்கல்களைத் தீர்க்க அதிகாரப் பற்றற் றவர்களைப் போடாமல் இருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த போர்டை நிறுவி இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்ட போதிலும் இன்னும் சீர் திருத்தப்படாமல் இருப்பதற்கு நியாயமில்லை. ஆகையால் அதிகாரப் பற்றற் றவர்களையும் போடுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அதோடு மாவட்ட லோகல் அட்வைஸரி கமிட்டிகளை உடனடியாக ஏற்படுத்தினால் அந்தந்த வட்டாரப் பொதுமக்களுக்கு அந்த உறுப்பினர்களிடம் தங்கள் குறை களைச் சொல்லிக் கொள்வதற்கு வழியாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

மற்றும் ஒன்று, இது வரையில் மின்சார இலாகா என்று தனியாக இருந்த நேரத்தில் இரண்டு மூன்று ரிஸர்வ் நிதிகள் ஏற்படுத்தப்பட்டி ருந்தன. அந்தத் தொகைகளெல்லாம் இப்போது போர்டுக்குக் கடனைக் கொடுக்கப்பட்டு அத்தனை பணமும் செலவழிக்கப்பட்டு விட்டது. இப்படி ரிஸர்வ் நிதி எதற்கு ஏற்படுத்தினோமோ அதற்குப் பயன்படாமல் போய்விட்டது என்று தெரிகிறது. அத்துடன் 2½ சதவீதம் டெப்ரிஸியேஷன் நிதி என்றும், 1 சத வீதம் பொது ரிஸர்வ் பண்ட் என்றும் ஏற்படுத்த விதியிருக்கிறது என்று சொல்கிறார்கள். சட்டத்தில் எப்படி என்று தெரிய வில்லை. இதனால் வருமான வரிக்கு பாதகம் ஏற்படலாம் என்பதையும், சிக்கல் ஏற்படலாம் என்பதையும் இந்த நேரத்தில் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

அடுத்தப்படியாக மின்சார இலாகாவிலே வேலை செய்யும் ஊழியர் களைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இப்போது நமக்கெல்லாம் மகிழ்ச்சி யளிக்கக் கூடிய குந்தா திட்டம் நிறைவேற்றப்படு வதிலே மிகத் திறமையாகவும், சிக்கனமான முறையிலும் செயலாற்றி வருகிறார்கள். அந்த ஊழியர்கள் கூடுதலான கஷ்டங்களை அனுபவிக்க

வேண்டியிருக்கின்ற காரணத்தால், அவர்களுடைய அடிப்படை சம்பளத்திலே $12\frac{1}{2}$ சதவீதம் கூடுதலாகக் கொடுக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதற்கு முன்பு நமது மாகாணத்தில் நிறைவேற்றப்பட்ட வேறு ஒரு திட்டமான மச்குண்ட் திட்டத்தை யொட்டி வேலை செய்வதர்களுக்கு 25 சதவீதம், கஷ்டம் இருக்கிறது என்று கூடுதலாகக் கொடுக்கப்பட்டது. இந்த குந்தா திட்டத்தின் விஷயத்தில் மட்டும் $12\frac{1}{2}$ சத வீதம் என்று இந்த மின்சார போர்டும், அரசாங்கமும் எந்தக்காரணத்தினால் இந்த முடிவுக்கு வந்ததென்று தெரியவில்லை. அதே அடிப்படையில் அங்கே ஊழியம் செய்கிறவர்களுக்கும் 25 சத வீதம் கூடுதலாக, அவர்களும் பல தொல்லைகளுக்கும் இன்னல்களுக்கும் ஆளாக வேண்டியிருப்பதால், அதை அரசாங்கம் ஒப்புக் கொண்டு, அவர்களுக்கும் அளித்தால் நல்லதாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். மற்றும் ஒன்று, அங்கே வேலை செய்யக் கூடிய ஊழியர்களுக்கு $12\frac{1}{2}$ சத வீதம் கொடுத்து விட்டு, அலுவலகங்களில் வேலை செய்பவர்களுக்கு இந்த $12\frac{1}{2}$ சதவீதம் கூடுதலாகக் கொடுக்கும் சலுகை இல்லை என்று அறிகிறேன். இரண்டு பேர்களுக்கும் வித்தியாசம் இருப்பது நியாயமல்ல. வெளியே வேலை செய்வது போலவேதான் அலுவலகங்களிலே வேலை செய்பவர்களும் அதே இடையூறுகளுக்கும், இன்னல்களுக்கும் ஆளாக நேரிடுகிறது. ஆகையால் இந்த வித்தியாசம் இருப்பது சரியல்ல என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தப்படியாக மின்சார இலாகாவிலே, ஒரு இடத்திலே வேலைக்கு ஆட்கள் இல்லை என்று புதிதாக எடுக்கிறார்கள். அதே நேரத்தில் சில இடங்களில் வேலையிலிருந்து நீக்குகிறார்கள். உதாரணமாக ஒரு இடத்தில் அதிகப்படியான பியூன்கள் இருக்கிறார்கள் என்று பியூன்களை வேலையிலிருந்து நீக்கியிருக்கிறார்கள். அதே நேரத்தில் பியூன்கள் இல்லாத காரணத்தினால் வேறு வேலைக்கு எடுத்தவர்களை பியூன்களாக உபயோகிக்கிறார்கள். இந்த முறையில் இரண்டு தரப்பிலும் கோ-ஆர்டினேஷன், அதாவது கூட்டுறவு முறை இல்லை என்று சொல்லவேண்டியிருக்கிறது. இதை அமைச்சர் அவர்கள் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக நான் குறிப்பிட விரும்புவது, மின்சார ஊழியர்களுடைய குறைகளைப் பற்றி ஏற்கெனவே நம் சட்ட சபையில் பல சந்தர்ப்பங்களில் விவாதித்திருக்கிறோம். சில மாதங்களுக்கு முன்பு வேலை நிறுத்தம் செய்ய ஆயுத்தம் செய்தார்கள். அந்த வேலை நிறுத்தம் தவிர்க்கப்பட்டு, ஒரு கன்ஸிலியேஷன் கமிட்டி ஏற்படுத்தி அதனுடைய ரிப்போர்ட்டு சர்க்காருக்குச் சமர்ப்பிக்கப்பட்டு சர்க்காரிடத்திலேயிருக்கிறது. இருந்தும் அரசாங்கம் இடைக்கால நிவாரணமாக 4 ரூபாய்கள் கொடுத்தது. அந்த நிவாரணம் 6 மாதத்திற்கென்று கொடுக்கப்பட்டது. அதன் பிறகு 6 மாதம் என்பதை $1\frac{1}{2}$ மாதம் அதிகப்படுத்தி அதைக் கொடுத்தது. இப்போது இந்த 4 ரூபாய் இடைக்கால சலுகை இருக்கிறதா என்று தெரியவில்லை. இடைக்காலச் சலுகை என்றால் கடைசி முடிவு வரும் வரையில் தொடர்ந்து கொடுப்பது தான் சரி, அதை விட்டு $7\frac{1}{2}$ மாதம் கொடுத்து விட்டு நிறுத்தி விடுவது ஏன் என்பதைப் பற்றி எனக்கு ஒன்றும் புரியவில்லை.

இந்தத் தமிழ் நாட்டை பொருத்தவரையில் இவ்வளவு நல்ல முறையில் முன்னேறி இருக்கிறது என்றால், அதற்கு உதவிகரமாக இருந்தவர்கள் மின்சார இலாகா தொழிலாளர்களும், அந்த இலாகா என்ஜினியர்களும் தான். அவர்கள் மத்தியிலே குறைபாடுகள் இருக்கின்றன என்று சபையில் உள்ள அத்தனை பேரும் அறிவார்கள். அதை நிவர்த்திப்பதற்கு நீண்டகாலமாக்குவது எந்த விதத்திலும் நியாயமில்லை. **Negotiating Committee** யானது அறிக்கையை சர்க்காருக்குச் சமர்ப்பித்திருந்தாலும், அந்த அறிக்கை முழுவதையும் அரசாங்கம் ஏற்றுக்கொள்கிறதா என்பதைப் 1 p.m
புரிந்துகொள்ள முடியவில்லை. நல்ல முறையில் வேலை செய்கின்ற இந்த ஊழியர்களின் குறைகளைப் போக்குவதற்கு அந்தச் சிபார்சுகள் எல்லாவற்றையும் அரசாங்கம் ஒத்துக்கொள்ளவேண்டும்.

[Sri M. P. Subramaniam] [1st November 1958

மின்சாரத் துறையில் தெரு விளக்குகள் போடுவதுதான் முக்கியமென்று கருதாமல், தொழில் துறையில் அக்கரை காட்ட வேண்டும். இன்னும் பல மின்சாரத் திட்டங்களுக்கு வாய்ப்புகள் இருக்கின்றன என்று கனம் அமைச்சர் அவர்கள் பேச்சிலிருந்து தெரிகிறது. மேலும் மேலும் மின்சார சக்தி வேண்டுமென்று சொல்லுகின்ற நமக்கு நெய்வேலித் திட்டமும், குந்தாத் திட்டமும் முடிவடைந்தாலும் தேவைகள் பெருகிக்கொண்டே போகும். ஆகவே புதிய திட்டங்களை எடுத்துக்கொள்வதில் நமது சர்க்கார் மேலும் அக்கரை காட்டவேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏறக்குறைய மூன்றில் ஒரு பகுதிப் பணம் மின்சாரத் திட்டங்களுக்காக ஒதுக்கப்பட்டிருப்பதாகச் சொன்னார்கள். இது போதாதோ என்று எண்ணி, வேறு பல துறைகளில் சுமார் 6 கோடி ரூபாய் மிச்சமாகலாம். அதையும் இதிலே சேர்த்து செலவு செய்யப்படலாமென்று சொன்னார்கள். அதே நேரத்தில் இந்த 6 கோடி ரூபாய் வேறு துறைகளில் செலவழிக்கப்படாமல் இங்கே சேர்த்துக் கொள்வது தவறு என்று சில நண்பர்கள் சுட்டிக் காட்டினார்கள். அதை நான் ஆமோதிக்கிறேன். ஒரு இடத்தை வெட்டி, மற்றொரு இடத்திலே ஒட்டுவது நமது மாகாணத்தைப் பொறுத்த வரையில் பலனை அளிக்காது. பொதுவாக, பல திட்டங்களுக்குப் பணம் போதவில்லை என்ற குறையைப் பல சந்தர்ப்பங்களில் எடுத்துச் சொல்லியிருக்கிறோம். எந்தக் காரணத்தால் அந்தத் துறைகளுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் பணத்தைச் செலவழிக்க முடியவில்லை என்பதை இந்த அவையிலுள்ளவர்களுக்கு அறிவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* SRI M. R. KANDASWAMI MUDALIYAR : தலைவர் அவர்களே, இப்பொழுது இங்கே கொண்டு வந்திருக்கும் மின்சார போர்டின் வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது நம்முடைய மாகாணத்தைக் பொறுத்த வரையில் மற்றத் துறைகளில் சில குறைபாடுகள் இருந்தாலும், மின்சாரத் துறையைப் பொறுத்த வரையில், நம்முடைய ராஜ்யம் இந்தியா தேசத்திலேயே, எல்லா மாகாணங்களையும் விட தலை நிமிர்ந்து பெருமைப்படத் தக்க வகையில் இந்தத் துறையில் விவசாய அபிவிருத்திக்கும், தொழில் அபிவிருத்திக்கும் உகந்த வகையில் சீரும் சிறப்புமாக முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. அந்த முறையிலே முன்னேற்றம் அடைந்த துறையையும் முன்னேற்றம் அடையவில்லை என்று யாரும் குறை கூறமாட்டார்கள் என்று நினைக்கிறேன். இது நாம் பெருமைப்படக் கூடிய ஒரு விஷயம். 1959-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் மின்சார சக்தியானது 391,500 கிலோவாட்ஸாகி இருக்கும் என்று சொன்னால், அது உண்மையிலேயே நாம் பெருமைப்படவேண்டிய விஷயம். நமது மின்சார அமைச்சர் அவர்கள் இதிலே ரொம்பவும் அக்கரையும், கவனமும் செலுத்தி, தீர்க்க தரிசனத்தோடு வேலை செய்த தன் காரணமாகத் தான் இவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறோம் என்பதை யாரும் மறுக்க முடியாது. இரண்டாவது ஐந்தாண்டு திட்ட மின்சார வேலைகளுக்காக ஏறத்தாழ 55 கோடி ரூபாய் ஒதுக்கி வைத்திருக்கிறோம். மின்சார சக்தி உற்பத்தியின் அளவைக் கணக்கிட்டால், கிட்டத்தட்ட 285,000 கிலோவாட்ஸ் சக்தி அதிக உற்பத்தியாக்குவதற்கு திட்டங்கள் தயாரிக்கப்பட்டிருக்கிறன. பெரியாறு திட்டத்தின் மூலம் 105,000 கிலோவாட்ஸும், குந்தாத் திட்டத்தின் மூலம் 180,000 கிலோவாட்ஸும் கிடைக்குமென்று எதிர்ப்பார்க்கப்படுகிறது. இவை இரண்டும் பெரிய அளவிலே நிறைவேற்றப்படும் திட்டங்கள். இந்தத் திட்டங்களும், மற்றச் சிறு திட்டங்களும் பூர்த்தியாகி, அவைகளிலிருந்து மின்சார சக்தி கிடைக்கக்கூடிய காலத்திலே நம்முடைய குறைகள் நீங்கிவிடும் என்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். ஆகவே, இந்தத் துறையில் நல்ல கவனம் செலுத்தி நமது ராஜ்யத்தைச் சீரும் சிறப்புமாக முன்னேற்றமடையச் செய்ததற்காக கனம் மின்சார அமைச்சர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு, அவர்களைப் பாராட்ட நாம் கடமைப்பட்டிருக்கிறோம். எவ்வளவோ பொருள் கஷ்ட நிலையில் நாம் இருந்தாலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தின் முதல் இரண்டு வருஷங்களுக்குள்ளேயே 3,005 மைல் நீளத்திற்கு உயர்ந்த டென்ஷன் லைன்களையும், 4,973 மைல்களுக்கு குறைந்த

1st November 1958] [Sri M. R. Kandaswami Mudaliyar]

டென்ஷன் லைன்களையும் போட்டிருப்பதன் நோக்கம் எல்லா கிராமங்களுக்கும் மின்சார வசதி செய்து கொடுத்து, விவசாயத் துறையிலும், தொழில் துறையிலும் நாம் அதிக முன்னேற்றத்தை அடையவேண்டுமென்பதற்காகத்தான். அந்த நோக்கத்துடன் இந்த வேலைகளை எல்லாம் செய்தாலும், உடனடியாக எல்லாக் குறைகளையும் நீக்க முடியாத நிலையிலிருக்கிறோம் என்பதை நாம் உணருகிறோம். நம்முடைய நாட்டின் செல்வ நிலை எவ்வளவுக்கு உயர்ந்திருக்கிறதோ, பொருளாதாரத் துறையில் நாம் எந்த அளவுக்கு முன்னேறியிருக்கிறோமோ, அந்த அளவுக்குத்தான் நாம் அபிவிருத்தி அடையமுடியும். எல்லாக் கஷ்டங்களையும் ஒரே நொடியில் போக்கி விடமுடியாது என்பதை நாம் உணர்ந்திருக்கிறோம்.

அதே நேரத்தில் சில விஷயங்களை பல அங்கத்தினர்கள் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். சிலவற்றை நானும் வலியுறுத்த விரும்புகிறேன். நம்முடைய மாகாணத்தை எடுத்துக்கொண்டால் மிகவும் பின்தங்கிய ஜில்லாக்கள் பல இருக்கின்றன. அந்த ஜில்லாக்களில் ஏராளமான பகுதி வானம் பார்த்த பூமியாக இருக்கிறது. கிணறுகளிலிருந்து இறைத்து சாகுபடி செய்து ஜீவனம் செய்யக்கூடிய விவசாயிகள் நிறைந்த பிரதேசம். அந்தப் பிரதேசங்களில் இருக்கக்கூடியவர்கள் அதிகவிலை கொடுத்து மாடுகள் வாங்கக்கூடிய நிலையில் இல்லாத காரணத்தால் மின்சார வசதி செய்து கொடுத்தால் ஓரளவுக்கு விவசாயத்தை பெருக்க முடியும் என்று நினைத்து, மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டார்கள். பம்பு செட்டுகளையும், மோட்டார்களையும் வாங்கி வைத்து உபயோகப்படுத்தி வருகிறார்கள். இப்படிப் பெரும்பாலான கிராமங்களிலே இவைகளை வைத்து விவசாயம் செய்கின்ற நேரத்தில், பருவ மழை தவறியதன் காரணமாக, சென்ற ஆண்டிலும் சரி, இந்த ஆண்டிலும் சரி, மினிமம் சார்ஜ் கட்டுவதற்குக் கூட மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் மிகவும் வசதியற்றவர்களாக இருக்கிறார்கள். மாட்டை வைத்துக்கொண்டு விவசாயம் செய்வதில் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. 500 ரூபாய் போட்டு ஒரு ஜதை மாடு வாங்கினால், அவைகளுக்கு ஒரு சிறிய சீக்கு வந்து இறந்து போய் விட்டால், விவசாயியின் வாழ்வையே பாதிக்கக்கூடியதாக இருப்பதனால், 10 அல்லது 20 ரூபாய் அதிகமானாலும் கூட, ஒரு ஹார்ஸ் பவருக்கு 50 ரூபாயாக இருந்தாலும் கூட, பம்பு செட்டுகள் வாங்கி வைத்து பயிர் செய்கிறார்கள். மூன்று எக்கரா நிலம் வைத்திருப்பவன் ஒரு 5 ஹார்ஸ் பவர் மோட்டாரை வாங்கி வைத்துக்கொண்டு, பருவ மழையை நம்பி பயிர் செய்கிறான். ஆனால் சரியான மழை இல்லாததால், விளைச்சல் இல்லை. தீய்ந்துபோய்விட்டது. போட்ட முதலைக்கூட எடுக்க முடியாமல் சாப்பாட்டிற்கு மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அந்த நிலையில் மின்சாரத்திற்காக 250 ரூபாய் கட்ட வேண்டுமென்று சொல்லும்பொழுது, அவர்கள் வாழ்க்கைத் தரமே பாதிக்கப்படுகிறது. கரண்ட் சார்ஜ் கட்டுவதற்காக மற்ற பொருள்களை அவர்கள் விற்று கட்ட வேண்டியிருக்கிறது. கனம் அமைச்சர் அவர்கள் இப்பேர்ப்பட்ட விவசாயிகளின் நிலைமையை நன்கு உணர்ந்தவர்கள். அவர்களுக்குத் தெரியாத விஷயம் இல்லை. விவசாயம் அபிவிருத்தி அடைய வேண்டும், விவசாயிகள் முன்னேற வேண்டும், விவசாயத் தொழிலினால் நமது நாடு முன்னேற்றம் அடையவேண்டும் என்பதில் யாருக்கும் கருத்து மாறுபாடு இருக்க முடியாது. உணவுப் பற்றுக்குறையைப் போக்குவதற்காக, உற்பத்தி பெருக வேண்டுமென்ற முறையில், விவசாயப் பண்ணைகளை வைத்து நல்ல விதைகளைக் கொடுத்தும் இன்னும் விவசாய அபிவிருத்திக்காகப் பல கோடி ரூபாய்களை நாம் செலவழித்துக்கொண்டும் வருகிறோம். விவசாயிகளின் வாழ்க்கைத்தரம் உயர வேண்டும் என்று சொல்லுகிற காலத்திலே நாம் இன்னொரு விஷயத்தையும் சிந்தனை செய்து பார்க்கவேண்டும். சேலம் ஜில்லாவிலே கனம் அமைச்சர் அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்பொழுது, அந்தப் பகுதிகளையெல்லாம் அவர்களுக்குக் காட்டி மினிமம் சார்ஜை குறைக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறோம். அது இன்னும் அமுலுக்கு வரவில்லையாதலால், இப்பொழுது மீண்டும் பணிவோடு வற்புறுத்த விரும்புகிறேன். மற்ற ஜில்லாக்களைக் காட்டிலும் சேலம் ஜில்லாவானது மிகவும் வறண்ட

[Sri M. R. Kandaswami Mudaliyar] [1st November 1958

பிரதேசம். மத்திய சர்க்கார் மந்திரிகள் அங்கே சுற்றுப்பிரயாணம் செய்யும்பொழுதும் பார்வையிட்டார்கள். ராசிபுரம் போன்ற பகுதிகளில் மலைக் காடுகளிலும் மலைகளின் மீதும் உழைத்து, பயிர்செய்து ஜீவித்திருக்கக்கூடிய
1–10 p.m. நிலையில் அங்கேயுள்ளவர்கள் இருக்கிறார்கள். எவ்வளவோ அக்கரையும், ஊக்கமும் காட்டி, மிகவும் கடுமையாக உழைத்து நமது நாட்டிற்கே ஒரு நல்ல பெயரைச் சம்பாதித்துத் தரக்கூடிய வகையில் வேலை செய்கிறார்கள். விவசாயிகள் இந்த நிலைமையிலே இந்த மினிமம் சார்ஜை கொடுப்பதற்கு மிகவும் கஷ்டப்படுகிறார்கள். உணவு உற்பத்திக்காக எவ்வளவோ கோடி ரூபாய் செலவழிக்கிறோம். அதுபோலவே, இறைதது ஜீவனம் செய்யக் கூடிய விவசாயிகளின் நன்மைக்காக நமது அமைச்சர் இன்னும் கொஞ்சம் செலவழிக்க முன் வரவேண்டும். 10 சத விகிதம் வரக்கூடிய அளவு வைத்துத்தான் திட்டங்கள் நிறைவேற்றுகிறோம், எஸ்டிமேட்களை தயாரிக்கிறோம் என்று சொன்னார்கள். இந்த 10 சத விகிதம் லாபம் வர வேண்டும், வட்டி கட்ட வேண்டும் என்று கணக்குப்போடும் எண்ணத்தைக் கூட அமைச்சர் அவர்கள் விட்டு விட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். உணவு உற்பத்திக்காக, உரம், பொறுக்குவிதை முதலியவைகளை சப்ளை செய்ய கோடிக்கணக்கான ரூபாய் அரசாங்கம் செலவழிக்கிறது. அதேநேரத்தில் உணவு உற்பத்தியில் முக்கியமான பங்கு எடுத்துக்கொள்ளக்கூடிய விவசாயிகளின் கஷ்டத்தை கொஞ்சம் ஆலோசனை செய்து பார்க்கவேண்டும். பத்து வருஷத்திற்குக் காரண்டி என்பதற்குப் பதிலாக, 20 வருஷங்களாக ஆக்கிக்கொள்ளலாம். ஒரு ஹார்ஸ் பவருக்கு 50 ரூபாய்க்குப் பதிலாக 25 ரூபாய் ஆக்கினால், அரசாங்கத்திற்கும் நஷ்டம் இருக்காது. வேண்டுமானால் அந்த வட்டியைக் கூட்டிப் போட்டுக்கொண்டால் கூட விசாயிகள் கொடுப்பதற்கு தயாராக இருக்கிறார்கள். அரசாங்கத்திற்கு நஷ்டமில்லாத முறையில் இந்தத் திட்டத்தைத் தளர்த்தினால், விவசாயிகளுக்கும் சுலபமாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

அதோடுகூட, எங்களுடைய சேலம் ஜில்லாவில் கிணறுகள் இரண்டு ஆண்டுகளாக வரண்டு போயிருக்கிறது. ஒரு மணி நேரத்திற்குக்கூட தண்ணீர் வரவில்லை. ஒரு மணி நேரத்திற்கு தண்ணீர் இறைத்தால் கால் ஏக்கர்கூட சாகுபடி செய்யமுடியவில்லை. இதில் விவசாயிகள் தாங்களும் ஜீவித்து, பண்ணையாட்களுக்கும் கொடுத்து, இந்த சார்ஜ்ஜையும் கட்டவேண்டுமென்று சொன்னால், விவசாயத்தையே விட்டுவிட வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. இந்த மினிமம் சார்ஜை குறைப்பது மிகவும் அவசியம். எட்டு மணி நேரத்திற்கு லைசென்ஸ் இருக்கிறது. ஆனால் ஒரு மணி நேரத்திற்குத்தான் தண்ணீர் இருக்கிறது, மழை இல்லாத காரணத்தினால். இந்த நிலைமையில் அவர்கள் தண்ணீர் இறைத்து பயிர்செய்துகொண்டு, இந்த சார்ஜை எப்படி கொடுக்க முடியும்? எத்தனை அளவு மின்சாரம் விவசாயி உபயோகப்படுத்திக்கொண்டானோ, அதற்குள்ள சார்ஜை மாத்திரம் அரசாங்கம் வசூலித்தால் ரொம்பவும் சௌகரியமாக இருக்கும். விவசாயிகள் வைத்திருக்கக்கூடிய நிலத்திற்கு எவ்வளவு கரண்டு செலவாகிறதோ, அதற்கு ஒரு ரேட் போட்டு, அந்த ரேட்டை கட்டவேண்டுமென்று சொன்னால், விவசாயிகள் மிகமிக சந்தோஷப்படுவார்கள். நமது சர்க்காரைப் பாராட்டி பெருமைப்படுவார்கள்.

தொழில் துறையில் எடுத்துக்கொள்ளுவோமானால், அல்லது கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களையோ, ரெயில்வே, போஸ்டு ஆபீஸ் உத்தியோகஸ்தர்களையோ எடுத்துக்கொண்டால், அவர்களுக்கு மாதம் ஒன்றுக்கு 150, 200, 75, 80-க்கு குறையாமல் ஊதியம் கிடைக்கிறது. அவர்களுக்கெல்லாம் 8 மணி நேரம்தான் வேலை என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் விவசாயிகள் தினசரி 12 மணி நேரம், 18 மணி நேரம் வேலை செய்யவேண்டியிருக்கிறது. ஆனால் அதற்கு அவன் அனுபவிக்கும் சுகம் என்ன? லாபம் என்ன? தினசரி 8 அணு, 10 அணு கூட கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு நாட்டு நிலைமையில் அக்கரைகொண்டு அவர்கள் கஷ்டப்பட்டு ஜீவிக்கிறார்கள். அதற்காக நாட்டு விசுவாசத்தை, நாட்டுப் பற்றை விட்டு விட்டு விவசாயத்திலிருந்து சென்று விடவில்லை. அவர்கள் தொழில் துறையிலோ அல்லது மற்ற துறையிலோ

1st November 1958] [Sri M. R. Kandaswami Mudaliyar]

தொழிலாளிகளுக்கு கிடைக்கக்கூடிய வருமானத்தைப்பற்றிச் சற்றுக்கூட கவனிக்காமல், தான் உண்டு, தன் தொழில் உண்டு என்று இருக்கக்கூடிய அளவிலே, வருகிற வருவாயை வைத்துக்கொண்டு கஷ்டப்பட்டு ஜீவித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த நிலைமையில் அவர்களை நாம் விட்டு வைத்திருப்பது சரியல்ல. உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டும், விலையைக் கட்டுப்படுத்த வேண்டுமென்று சொல்லுகிறார்கள். நான் மனப்பூர்வமாகச் சொல்லுகிறேன். மற்றவர்களுக்கு 80, 70 ரூபாய் சம்பளம் நிரந்தரமாக வரும்பொழுது, படிக்கு 1 அணா, 2 அணா விலை ஏறிவிட்டால், அவர்கள் ஒரே கூச்சல் போடுகிறார்கள் விலையைக் குறைக்கவேண்டுமென்று. ஆனால் விவசாயத்திற்கு வேண்டிய கவலைத்தோல், கடப்பாறை, மண்வெட்டி போன்ற பொருள்களின் விலை ஏறினால், அதுபற்றி யாரும் கவலைப்படுவதில்லை. இரண்டு ரூபாய், 4 ரூபாய் விலை அதிகமானாலும்கூட, விலையைக் குறைப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுப்பதில்லை. விவசாயிகள் உபயோகப்படுத்தக்கூடிய இம்மாதிரிப் பொருள்களுக்கு விலை நிர்ணயம் செய்யாதவரையில், தானியத்திற்கும் விலை நிர்ணயம் செய்வது கூடாது. இதனால் உணவு உற்பத்தி பாதிக்கப்படும். ஏனென்றால் விவசாயத்தில் இருக்கக்கூடிய தொழிலாளிகளுக்கு இப்பொழுது அதிக லாபம் வருவதில்லை. தங்களுடைய ஜீவனத்திற்கே தங்களுக்குக் கிடைக்கும் ஊதியம் போதவில்லை என்ற காரணத்தினால், அவர்கள் டவுன் ஏரியாவுக்குச் சென்று நல்ல ஒரு தொழிலில் அமர்ந்து, சினிமா முதலிய காட்சிகளை பார்த்துக்கொண்டு நாகரிகமான வாழ்க்கையை நடத்தும் அளவிலே போய்க் கொண்டிருக்கிறார்கள். கிராம மக்களில் பெரும்பகுதியாக உள்ள விவசாய மக்கள் பெரிய டவுன்களுக்கு இப்பொழுது ஓடிக்கொண்டிருக்கிறார்கள். இது அங்கத்தினர்களுக்கு நன்றாகத் தெரியும். காரணம் என்ன ? டவுனுக்குப் போனால் சுலபமான தொழிலில் ஈடுபட்டு 100, 200 ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டு நாகரிகமான வாழ்க்கை நடத்தலாம் என்று நினைக்கிறார்கள். ஆகவே, கடும் உழைப்புடன் குறைந்த வருவாய் பெறக் கூடிய விவசாயிகளுக்கு, இந்த மினிமம் சார்ஜை ரத்து செய்யவேண்டும். இதனால் 5 கோடி ரூபாய், 10 கோடி ரூபாய் நஷ்டம் வந்தாலும் பரவாயில்லை. அதனால் விவசாயிகளுக்கு பெரிய உதவியாக இருக்கும். கண்டிப்பாக மினிமம் சார்ஜை எடுத்துவிடவேண்டுமென்று பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன். இப்படிச் செய்வதன் மூலம் விவசாயிகள் தங்களுடைய தொழிலை ஊக்கத்துடன் செய்வதற்கு ஹேதுவாக இருக்கும். இதற்கான காரியங்களை அமைச்சர் அவர்கள் செய்வார்கள் என்று மிகவும் உறுதியாக நம்புகிறேன்.

அடுத்தபடியாக, மின்சாரத்துறையில் வேலை செய்யக்கூடியவர்களுக்குக் கூலியை உயர்த்த வேண்டுமென்று சொல்லுகிறார்கள். அதனால் தொழிலாளர்களுக்கு கொடுக்கக்கூடிய கூலியை உயர்த்துவதை நான் எதிர்க்கிறேன் என்று அர்த்தமில்லை. தொழில் துறையில் இருக்கக்கூடியவர்களுக்கும், அரசாங்கத்தில் வேலை செய்யக்கூடியவர்களுக்கும் கூலி உயர்வு கொடுத்துக்கொண்டேபோய், அந்தக் கூலி அனைத்தையும் வரிப்பணமாகக் கொடுக்கக்கூடிய விவசாயியை மறந்துவிடக்கூடாது. ஒவ்வொரு அங்கத்தினருக்கும் இதிலே பொறுப்பு உண்டு. நம் மாகாணம் முன்னேற்றம் அடைய வேண்டுமென்றால், ஒவ்வொரு அங்கத்தினருக்கும் இதில் பங்கு உண்டு, பொறுப்புஉண்டு. ஒரு பக்கத்தில் கட்சி நலனுக்காக கூலி உயர்வு வேண்டுமென்று தொழிலாளர்களைத் தூண்டிவிடுவது சுலபம். ஆனால், பின்பு நிலைமையை சமாளித்து ஆத்திரம் ஏற்படாமல் அமைதியை உண்டுபண்ணுவது கஷ்டம். மாகாணத்திலுள்ள பொருளாதார நிலைமையை உணர்ந்து, அதை அனுசரித்து, தொழிலாளர்கள் கிளர்ச்சி செய்யக்கூடிய நேரத்தில் சட்டசபை அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் நியாயத்தை எடுத்துத் தொழிலாளர்களுக்குச் சொல்லவேண்டும். " உங்களை விடக் குறைந்த ஊதியத்தை வைத்துக்கொண்டு ஜீவனம் செய்யக்கூடிய மக்கள் பல கோடி பேர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய வாழ்க்கைத் தரம் சற்று உயரும் வரையில், உங்களுக்கு இப்பொது கிடைக்கக்கூடிய வருவாயை வைத்துக் கொண்டு சமாளிக்கவேண்டும். கொஞ்சம் பொறுத்துக்கொள்ளுங்கள் "

[Sri M. R. Kandaswami Mudaliyar] [1st November 1958

என்று ஆறுதல் சொல்லவேண்டும். அதை விட்டு அவர்களைத் தூண்டி விட்டுக் கிளர்ச்சியை உண்டுபண்ணி குழப்பத்தை ஏற்படுத்தக்கூடாது என்று பணிவன்புடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

வீடுகளுக்கு மின்சாரம் கொடுப்பதில் சில குறைகள் இருக்கின்றன. சிப்பந்திகளுடையதும், அதிகாரிகளுடைய குறைகளையும், அமைச்சர் அவர்களின் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். அவைகளைச் சீக்கிரம் கவனித்து நிவர்த்தி செய்வார்கள் என்று நினைக்கிறேன். வீடுகளுக்கு "வைரிங்" போட்டு வைத்திருந்தாலும் "கனெக்ஷன்" கொடுக்கப்பட வில்லை. பணம் கட்டி, அப்ளிகேஷன் போட்டு 6 மாதங்கள் 7 மாதங்கள் ஆகியும்கூட அதிகாரிகளுடைய கவனக் குறைவால் கனெக்ஷன் கொடுக்கப்படவில்லை. இதனால் அரசாங்கத்திற்கும் நஷ்டம் ஏற்படுகிறது. ஆறு மாதங்களுக்கு எலெக்டிரிஸிடியை உபயோகப்படுத்தியிருந்தால், அதனால் அரசாங்கத்திற்கு வருமானம் வந்திருக்கும். அதிகாரிகள் கவனக்குறைவால் வருமானம் கிடைக்கக்கூடாத நிலைமையில் இருந்துகொண்டு வருகிறது. இதை அமைச்சர் அவர்கள் உடனடியாகக் கவனித்து, வீடுகளுக்கு "வைரிங்" போட்டு முடிந்தவுடன் கனெக்ஷன் கொடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

உதாரணமாகச் சொல்லுகிறேன், சேலம் தாலூகாவில் ஆட்டையாம் பட்டியில் பஞ்சாயத்து போர்டில் வீட்டு நெம்பருக்கு அத்தாட்சி வாங்கி அனுப்பவேண்டுமென்று சொன்னார்கள். மூன்று மாதத்திற்குப் பிறகு இப்பொழுது மறுபடியும் கிராம முன்சீப் அத்தாட்சி வாங்கி அனுப்ப வேண்டுமென்று, அந்தப் பேப்பரை திருப்பி அனுப்பியிருக்கிறார்கள். இந்த சிறு தவறுதலினால் அரசாங்கத்திற்கு நஷ்டம் ஏற்படுகிறது. இதனால் மற்ற தொழிலாளர்களுக்குக் கஷ்டம் உண்டுபண்ணக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. இதை அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்

அதுபோக, இரவு காலத்தில் விவசாயிகள் தண்ணீர் இறைப்பதற்காகக் கரண்டு எடுத்துக்கொள்வதில் உள்ள கஷ்டத்தைப்பற்றி இரண்டு முறை சீப் என்ஜினியரிடம் சொன்னோம். இரவு காலத்தில் கரண்ட் எடுத்துக்கொள்வதில் விவசாயிகளுக்கு மிகவும் கஷ்டம் இருக்கிறது.

1 20 p.m. தொழில் துறையில் இருக்கக்கூடியவர்களும், ரைஸ் மில் வைத்துக் கொண்டிருக்கக்கூடியவர்களும் மின்சாரத்தை உபயோகித்துக்கொண்டு விசைகளைப் பகலில் ஓட்டுகிறார்கள். ரைஸ் மில்லில் ஏன் இரவு நேரங்களில் ஓட்ட உத்திரவிடக்கூடாது? ஆனால் விவசாயிகளுக்கு விவசாயத்திற்கு இரவு நேரத்தில் கொடுக்கிறார்கள்? விவசாயம் செய்வதற்கு காட்டில் சென்று விளக்குகள் இல்லாத இடங்களில் இருந்து கொண்டு வேலை செய்ய வேண்டியதாக இருக்கிறது. விளக்கு இல்லாத இடங்களில் இருந்து கொண்டு தண்ணீர் பாய்ச்ச வேண்டியதாக இருக்கிறது. அப்படி எவ்விதம் தண்ணீர் பாய்ச்ச முடியும் என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும் என்று கேட்கிறேன். மற்ற இடங்களில் அப்படி இரவில் வேலை செய்ய முடியுமா அல்லது காடுகளில் அப்படி வேலை செய்ய முடியுமா என்பதைப் புரிந்து கொண்டு பார்க்கவேண்டும். இதைப்பற்றி பெரிய அதிகாரிகள்கூட சற்று யோசனை செய்து பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இவைகளைப் பார்த்தால் விவசாயிகள் பல கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியதாக இருக்கிறது. மற்ற வேலைகளையெல்லாம் தள்ளிப்போடலாம். ஆனால் விவசாயிகளுடைய வேலையை தள்ளிப் போட முடியாது. ஒரு சமயம் நாற்றை பிடுங்கி வைத்து விட்டால் அதை 24 மணி நேரத்திற்குள் நட்டு விடவேண்டும். இல்லா விட்டால் அதற்குள் அது காய்ந்து போய் நாசமாகப் போய்விடும். அதன் மூலம் விவசாயி அதிகப்படியான கஷ்ட நஷ்டத்திற்கு உள்ளாக வேண்டியதாக இருக்கும். மின்சாரம் கொடுப்பதில் டிலே பண்ணுவதால் அவர்கள் பெரிய நஷ்டத்திற்கு உள்ளாகிறார்கள். ஆகவே இரவு காலங்களில் விவசாயத்திற்கு தண்ணீர் கொடுப்பதை நிறுத்தி வைத்து விட்டு அவர்களுக்கு பகல் நேரங்களில் கொடுக்க முன்வர வேண்டும். எல்லா இடங்களையும் தஞ்சை

ஜில்லா என்று கருதக்கூடாது. தஞ்சை ஜில்லாவில் எங்கேயாவது மடையைத் திறந்து விட்டால் தண்ணீர் பாய்ந்து விடுவது போல் மற்ற ஜில்லாக்களில் இல்லை. இரவு நேரங்களில் வயல்களில் வேலை செய்வதால் பாம்பு, பல்லி முதலியவைகளுக்கு ஈடுபட வேண்டியதாக இருக்கிறது. சில இடங்களில் கரும்புத் தோட்டத்திற்குள் போய் தண்ணீர் பாய்ச்ச வேண்டியதாக இருக்கிறது. அது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. ஆகவே மின்சார சப்ளையில் வெட்டு ஏற்பட்டால் அந்த வெட்டினால் பாதிக்கப்படுகிறவர்கள் விவசாயிகள் என்று இருக்கக்கூடாது. மற்றவர்களுக்கும் அந்த வெட்டைக் கொடுக்கலாம். அந்த வெட்டை அவர்களால்தான் தாங்கமுடியும். அது விவசாயிகளுக்கு இருக்கக்கூடாது என்பதை வலியுறுத்த விரும்புகிறேன்.

இப்பொழுது முன்னேற்றமடைந்திருப்பதைக் கண்டு மந்திரி அவர்கள் எல்லோராலும் போற்றக்கூடிய அளவில் இருக்கிறார். இன்னும் விவசாயிகளுடைய குறைகளை நிவர்த்திக்கக்கூடிய அளவில் கனம் அமைச்சர் இருந்தால் இன்னும் போற்றக்கூடியவராக இருப்பார். நாடு முன்னேற்றமடைவதற்கு அவர்கள் எவ்வளவோ கஷ்டமும் கவலையும் பட்டுக்கொண்டிருக்கிறார்கள். விவசாயிகள் தங்களுடைய சக்தி பூராவையும் உணவு உற்பத்தியில் செலுத்துவதற்கும் தயாராக இருக்கிறார்கள். ஆனால் நிர்வாகத்தின் தயக்கத்தினால் அவர்களால் உற்பத்தியைப் பெருக்க முடியவில்லை. அவர்கள் எதைச் செய்யச் சொன்னாலும் செய்யத் தாயாராக இருக்கிறார்கள். ஏனென்றால் விவசாயிகள்தான் இந்நாட்டின் முதுகெலும்பு. அதனால் அவர்களுக்கு மினிமம் சார்ஜை 25-க்குக் குறைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மற்றும் பத்து வருஷம் என்று இருப்பதை இருபது வருஷங்களுக்கு நீடித்துக்கொடுக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இதில் கனம் அமைச்சர் அவர்கள் ஈடுபட்டு அவர்களுக்கு வேண்டியதைச் செய்யவேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன். நம் மாகாணம் எல்லாத் துறையிலும், அதிலும் மின் சாரத் துறையில் முற்போக்காக இருப்பதைக் கண்டு நான் கனம் அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். தொழில் துறையிலும் நம் மாகாணம் முன்னேற்றமடைந்திருக்கிறது. அது கண்கூடாக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொண்டு கனம் மந்திரி அவர்களைப் பாராட்டிக்கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri A. VEDARATHNAM** : கனம் துணைத் தலைவர் அவர்களே, நம்முடையமாநில மந்திரி சபையிலேயே எல்லோருக்கும் இளைஞராக இருக்கக் கூடியவர் நம்முடைய மின்சார இலாகா மந்திரி அவர்கள். இப்பொழுதுதான் முதல் முதலாக இவர்கள் இந்த சபையில் பதவி ஏற்றிருக்கிறார்கள். எனினும் இந்தியாவிலேயே மற்ற மாகாணங்களைக் காட்டிலும் முதன்மை ஸ்தானம் அவர்கள் ஏற்றிருக்கும் இலாகாவின் மூலமாக அடைந்திருக்கிறார். முதன் முறையிலேயே அவர்கள் இவ்வளவு திறமையாக அந்தப் பணியை ஆற்ற முடியும் என்றால் அடுத்த தடவை அவருக்கு மந்திரி சபையில் பதவி வாய்ப்பு கிடைத்தால் அவர்கள் என்ன செய்வார்களோ என்பது எனக்குத் தெரியாது. (சிரிப்பு.)

மின்சார அபிவிருத்தி நம்முடைய கிராமங்களில் ஏராளமாக பரவி இருக்கிறது, பரவிக்கொண்டிருக்கிறது. தேவையும் அதைப்போலவே அதிகமாக ஆகிக்கொண்டிருக்கிறது. மின்சார அபிவிருத்தி ஒன்றில் மாத்திரம் நம்முடைய மாகாணம் முதன்மை ஸ்தானம் வகிக்கவில்லை. பம்பு இர்ரிகேஷன் லெவலில் ஒரு பெரிய விஸ்தீரணத்தை எடுத்துக்கொண்டு பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள் மின்சார சக்தியின் மூலமாக தண்ணீரை இறைத்து. பாய்ச்சுகிறது அந்த முறையில் நம்முடைய மாகாணத்தில் தண்ணீரை இறைத்து பாய்ச்சப்படுகிறது. நம்முடைய மாகாணத்தில்தான் இது முதல் முதலாக துவங்கி இருக்கிறது. பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதி மின்சார சக்தி மூலமாக கொடுக்கிறதும் முதன் முறையாக நம் மாகாணத்தில் பரீட்சிக்கப்பட்டு வெற்றி கண்டிருக்கிறோம்.

